உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

திருவெண்ணெய்நல்லூரில்

திருவவதாரங்கண்டருளிய,

சுவேதவனப்பெருமாளென்னும்பிள்ளைத்திருநாமமுடைய

மெய்கண்டசுவாமிகளருளிச்செய்த

# சிவஞானபோதமூலமும்

திருவாவடுதுறையாதீனம்

சிவஞானசுவாமிகளருளிச்செய்த

## சிற்றுரையும்.

இவை,

கோயமுத்தூர்ஜில்லா-சேயூர்-டிஸ்டிரிக்ட்முனிசிபு-ம-ா-ா-ஸ்ரீ

திரு-வெ-பொன்னுசாமிப்பிள்ளையவர்கள்,

நீலகிரிசமிசேரிடிப்டிமானேஜர்-ம-ா-ா-ஸ்ரீ-

கு-மீனாக்ஷிசுந்தரப்பிள்ளை யவர்கள்முதலிய

சிலசைவப்பிரபுக்களது வேண்டுகோளின்படி,

விபுதஜனகமலவனவிகர்த்தனராகிய

இராயவேலூர்

நாதமுனிசெட்டியாரவர்கள்

பலபிரதிருபங்களைக்கொண்டு பரிசோதித்துக்கொடுக்க,

ஸ்ரீபெரும்பூதூர்

பாபு-பாஷ்யமுதலியாரவர்களால்

சென்னபட்டணம்

வாணீநிகேதனவச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டன.

---

அக்ஷய ௵ சித்திரை ௴.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சிவஞானபோதச் சிற்றுரை.



கயிலாயபரம்பரையிற்சிவஞானபோதநெறிகாட்டும்வெண்ணெய்ப்...*
பயில்வாய்மைமெய்கண்டான் சந்ததிக்கோர்மெய்ஞ்ஞானபானுவாகிக்
குயிலாரும்பொழிற்றிருவாவடுதுறைவாழ் குருநமச்சிவாயதேவன்...*
சயிலாதிமரபுடையோன்றிருமரபு நீடூழிதழைக்கமாதோ ..........*

சைவாகமங்களி னுளவாகிய நாற்பாதங்களுண் ஞானபாதத்தோதிய பொருள்களையாராயுமாராய்ச்சி யிந்நூலின்க ணெடுத்துக்கொள்ளப்பட்டது. இதுகேட்ட லுறுவார்க்கிதனாற் போந்தபயன்யாதோவெனவுமிது கேட்டற்குரியார் யாவரெனவு மிதனா னுதலப்படும்பொருள்யாதெனவு மிதனைப் பயப்பிக்குங்கருவியா யிதற்குமுன்னொருதலையா னுணர்தற்பா லதியாதெனவு மிதனை வழங்குதற்கிட்ட பெயர்யாதெனவு மிஃதி யாண்டுவழங்குவதெனவு மிதன்முதனூல் யாதெனவு மிந்நூல்செய்தார் யாவரெனவும் பலவாற்றானு சங்கைநிகழுமன்றே யவ்வா சங்கைநீங்கி மனவெழுச்சி சேறற்பொருட் டிந்நூன்முகத்துரைக்கப்படுவதாகிய சிறப்புப்பாயிரம் "மலர்தலை - தலைமையோனே" எனவரும்.

## சூத்திரம்.

மலர்தலையுலகின் மாயிருடுமியப் ... ... *
பலர்புகழ்ஞாயிறு படரினல்லதைக் ... ...*
காண்டல்செல்லாக் கண்போலீண்டிய ... *
பெரும்பெயர்க்கடவுளிற் கண்டுகண்ணிருடீர்ந்*
தருந்துயர்க்குரம்பையி னான்மாநாடி ... ...*
மயர்வறநந்தி முனிகணத்தளித்த ... ... *
வுயர்சிவஞான போதமுரைத்தோன் ... ...*
பெண்ணைப்புனல்சூழ் வெண்ணெய்ச்சுவேதவனன்

பொய்கண்டகன்ற மெய்கண்டதேவன் ... *
பவநனிவன் பகைகடந்த ... ... ... ...*
தவரடிபுனைந்த தலைமையோனே ... ... *

(இ-ள்.) மலர்தலையுலகின் மாயிருடுமியப் பலர்புகழ்ஞாயிறுபடரினல்லதைக் காண்டல்செல்லாக்கண்போல்- எ-து - விரிந்தவிடத்தையுடைய ஞாலத்தின்கண்ணே துன்னியபெரிய புறவிருள்கெடும்படி பலசமயத்தாராலும் புகழப்படுகின்ற பரிதியங்கடவு ளுதயகிரியினின்றும் போந்தாலன்றிக் காட்சியெய்தமாட்டாத கண்ணொளிபோல-அருந்துயர்க் குரம்பையினன்மாநாடி-எ-து-பொறுத்தற்கரிய துயரங்களுக்கெல்லா மொருநிலைக்களமாய்ச் சத்ததாதுக்களாற் பொத்தியகுரம்பையாகிய காணப்பட்ட வுடம்பானே காணப்படாத வான்மாவையும் பரமான்மாவையு மனுமானவளவை யான்வைத்தாராய்ந் தவற்றது தடத்த விலக்கணமெனப்படும் பொதுவியல்புணர்ந்து-கண்ணிருடீர்ந்து-எ-து-அவ்வுணர்ச்சியானேகருதியுணரப்படுங் கருவிகளாகியவாணவமலத்தினின்றும் நீங்கி - ஈண்டியபெரும்பெயர்க் கடவுளிற்கண்டு- எ-து-அதுநீங்கியவழி யெல்லாநூல்களுந் தன்பொருளேயாகத் திண்டுகூடிய பெரும்பெயரெனப்படு மொருவார்த்தையாகிய மகாவாக்கியத்தா னெடுத்தோதப்படு முதற்கடவுளது திருவருளானே யப்பொருள்களது சொரூப விலக்கணமெனப்படுஞ் சிறப்பியல்பை யனுபூதியிற்கண்டுணர்ந்து-மயர்வற- எ-து - இம்முறையானே மயக்கவாசனையற்றுச் சிவானுபவம் பெறுதற்பொருட்டு - நந்திமுனி கணத்தளித்த- எ-து-சீகண்டதேவர்பாற் கேட்டருளிய நந்திப்பெருமான் சனற்குமாரமுனிவன்முதலிய முனிவர்கணங்கட்கு முறையானே யளித்தருளப்பட்ட-உயர்சிவஞானபோதம்- எ-து - சரியை முதலிய மூன்றுபாதப்பொருள்களை யாராயுநூல்களின் மேற்பட்ட சிவஞானபோதமென்னும் வடநூலை-உரைத்தோன் - எ-து-மொழிபெயர்த்துக்கூறிய வார்த்திகமெனப்படும் பொழிப்புரைசெய்தோன்-பெண்ணைப்புனல்சூழ் வெண்ணெய்ச்சுவேதவனன்-எ-து- பெண்ணையாற்றுநீராலே சூழப்பட்ட திருவெண்ணெய்நல்லூரி னவதரித்தருளிய சுவேதவனப்பெருமாளென்னும் பிள்ளைத்திருநாமமுடையான்- பொய்கண்டகன்ற மெய்கண்டதேவன்-எ-து-பொய்ச்சமயங்களின் பொருளிதுவிதுவென்று கண்டு கழிப்பித்தகாரணத்தாற் பெற்றமெய்கண்ட தேவனென்னுஞ் சிறப்புத் திருநாமமுடையான்-பவநனிவன்பகைகடிந்த. தவரடிபுனைந்த தலைமை

யோனே-எ-து-பிறவியாகிய மிக்க வலியபகையினைவென்றதவத்தோர் தனது திருவடியைப்புனைந்து கோடற் கேதுவாகிய தலைமைப்பாட்டினை யுடையோன்-எ-று.

படரிற்காண்டல் செல்லுங் கண்ணெனற் பாலதனை யெதிர்மறைமுகத்தாற் கூறினரின்றியமையாமை விளங்குதற்கு. பரிதிப்பொருள் பற்றிக் கண்மேல் வைத்துக் கூறினரோனு முபமேயப் பொருட் கேற்பக்காண்டல் சேறற்குப் படர்ந்த ஞாயிறுபோ லென்பது கருத்தாகக் கொள்க. இருட்கேட்டிற்கு நிருவிகற்பஞ் சவிகற்ப மென்னு மிருவகைக்காட்சிக்கு ஞாயிறின்றியமையாச் சிறப்பிற்றாய வாறுபோல, மலத்தீர்விற்கு மாராய்ச்சி யனுபூதி யென்னு மிருவகை யுணர்விற்கு மின்றியமையாச் சிறப்பிற்றாய திந்நூலென்பார், துமியப்படரி னல்லதைக்காண்டல் செல்லாக் கண்போனுடித் தீர்ந்து கண்டு மயர் வறவளித்த சிவஞான போதமென்றார். தலைமைபற்றி யருந்துயர்க் குரம்பையினென்றாரோனு மினம்பற்றிக் கரணம் புவனமுதலி யனவுமுடன் கொள்ளப்படும். அருந்துயர்க் குரம்பையினிடைப் படுவதாகிய பொதுவியல்பு முன்னாறு சூத்திரத்தானும், பெரும்பெயர்ப்பொருளிற் காணப்படுவதாகிய சிறப்பியல்பு பின்னாறு சூத்திரத்தானு மோதுப. நாடியெனவே யநுமான வளவையா னென்பதூஉம், கண்டெனவே யநுபூதியிலென்பதூஉம், தாமே போதரும். பொதுவியல்பு - அளவைமுகத்தானு மிலக்கண முகத்தானுங் கூறப்பட்டுக் கேட்டல், சிந்தித்தலென்னு மிருதிறத்தா னுணரப்படும். சிறப்பியல்பு - சாதகமுகத்தானும் பயன்முகத்தானுங் கூறப்பட்டுக் கேட்டல், சிந்தித்தல் தெளிதனிட்டையென்னு நான்கு திறத்தா னுணரப்படும். இஃதென் சொல்லிய வாறோவெனின், இவ்விருவகை யியல்பும் வேறு வேறு கூறு மாகமங்களின் பொருளொருமை யுணரமாட்டா தொரோ வொன்றே பற்றியைக்கவாதமுதற் பலதிறத்தான் வேறுபட்டுத் தம்முண் மாறுகொண்டு மயங்குவார்க் கங்ஙன மயங்காதவற்றின் பொருளொருமை யுணர்த்தற்கெழுந்த திந்நூலென்ற வாறாயிற்று. சிவஞான போதமென்பது உமிக்காரணத்தாற் பெற்ற பெயரென்பது வடமொழிச்சிவஞானபோதத் திறுதிச் சூத்திரத்தோதிய வாறுபற்றி யுணர்க. சரியை முதலிய மூன்று பாதப்பொருளை யாராயு நூல்களாவன - சோமசம்பு பத்ததி முதலாயின. அந்நூல்களின் மேற்பட்ட சிவஞானபோதமெனவே அந்நூல்களுணர்ந்த பின்ன ரிந்நூல் கேட்கற்பாற் றென்பது மெறப்பட்

து. படவே, முன்னர்த் திக்கையுற்றுச் சிவாகமங்களையோதி யதன் பி ன்னர்ச் சரியாபாத முதலியவற்றை யாராயு நூல்களை முறையே கே ட்டவ்வாறொழுகி மனந்தூயராய் நித்தியா நித்திய வுணர்வு தோன்றிப் பிறவிக்கஞ்சி வீடுபேற்றின வாமிக்குடையராய் வந்த வதிகாரிகளுக் கிந்நூலுணர்த்துக வென்பது போந்ததெனக்கொள்க. உயர் சிவஞா ன போதமெனவே, யாப்புங்கேட்போரு நுதலியபொருளு நூற்பெய ரும், நாடித்தீர்ந்து கண்டு மயர்வறவெனவே, நுதலிய பொருளின் வ கையும் பயனும், நந்திமுனி கணத்தளித்த வெனவே, வழியும், வெ ண்ணெய்ச் சுவேதவ னன்மெய்கண்ட தேவனெனவே, ஆக்கியோன் பெயருந் தமிழ் வழங்கு நிலமே யிந்நூல் வழங்கு நிலமென வெல்லை யும்போந்தவாறுணர்க. வடநூலார்-யாப்பை யானந்தரிய மென்றும் நுதலிய பொருளை விடயமென்றுங் கேட்போரை யதிகாரிகளென்றும் பயனைப் பிரயோசனமென்றுங் கூறுப. யாப்பு-சம்பந்த மென்பாரு முளர்.

பாயிரமுடிந்தது.

---

## கடவுள்வணக்கம்.

காமிகமுதலிய சைவாகமங்களுண் ஞானபாதத்தி னுளதாகிய வாசங்கைநீக்கி யவற்றின் பொருளுண்மை பொதுவியல்பு சிறப்பியல் பென் றிரு வேறுவகைப்படுத்துக் காட்டிப் போதித்தற் கிரௌர வாக மத்தி னெழுந்த சிவஞானபோத நூலினைத் தமிழுலக முய்தற் பொரு ட்டு மொழிபெயர்த்துச் செய்து பொழிப்புரைப்பா னெடுத்துக் கொ ண்ட வாசிரியர் சாக்கிரத்தே யதீதத்தைப் புரியுந் தமக்கிடையூறு சிறி து மணுகாமை யறிந்தாராயினு மான்றோ ராசாரம் பாதுகாத்தற்பொ ருட்டும், மாணுக்கர்க் கறிவுறுத்தற் பொருட்டும், முதற்கணிடையூறு நீக்குதற்குரிய விநாயகக்கடவுளை வாழ்த்துவதாகிய மங்கலவாழ்த்துக் கூறுகின்றார்.

### சூத்திரம்.

கல்லானிழன்மலை வில்லாரருளிய ... ... *
பொல்லாரிணைமலர் நல்லார்புனைவரோ... ...*

(இ-ள்.) கல்லானிழல்-எ-து - அருள்வடிவாகிய கல்லானிழலின் கண்ணே யெழுந்தருளி யிருந்து - மலைவில்லார்-எ-து-நந்தி பெருமா னுக் கிந்நூலான் மலைவு தீர்த்தருளிய முதலாசிரியர் - அருளிய-எ-து-

மேன்மேற் கருணைகூர்ந் தருளுதற் பொருட்டு - பொல்லா ரிணைமலர் எ-து-பொல்லாத பிள்ளையாருடைய ஞானசத்தி கிரியாசத்தி யென்னு மிரண்டு திருவடித் தாமரைகளை - நல்லார்-எ-து-கேட்டுச் சிந்தித்துத் தெளிந்த மெய்யன்பர் - புனைவரோ-எ - து - தம்முடைய ஞானசத்தி கிரியா சத்திகட்கு வியாபகமாகக் கொண்டு தாடலைபோ லடங்கி நிற்பர் - எ - று.

நல்லார் புனைவரெனவே யேனையோர்க்கது கூடாதென்ற வாறா யிற்று. மூவகைவாழ்த்து ளிது பொருளியல் புரைத்ததெனக் கொள்க. அருளியவென்பது செய்யிய வென்னும் வாய்பாட்டு வினையெச்சம். அது புனைவரென்னும் பிறவினைகொண்டது. இல்லார் இல்லாகச் செய் தாரெனப் பண்படியிற் பிறந்த வினைப்பெயர். அருளிய பொல்லாரெ னப் பெயரெச்ச முடிபாகவைத் துரைப்பினு மமையும். மலைவில்லா ரருளிய பொல்லார்தாள் புனைவரெனவே யவ்விருவருந்தம்முள் வேற் றுமை யின்மை பெற்றாம். உலகத்துப் புதல்வர்கண் மாட்டுச்செய்யும் வழிபாடு தந்தையர்க்குக் கழிபேரு வகைபயப்பிக்கு மாகலி னஙனம் பற்றி யங்ஙனங் கூறியதூஉமாம்.

---

## அவையடக்கம்.

### வெண்பா.

தம்மையுணர்ந்துதமையுடையான்றன்னுணர்வார்... ...*
எம்மையுடைமையெமையிகழார்-தம்மை ... ... ... *
யுணராருணரா ருடங்கியைந்துதம்மிற்... ... ... ...*
புணராமைகேளாம் புறன் ... ... ... ... ... *

இது, அவையடக்கங் கூறுமுகத்தானே யெண்டெடுத்துக்கொண் ட சித்தாந்த சைவத்தி னுயர்வு மேனைச் சமயத்தார்கள திழிபுங் கூறு கின்றது.

(இ-ள்) தம்மையுணர்ந்து தமையுடையான்றன்னுணர்வார்-எ-து- உடைப்பொருளாகிய தம்மியல்பினை யுணர்ந்து தம்மையுடையானாகிய தலைவனை யுணருஞ் சித்தாந்த சைவர் - எம்மையுடைமை யெமையிக ழார்-எ-து-தமக்குடைப் பொருளாகிய வெம்மையுடைய ராகலி னெ ம்மைக் குற்றங்கணிக்கிக் குணங்கொண்டு கோதாட்டுவதன்றி யிகழ்த ல்செய்யாராகலி னெம்மாற் செய்யப்படுநூலையு மவ்வாறு கைக்கொ ள்வர்-தம்மையுணராருணரார்-எ-து-அங்ஙனந்தம்மையுணராதார் தம்

மையுடையானுகிய தலைவனையுமுணராராகலான்- உடங்கியைந்து தம்
மிற்புணராமை-எ-து- அவனொருங்கே குழீஇக்கொண்டு தம்மிற்றுமே
சேராது முரணுதலால்-கேளாம்புறன்-எ-து-அவனெம்மையுமெம்மாற்
செய்யப்படுநூலையு மிகழ்ந்துரைக்கும்புறமொழியை யாம் பொருளா
கக்கொள்ளாம் - எ - று.

ஆகலா னெம்மாற்செய்யப்படு நூலையு மவ்வாறு கைக்கொள்வ
தென்பது குறிப்பெச்சம். தன்னையென்னு மிரண்டனுருபு விகாரத
தாற் றொக்கது. உடைமை-புணராமை-என்புழி - இன்னுருபுவிரித்து
ரைக்க. தம்மைபுணராரெனப் பொதுப்படக்கூறுதலானே, தாமொரு
பொருளுண்டென்பதே யுணராத வுலோகாயதரும், தம்மைக்குணிப்
பொருளென் றுணராத புத்தர்-சாங்கியர்-மாயாவாதிகளும், தம்மை
முதல்வனுக் குடைப்பொருளென்றுணராத வெச்சமயத்தாரு மடங்
குவர். பாஞ்சராத்திரிகளுஞ் சிவாத்துவிதசைவருந் தம்மையுடைப்
பொருளெனக் கொள்ளினும், அவருட் பாஞ்சராத்திரிகள் உடைப்
பொருளாகிய தமக்கணுப்பரிமாணங் கோடலானும்,உடையானுக்குப்
பரிணாமங்கூறுதலானும், உடையானல்லாதானையுடையானென மயங்
கிக்கோடலானும் சிவாத்துவிதசைவர் உடையானது சிற்சத்திக்குப்
பரிணாமங்கூறுதலானும், பிறவாற்றானுந் தம்மையுணராரேயென்பது.
புறன்-புறச்சமயம்பற்றி யிகழ்ந்துரைக்குமொழியும், புறங்கூற்றுமொ
ழியுமென்ப திரட்டுறமொழிதலென்னு முத்தியாற்கொள்க. புறங்கூ
ற்றுமொழியாவது, முக்கூற்றுப் புறச்சமயங்களின் வேறான பாடா
ணவாதசைவர் முதலியோர் முன்னன்றிப் புறத்தேயிகழ்ந்து கூறு
மொழியென்க.

# முதற்சூத்திரம்.

---

ஈண்டாசிரியர் முதனூலிற்கூறியவாறே சிவாகமங்களி னுதைப்
படி ஞானபாதப்பொரு ளெல்லாவற்றையும் பொதுவுண்மையென்
றிரண்டாகத்தொகுத்துப் பிரமாணவிய லிலக்கணவியல் சாதகவியல்
பயனியல் என நால்வகைப்படுத்துப் பிரமாணவியல் மூன்றுபாதத்
தாற் கூறுவான்றொடங்கி, முதற்கணுலகிற்கு முதற்கடவுள் சிறப்பு

வகையானுண்டென்னுமாக மப்பிரமாணத்தை வலியுறுத்துவதா யநுமானப்பிரமாணங் கூறுகின்றார்.

### சூத்திரம்.

அவனவளதுவெனுமவைமூவினைமையிற் ... ...
றோற்றியதிதியேயொடுங்கிமலத்துளதா... ...
மந்தமாதியென்மனார்புலவர் ... .. ...

எ-னின்-சங்கார - உணர்-ற்று. இது சூத்திரக்கருத்துரைக்கின்றது.

(இ-ள்.) நிவிர்த்திகலைமுதலிய பஞ்சகலைகளுட்பட்ட வைவகைச் சங்காரத்து ளிறுதிக்கண்ணதாகிய மாசங்காரத்தைச்செய்யும் வினைமுதலாயுள்ள முதல்வனையே தனக்கு முதற்கடவுளாகவுடைய தவனவளது வென்றிவ்வாறு சுட்டியுணரப்படுவதாய வுலகமென வேதாகமங்களுட் கூறப்படுவதனை யனுமானவளவை யானுணர்த்துதலைக் கருதிற் றிச்சூத்திரமென்றவாறு. ஏகாரம்-இயைபின்மை நீக்குதற்கும் பிறிதினியைபு நீக்குதற்கும் பொதுவாய்நின்ற பிரிநிலை. இதன்பொழிப் புரைத்துக்கொள்க.

---

## முதலதிகரணம்.

---

இஃதிவ்வுரை முகத்துக்கேட்போரா லுரைவகைபற்றிச் செய்து கோடற்பால தொன்றனை யறிவுறுத்துகின்றது.

(இ-ள்.) இச்சூத்திரத்தின் பிண்டப்பொழிப்பு முன்னர்க்கண்ணழித்துரைக்கும் பொழிப்புரைபற்றி யுரைத்துக்கொள்க வென்றவாறு. எனவே யிங்ஙன மிருவகைப்படும் பொழிப்புரையுட் கண்ணழித் துக் கடாவிடைகளானுரைக்கும் வார்த்திகமாய பொழிப்புரைமாத்திரையே யாமீண்டுரைக்கின்றாம் பிண்டமாகக்கொண்டுரைப்பதாய பொழிப்புரை யிதுபற்றி யுணர்ந்துகோட லெளிதாகலி னஃதியாமுரைக்கின்றிலமென வுரைமுகத்து மாணக்கர்க் கறிவுறுத்தவாறாயிற்று. இஃதேனைச் சூத்திரங்களினு முய்த்துகொண் டுணர்தற்பொருட்டு முதற்கண்வைக்கப்பட்டது. இவ்வாசிரியரானை தந்தமையிற் கண்ணழித் துரைபற்றிச் சூத்திரத்திற்குப் பதப்பொருள் கூறுதும்.

அவனவளதுவெனுமவை-புலவர்-எ - து - அவனென்றும் அவளென்றும் அதுவென்றும் இவ்வாறுபகுத்துப் பலவாய்ச்சுட்டி யுணரப்படுஞ் சொல்லும்பொருளுமாய விருகூற்றுப் பிரபஞ்சத்தொகுதி

தோற்றநிலையிறுதியென்னு முத்தொழிலுடைமையால் ஒருவனாற்றோ ற்றப்பட்டதாய வுள்பொருளேயாம், அதுதோன்றுங்கால் தானொடு ங்குதற்கேதுவாய்நின்ற கடவுளினின்றுஞ் சகசமலநீங்காமையா லது நீங்குதற்பொருட்டு மீளத்தோன்றுவதாம், இவ்வாறாகலிற் சங்காரத் தொழிலைச்செய்யுங் கடவுளேயுலகிற்கு முதற்கடவு ளேனையோரல்ல ரெனக் கூறுவரளவை நூலுணர்ந்தோர்-எ-று.

அவை-தொகுதி. சுட்டுப்பெயரெனக்கொள்ளின், உளவெனப் பிரித்துப் பயனிலையாக்கித் தாமென்பதனை யசைநிலையாகவைத்துரை த்தாக்கச்சொல் வருவித்துக்கொள்க. வினைமை-வினையுடைமை-தோ ன்றியவென்றது தோற்றியவெனப் பிறவினைவாய் பாட்டானேதுதலி னதற்குரிய வினைமுதலவாய் நிலையான்வந்தது. தோற்றியவென்னும் பெயரெச்சந் திதியென்னுஞ் செயப்படுபொருட் பெயர்கொண்டது. திதியாயொருவனாற் றோற்றப்பட்டதென்பார் தோற்றியதிதியென்றார். திதியென்றதீண்டுள் பொருளென்னுந் துணையாய்நின்றது. மூவினையு டைமையா லுள்பொருளாதலு மவ்விரண்டுமுடைமையா னிமித்தகா ரணனை யுடைத்தாதலுந் துணியப்படுமென்பார் மூவினையுடைமை யிற் றோற்றியதிதியேயென்றார். ஏகாரந் தேற்றம். ஒடுங்கியென்பது பெயர். உருபுக டொக்குநின்றன. அந்தத்தைச்செய்யுங்கடவுளை யந்த மென்றதுவுபசாரம். காணப்பட்ட வுலகாற்காணப்படாத கடவுட்குண் மைகூறவேண்டுதலிற் றோற்றிய திதியேயெனவு மொடுங்கி யுளதா மெனவு முலகின்மேல்வைத்துக்கூறினார். கருத்துரையுட் கூறியதூஉ மதுநோக்கி.

இச்சூத்திரத்துள், "அவனவளதுவெனு மூவினைமையின்" என் பதோ ரதிகரணம், தோற்றியதிதியே யொடுங்கியுளதாமென்பது மூன் றதிகரணத்தை யுள்ளடக்கி நிற்பதோரதிகரணம், அந்தமாதியென்ம னார்புலவ ரென்பதோரதிகரணம். ஆகமுக்கூற்ற திச்சூத்திரமென் றுணர்க. இம்மூன்றுமுறையே யொன்றற்கொன்றேதுவும் பயனுமா யொருபொருண்மேல்வருதலி னொருசூத்திரத்தாற்கூறினார். தன்னாற் கூறப்படும்பொருளு மதன்க ணையப்பாடு மதற்குப் பிறர்கூறும்பக்க மு மதனை மறுத்துணாக்குஞ் சித்தாந்தத்துணிவு மியையுமென்னு மிவற்றது நிலைக்களமீண் டதிகரண மெனப்படும்.

ஈண்டுளதாயொருவ னொருத்தியொன்றென்று சுட்டப்பட்டபிர பஞ்சமுற்பத்தி திதிநாச முடைத்தென்றது - எ - து - மேற்கோள்-

எ-னின்-மூவினை யுடைத்தோ வின்றோவென்னு மையப்பாட்டின்கணி த்தமாய்க் காணப்படும் பிரபஞ்சத்தை மூவினையுடைத்தென்றல் பொருந்தாதென மீமாஞ்சகரு முலோகாயதருங் கூறுங் கடாவையா சங்கித்துச் சூத்திரத்தின் முதற் கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடனுதலிற்று.

(இ-ள்.) வெளிப்படை.

ஒருவனென்று மொருத்தியென்று மொன்றென்று மிவ்வாறவயவப் பகுப்புடைத்தாயும் பல்வேறு வகைத்தாய சடமாயுஞ் சுட்டியறியப் படுவதாயு மிருத்தலி னிம்மூன்றேதுவானும் பிரபஞ்சந்தோன்றி நின்றழியு மென்பது துணியப்படு மென்பாருளதா யொருவ னொருத்தி யொன்றென்று சுட்டப்பட்ட பிரபஞ்சமென வுடம்பொடு புணர்த்தோதினர். உளதாய்ச் சுட்டப்பட்ட தெனவியையும். உளதாய்ச் சுட்டப்படுதல் முயற்கோடு முதலியன போலத் திரிவையங்களானன்றி மெய்யாகச் சுட்டப்படுதல்.

தோற்றமு மீறுமுள் ளதன்பாலே கிடத்தலின் - எ-து- மே-ள்- எ-னின் - காட்சியளவைக் கெய்தாதுரைப்பன வெல்லாம் பிரமாண மாகாவென வுலோகாயதர் கூறுங் கடாவை யாசங்கித்துக் காட்சியளவை பற்றியு மேற்கோளைச் சாதித்தனுதலிற்று.

(இ-ள்.) உற்பத்தியு நாசமுங் காணப்பட்ட திதியின் பக்கத்தே காணக்கிடத்தலி னுளதா யொருவ னொருத்தி யொன்றென்று சுட்டப் பட்ட பிரபஞ்ச முற்பத்தி திதி நாச முடைத்தென மேற்கொண்டது-எ-று.

உ தா ர ண ம்.

வெண்பா.

பூதாதியீறு முதலுந் துணையாகப் ... ... ...*
பேதாய்திதியாகும் பெற்றிமையி - னோதாரோ ... *
வொன்றொருவ னொருத்தி யுளதாயிறக்கண்டு ...*
மன்றென்று முண்டென்ன வாய்ந்து. ... ... (க)

பூதாதியீறும்-ஆய்ந்து-எ-து-உ-ம்-எ-னின். உள்ளதன்பா லவ்விரண்டுங் கிடத்தல் யாங்ஙனமென்னுங் கடாவை யாசங்கித்தேதுவை வலியுறுத்துத னுதலிற்று.

(இ-ள்.) பேதாய்-எ-து-காட்சியளவைகளானு மறியப்படாதமடவோனே-பூதாதி- எ-து-பூதமுதற் காரணமாகவுடைய பிரபஞ்சத்திற்கு-ஈறு முதலுந் துணையாகத் திதியாகும்-எ-து-திதி நிகழ்வுழி நாசமுமுற்பத்தியும் தனக்குத் துணைக்காரண மாகக்கொண்டே நிகழாநிற்கும்; அற்றாயினு மொன்று தோன்ற வொன்று நிற்ப வொன்றழிவதன்றி யொருங்கே தோன்றி யொருங்கே நின் றொருங்கேயழியக் கண்டிலமாலெனின் - ஒன்றொன்றிற் பெற்றிமையிற் றோன்றியுளதா யிறக்கண்டும்-எ-து-ஒவ்வொருகால விசேடத்திற் சாதிபற்றி யொருங்கே தோன்றி யொருங்கே நின் றொருங்கே யழிவதனைக்கண்டு வைத்தும்-என்று மன்றுண்டென்ன வாய்ந்தோதாரோ-எ-து - என்றாயினு மதற்குரிய காலம் வருமென் றுலகத்திற்கு மங்ஙனமாத லுண்டென் றக் காட்சிபற்றி யாராய்ந்து சொல்லார்களோ வுன்னைப்போலு மடமையில்லாதோர் - எ - று.

பூதாதி-அன்மொழித்தொகை. பூதத்துக்கு மேலுளவாய தத்துவங்களு லோகாயதருக் குடம்பாடன்மையிற் பூதமுதலாய தத்துவங்களென வுரைத்தலீண்டைக் கேலாமையறிக. பூதாதிக்கென நான்கனுருபு விரித்துரைக்க. அது பின்னருஞ் சென்றியையும். ஆகுமென்பது முற்றுவினை. ஈண்டுப்பெற்றிமையென்றது சாதியை. ஏகாரம்-எதிர்மறை. ஒன்றொன்றினென்பது ஒன்றொன்றாய்ப் பார்த்துணர்வதுள்ளமே யென்றாற்போல வடுகுமொழி. காலவிசேடமாத லென்று மன்றெனப்பின் வருதல்பெற்றாம். ஒருங்கேயென்பது சொல்லெச்சம். ஒன்றொன்றிற்றோன்றி யுளதாயிறுதலாவது "பயில்வித்தெல்லாங் காரிட்டமதனிற் காட்டுமங்குரங்கழியும்வேனில்" என்பதனானறிக. கண்டுமென்பத னும்மைசிறப்பு.

இனியில்லதற்குத் தோற்றமின்மையி னுள்ளதற்குச் செய்வோரின்றிச் செய்வினையின்மையி னொடுங்கின சங்காரத்தினல்லதுற்பத்தியில்லையென்றதென விங்ஙனஞ்சொற் பல்காமைப்பொருட்டுத் துணிந்ததாக வைத்துரைத்தாராயினும் பொருளியைபிற்கேற்ப விதனைமூன்றதிகரணமாக வைத்துரைப்ப தாசிரியர் கருத்தெனக்கொள்க. அஃதாமாறுகாட்டுதும்.

இனி யுலகமுள்ளதென்றது - எ-து-மே-ள்-எ-னின் - உலகமில் பொருளாய்த் தத்தஞ்சார்பிலே தோன்றியழிக லியையென்றலே ய

மைவுடைமையினது முவினையுடைத்தாயினுந் தோற்றுவானொருவனை யுடைத்தாதல் செல்லாதெனப் புத்தநூலார் சொல்லுங்கடாவை யாசங்கித்துத் திதியென்னுஞ் சூத்திரக்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோட னுதலிற்று.

(இ-ள்) வெ-டை.

இல்லதற்குத் தோற்றமின்மையின்-எ-து-மே-ள்-எ-னின்-உள்ளதாதல் யாங்ஙனமென்னுங் கடாவை யாசங்கித்து மேற்கோளைச் சாதித்தனுதலிற்று.

(இ-ள்) இல்பொருளாகிய முயற்கோட்டிற்கு முக்காலத்து முற்பத்தியின்மையி னீண்டுற்பத்தி காணப்படுதலா னுலகமுள்ளதென மேற்கொண்டது-எ-று.

இனி யுலகஞ்செய்வோனை யுடைத்தென்றது - எ - து- மே-ள்-எ-னின-உள்பொருளெனப்பட்ட பிரபஞ்சந் தத்த முதற்காரணத்தினின்று தானேதோன்றி யழியுமிதற்கொரு நிமித்தகாரணமாயொரு கருத்தா வேண்டாவெனச் சாங்கியர் கூறுங்கடாவை யாசங்கித்துத் தோற்றியவென்னுஞ் சூத்திரத்தைக் கண்ணழித்துரைத்து மேற்கோடனுதலிற்று.

(இ-ள்) வெ-டை.

உள்ளதற்குச் செய்வோரின்றிச் செய்வினையின்மையின்- எ-து-மே-ள்-எ-னின்-அதற்குப் பிரமாணமென்னையென்னுங் கடாவையாசங்கித்து மேற்கோளைச்சாதித்த னுதலிற்று.

(இ-ள்) மண்முதலிய வற்றினுள்ளதாகிய குடமுதலிய பொருட்குக் குயவன்முதலிய செய்வோனையின்றி வினைதன் முதலிய செய்தொழினிகழாமையி னுலகமிவ்வியல்பிற்றாகலான் இனி யிவ்வுலகஞ் செய்வோனை யுடைத்தென மேற்கொண்ட தென்றவாறு.

இனி யொடுங்கின சங்காரத்தினல்லதுற்பத்தியில்லையென்றது-எ-து-மே-ள்-எ-னின்-இத்துணையுங் கூறியவாற்றா லுலகத்தைத் தோற்றுவிப்பா னுண்டெனப்பட்ட கருத்தா திதிகருத்தா சிருட்டிகருத்தா முதலியோரிலொருவனே யாதலமையுமெனப் பாஞ்சராத்திரர் முதலியோர் கூறுங்கடாவையாசங்கித் தொடுங்கியுளதாமென்னுஞ் சூத்திக்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோட னுதலிற்று.

(இ-ள்.) உலகுக்தா ஞெடுங்குதற்கு நிலைக்களமான சங்காரகருத்தாவினின்றன்றி யுளதாகாதென்பதாம். ஒடுங்கினவென்னும் பெயரெச்சஞ் சங்காரமென்னு மிடப்பெயரோடு முடிந்தது. சங்காரமாகுபெயர். அல்லதில்லை யென்றெதிர் மறைமுகத்தாற் கூறியதேனைக் கடவுளரினுள தாகாமையாப் புறுத்தற்பொருட்டு.

இதனுளொடுங்கின வென்பதனாற் போந்த குறிப்பேதுவைப் புலப்படக்காணுமாறு, ஆண்டொடுங்குதலின்-எ-து - மே-ள்-எ-னின். அதற்குப் பிரமாணமென்னை யென்னுங்கடாவை யாசங்கித்து மேற்கோளைச் சாதித்தனுதலிற்று.

(இ-ள்.) யாது யாண்டொடுங்கும் அஃ ததிலுற்பத்தி யாமண்ணிற்குடம்போலு மென்னு மவினு பாவத்தாற் பிரபஞ்சஞ் சங்காரகாரணன் மாட்டொடுக்குதலின் மீளத்தோன்றுங்கா லாண்டுநின்றுந் தோன்றுதலே பொருத்தமுடைமையி னவ்வாறு மேற்கொண்ட தென்றவாறு.

இவ்வாறு மூன்றதி காரணப்பொருளு மிங்கட் போந்தவாறு மிவ்வாறுணையாக்காற் பொருளியைபு படாமையு நுண்ணுணர்வாற் கண்டுகொள்க.

## உ தா ர ண ம்.

வெண்பா.

இலயித்த தன்னினி லயித்ததா மலத்தா ... .. *
லிலயித்த வாறுளதா வேண்டு - மிலயித்த ... *
தத்திதியி லென்னி னழியா தவையழிவ ... ...*
தத்திதியு மாதியுமா மாங்கு. ... ... ... ... (உ)

இலயித்ததன்னினி லயித்ததாமலத்தா லிலயித்த வாறுளதா வேண்டும்-எ-து-உ-ம்-எ-னின் - உலகமுள்ள தாயினுள்ளதற் குண்டாக வேண்டுவதில்லை யாகலாற் சற்காரியவாத மடாதெனப் புத்தர் கூறுங் கடாவை யாசங்கித் தில்லதற்குத் தோற்ற மின்மையினென்ற வேதுவை வலியுறுத் தனுதலிற்று.

(இ-ள்.) இலயித்த தன்னினி லயித்ததாம்-எ-து - உள்ளதாயினுஞ் சங்கார காலத்தி ெனொடுங்கியதாகலா னவ்வொடுங்கிய வுலகந்தெனொடுங்குதற்கு நிலைக்களமான சங்கார கருத்தாவினின்றும் படைப்

புக்காலத்தின் மீளவுள்ளதாம். அற்றேலொடுங்கிய தொடுங்கியவாறே யொழியாது மீளவுண்டாக வேண்டாம். வேண்டுமாயின் முன்னொடுங்காது நிலைபெறவே யமையும், அவ்வாறன்றி யொடுங்கி மீளவுளதாவ தெற்றுக்கெனின் - மலத்தால்-எ-து-உள்ளதாகிய வுலகங்களு மலபரிபாகமாதற் பொருட்டொடுங்கி யாணவமலபரிபாக மாதற்பொருட்டு மீளவுமுண்டாம், அற்றேல், முன்னின்ற பிரபஞ்ச நாசமாக, வேறுதோன்று மென்னுமலதுவே யொடுங்கி நின்று மீளவுளதா மென்றற்குப் பிரமாணமென்னை யெனின் - இலயித்த வாறுளதா வேண்டும்-எ-து-எஃதெவ்வாறு நின்றொடுங்கிற் றஃதவ்வொடுங்கியவாறே யுளதாதலெல்லாரானும் விரும்பப்படும்-எ-று. எனவே யந்நியம மில்லையாயின், நெற்கமுகாய் நீளாது நெல்லாய் நீளுதற்கேது வென்னை யென்னுந் தருக்கமே யதனை யறிவுறுத்து மென்ற வாறாயிற்று. சற்காரிய வாதத்தினியல்பு - தந்து முதல் காரகமென்னும் ஞானமிர்தத்திலுங் காண்க. இதனானே யில்லது முள்ளது மல்லாத பொருடோன்றுமென்னுஞ் சூனியவாதிகளும், இல்லது முள்ளதுமாய பொருடோன்று மென்னு மனேகாந்த வாதிகளு மறுக்கப்பட்ட வாறறிக. இலயித்ததத் திதியிலென்னி னழியாதவை யழிவதத் திதியுமாதியுமா மாங்கு-எ-து-உ-ம்-எ-னின். இனிச்சற்காரிய வாதத்தி னவ்வக்காரியங்கடத்த முதற்காரணத் தொடுங்கு மெனவே கோடலின், உலகிற்கு முதற்காரணமாகிய மூலப்பகுதி வாசுதேவ னுருவாகலா னுலகமவன் மாட்டொடுங்கு மென்றலமை வுடைத்தன்றி முதற்காரணத்தின் வேறாய் நின்ற நிமித்தகாரண மெனக்கொண்ட சங்காரகருத்தாவின்மாட்டொடுங்கு மென்றல் பொருந்தாதெனப் பாஞ்சராத்திரிகள் கூறுங்காலவையா சங்கித்து. ஒடுங்கின சங்காரத்தின்-எ-ம் - இலயித்ததனில்-எ-ம்-கூறிப்போந்த குறிப்பேதுவை வலியுறுத்தனுதலிற்று.

(இ-ள்) இலயித்ததத்திதியிலென்னில்-எ-து-உலகமொடுங்கியது அந்தமூலப்பகுதி வடிவாய திதிகருத்தாவின்கண் ணென்பையாயின்- அழியாதவை - நீயங்ஙனங்கொள்ளினு மூலப்பகுதிக்கு மேலுள்ள புவனங்களதனல் வியாபிக்கப்படாமையிற் கீழுள்ள வேகதேசமாத் திரையே யாண்டொடுங்குவதன்றி மாயாகாரியத்தொகுதி முழுவதுமாண்டொடுங்காது, அற்றேல், மாயாகாரியத்தொகுதி முழுவதும் யாண்டொடுங்குவதென்னில்-அழிவதத்திதியுமாதியு மாமாங்கு-எ-து- அந்தத் திதிக்கடவுளும் படைப்புக்கடவுளுந் தோன்றுதற்குக் காரண

மாகிய வச் சங்காரக்கடவுளிடத்தே யவ்விருவரோடுங்கூட வழிவதா மத் தொகுதியென்றவாறு.

இவ்வெண்பாவினை, "செய்யுட்க ளோசைசிதையுங்கா லீரிடத்து மையப்பாடின்றியமையுமா, மைதீரொற், றின்றியுஞ்செய்யுட் கெடி னொற்றேயுண்டாக்குக, குன்றுமேலொற்றவுங்கொள்" என்பதுபோல விரண்டதிகரணப்பொருள் படுமாறு இருதொடராகவைத் துரையாக் காற்பொரு ளியைபுபடாமை யறிக. இலயித்தவென்னும் பெயரெச் சந் தன்னென்னுமிடப்பெயரோடு முடிந்தது. இலயித்ததென்ற தே துப்பொருண்மையுணர நின்றபெயர். இலயித்தெனச் சற்காரியவாத ங்கூறவே யிலயித்தவவத்தையி னவ்வக் காரியசத்தி சமூகமாய்ச் சூக் குமமாய் நிற்பதொன்றுண்டதுவே முதற்காரணமெனப் பிரபஞ்சத் திற்கு முதற்காரணமாகிய மாயையுண்மையும் பெறப்பட்டது. ஆமெ ன்பது முதனிலைத்தொழிற்பெயர். வேண்டுமெனச் செயப்படுபொரு ளைச் செய்ததுபோலக்கூறினர். அவை-தொகுதி. அஃறிணைப் பன் மைப் பெயரென்பார் அழியா தழிவதென்னு மொருமைகளோ டியை யாமையு முத்தரமாகாமையுமுணர்க. திதியுமாதியு மாகுபெயர். ஆமாங்கு-பெயரெச்சமுடிபு. இரணிய கருப்பமதத்தையு மறுத்தற் பொருட்டுப் படைப்புக்கடவுளையு முடன்கூறினர். நிமித்தகாரணனா கிய முதல்வனுலகிற்கு முதற்காரணனல்லனாயினு முதற்காரணமாகிய மாயைக் காதாரமாய்நிற்றலி னுலகமாண்டொடுங்கி யாண்டுநின்றுந் தோன்றுதலமையுமென்பது வருகின்றவெண்பாவிற் பெறப்படும்.

வெண்பா.

வித்துண்டாமூல முளைத்தவாதாரகமா ... ... *
மத்தன்றாணிற்றல வாவினையால் - வித்தகமாம் ...
வேட்டுவனாமப்புழுப்போல்வேண்டுருவைத்தான்கொடுத்துக்
கூட்டானேமண்போற் குளிர்ந்து ... ... ...(௩)

வித்துண்-குளிர்ந்து - எ-து-உ-ம்-எ-னின் உலகந்தனக்கு முதற் காரணமாகிய மாயையினொடுங்குவதன்றி நிமித்தகாரண னொருவனு ண்டெனக்கொள்ளினு மவன் மாட்டொடுங்குமென்றல் பொருந்தா மையின் யாதுயாண்டொடுங்கு மஃததனி னுற்பத்தியாமென்னு மவி னாயாவத்தான் மாயையினொடுங்கிய வுலகத்தை மாயையேதோற்று விக்கு மிதற்கோ ரிறைவன்வேண்டாவெனச் சாங்கியநூலார் மதம்

பற்றி நிகழுங்கடாவை யாசங்கித்துள்ளதற்குச் செய்வோரின்றிச் செய்வினையின்மையினென்னு மேதுவை வலியுறுத்துத னுதலிற்று.

(இ - ள்) மண்போற் குளிர்ந்து வித்துண்டாமூல முளைத்தவாதாரகமா மத்தன்றுணிற்றல வாவினையால் வித்தகமாம் - எ - து-மாயையுமுலகமும் வித்துமங் குரமும்போலு மாகலின் வித்துக்காதாரமாகிய நிலங்குளிர்ந்த வழியதன்கண் வித்துள்ளதாக வதனினின்று மங்குரந்தோன்றிய வாறுபோல மேலவெண்பாவினி லயித்ததென்றதனாற் பெறப்பட்ட மாயைதனக் காதாரமாய் நின்று தோற்றுவிக்கு மிறைவனது சத்தியின் கண்ணுளதாய் நிற்றலிற் சத்திசங்கற் பித்தவழி யவரவர் வினைக்கீடாக வவ்வக்காரியங்களை யவ்வவ்வியல்பிற் பிறழாமற் பயக்குஞ் சதுரப்பாடுடைத்தாமல் லூழியுடைத்தன்று நிலங்குளிர்ந்த வழியன்றி யதன்கட்கிடந்தன்றி வித்துமுளையத்தோன்றுதவாறுபோலு மாகலான் மாயையினொடுங்கித் தோன்றிய வுலகமதற் காதாரமாய் நின்றவிறைவன் சத்தியினொடுங்கித் தோன்றியதேயா மென்றவாறு. ஆகலானென்பது முதனிலைக் குறிப்பெச்சம். இதுகிழங்கினின்று தோன்றிய தாமரையைப் பங்கயமென்பதனுமறிக. வழிநூலாசிரியர். "உயிரவை யொடுங்கிப் பின்னு முதிப்பதென்றவன்பால்,, எ-ம், "உலகவனுருவிற்றோன்றி யொடுங்கிடும்,, எ-ம், ஓதியதூஉம், உலகவ னுருவிற்றோன்றி யொடுங்குமாறு வாதுளாகமத்தில் வகுத்தோதியதூஉ மிவ்வியல்பு நோக்கியென்க. இஃதறியார்தாரின்னோரன்ன வற்றைத் தத்தமக்குவேண்டியவாறே யுரைப்ப. உவமவினைபொருளினும் பொருளடை யுவமையினுஞ் சென்றியையும், உண்டாகவெனச் சற்காரியவாதத்தை வலியுறுத்துதல் வித்தில்வழி நிலத்தினின்று மங்குரந்தோன்றுத வாறுபோல மாயையில் வழிப்பிரமத்தினின்று முலகந்தோன்றுமெனப் பரிணும வாதிகளையும், மாயையநிர்வசனமென்னு மாயாவாதிகளையும், வித்து நிலனும்போலென்றதனல் மாயைமுதல்வனின் வேறுபொரு ளன்றென்னுஞ் சிவாத்துவிதசைவர் பாஞ்சராத்திரிகளையு மறுத்தவாறுயிற்று. முதல்வன் பல்வேறுவகைப்படச் சங்கற்பித்த வாறென்னை யென்னுங் கடாவை யாசங்கித்தவாவினையா லென்றார். வித்தகம் - விசித்திரமென் றுரைப்பினுமமையும். அற்றேல், தன்வயத்தானன்றி வினைவயத்தாற் றோற்றுவிப்பா னிறைவனுகா னென்னில் " வேட்டுவனுமப் புழுப்போல்வேண்

திருவைத்தான் கொடுத்துக் கூட்டானே-எ-து-வேட்டுவனுதலை விரு ம்பும் புறாவிற்கு வேட்டுவன் விரும்பிய வடிவினைக் கொடுக்குமாறு போல விறைவனு மவரவர் வேண்டு முருவினைக்கொடுத் தவ்வினைக் குத்தக்க பயன்களையுங் கூட்டுவானாக லானதுகொண்டு சுதந்திரத்து க்கிழுக்கென்னை யென்றவாறு.

ஆகலானது கொண்டு சுதந்திரத்துக் கிழுக்கென்னை யென்பது குறிப்பெச்சம். போல்-அசை. குளிர்ந்த வழியென்பது குளிர்ங்கெ னத்திரிந்துநின்றது. நிற்றலினென்னு மைந்தாவது விகாரத்தாற்றொக் கது. ஏகாரம்- எதிர்மறை.

வெண்பா.

நோக்காது நோக்கி நொடித்தன்றே காலத்திற்
றாக்காது நின்றுளத்திற் கண்டிறைவ-னாக்காதே
கண்டநன வுணர்விற் கண்டகனவுணரக்
கண்டவனி விற்றின்றுங் கட்டு. (சு)

நோக்காது-கட்டு-எ-து-உ-ம்-எ-னின், மேலுங்காரணத்திற் கூறிய வாற்றா னுலகிற்கு முதற்கடவு ளுண்டெனக் கொள்ளினு மவன்ப டைப்பு முதலிய தொழில்செய்வானாயின் விகாரமெய்திய தனிற்பந் தமுறுவானென்று வாதமதம்பற்றி நிகழுங் கடாவை யாசங்கித்தேது வை வலியுறுத்த னுதலிற்று.

(இ-ள்.) இறைவன்-எ-து-முதல்வன் - காலத்திற்றாக்காது நின் று-எ-து-இறப்பு நிகழ்வெதிர்வு முதலியனவாய் வேறுபட் டெல்லா த்தொழிலுஞ் செய்துந் தனக்கு விகாரமின்றி நிற்குங் காலம்போல விகாரப் படாமனின்று - ஆக்காதேகண்டு-எ-து-பிரபஞ்சத்தைக் காரணத்தாற் படையாது சங்கற்ப மாத்திரத் தானேபடைத்து - நோக் காது நோக்கி நொடித்து-எ-து-அவ்வாறே காவாமற் காத்தழியாமலழித்தலால்-இன்றுங்கட்டு-எ-து- இவ்வாற்றா லவனுக்குப் பந்தமின்றா தல் - உளத்திற்கண்ட நனவுணர்விற்கண்ட கனவுணரக் கண்ட வனி லிற்று-எ-து-கற்றநூற்பொருளுஞ் சொல்லுமுளத்திற் றோன்றுங் கா லுள்ள மவற்றிற் றொடக்குண்ணுதவாறுங் கனவின்கட்கண்டவற்றை ப் புறத்துவிடயங்களை யறிந்துவந்த நனவுணர்வின் கண்ணே விளங்க வறிந்தவ னப்பொழு தவற்றிற் றொடக்குண்ணுத வாறும்போலு மித் தன்மைத் தென்றவாறு.

எனவே யிஃதிவ்வாறாக வென் றெண்ணுதலாகிய சங்கற்ப மாத்திரையாற் செய்வதூஉங் காரணத்தாற் செய்வதூஉ மென வினைமுதலிருவகைப்படுமென்பதூஉம், காரணத்தானன்றிச் செய்யமாட்டாத குயவன் முதலியோர் சங்கற்பமாத்திரையாற் செய்யு முதல்வனுக்கு வினைமுதலாற் பொதுமைபற்றி யொருபுடை யுவமையாதலன்றி முற்றுவமையாதல் செல்லாமையானுஞ் சங்கற்பமாத்திரையாற் செய்யுஞ் செய்திக்குக் கட்டுண்டன் முதலிய குற்றங்கள் பகைப்பொருளாகலானு மவை யாண்டுளவாதற் கோரியை பின்றென்பதூஉங்கூறி யேதுவை வலியுறுத்தவாறுகாண்க.

ஆக்குதல் - படைத்தல் - காண்டலுமது. நோக்குதல்-காத்தல்-நொடித்தல் - அழித்தல் - அது நொடித்தான் மலையென்பதனானுமறிக. ஆக்காது நோக்கா தென்றமையால் நொடியாதென்பது வருவித் துரைக்கப் பட்டது. நொடித்தலாலென்பது நொடித்தெனத்திரிந்தது. அன்றேயென்பது அசை, அநாதியெனினு மமையும். இன்மூன்று முவம வுருபுகள். உளத்தி னென்பதற்குச் சங்கற்பத்தா லென்றுரைப்பினு மமையும். இன்றாங்கட் டென்ப தருங்கேடனென்பதுபோல நின்றது.

---

## மூன்றுமதிகரணம்.

---

இனிச்சங்காரமே முதலென்றது-எ-து-மே-ள்-எ-னின், ஒடுங்கின சங்காரத்தினல்ல துற்பத்தி யில்லையெனவே சங்காரகருத்தாவுலகிற்கு முதற்கடவுளென்பது போந்ததாயினுந் தேர் முதலாயின பலர் கூடிச்செய்யக் காண்டலி னவற்றினு மதிகவிசித்திரமான வுலகத்திற்கு மற்று மத்தன்மை யராய முதற்கடவுள ருண்டெனக்கோடு மென்னு மனேகேசுர வாதிகள் முதலியோர் மதம்பற்றி நிகழுங்கடாவை யாசங்கித்து, "அந்தமாதி" என்னுஞ் சூத்திரத்தைக் கண்ணழித் துரைத்து மேற்கோளைச் சாதித் தனுதலிற்று.

(இ-ள்.) சங்காரகருத்தா வொருவனே யுலகிற்கு முதற்கடவுளென்றது. சங்காரம் ஆகுபெயர். ஏனையோரை முதல்வராகாரெனப் பிரித்தமையி னேகாரம் பிரிநிலைக்கண் வந்தது.

சுட்டுணர்வாகிய பிரபஞ்சஞ் சுட்டுணர்வின்றி நின்ற சங்காரத்தின் வழியல்லது சுதந்திரமின்றி நிற்றலான்-எ-து-ஏது-எ-னின், அதற்குப் பிரமாண மென்னையென்னுங் கடாவை யாசங்கித்து மேற்கோளைச் சாதித்த னுதலிற்று.

(இ-ள்.) ஒன்றொன்றாய்ச் சுட்டி யறிவதாகிய வுருவு மருவுமென் றிரு வேறுவகைப்பட்ட பிரபஞ்ச மவ்வாறு சுட்டி யறிதலின்றி யெவ்வுலகு மொன்றாயறிந்து நின்ற சங்காரகருத்தாவின் வழிப்பர தந்திரமாய் நிற்பதல்லது தனக்கெனச் சுதந்திர முடைத்தாய் நிற்பதன் றாகலாற் சங்காரகாரண னொருவனே யுலகிற்கு முதற்கடவுளன்றி யேனையோர் முதற்கடவுள ரல்லரென மேற்கொண்ட தென்றவாறு.

பிரபஞ்சத்திற்குச் சுதந்திரமின்மையுஞ் சங்காரகாரணனுக்குச் சுதந்திர முண்மையுமேது முகத்தாற்காட்டுவார் சுட்டுணர்வாகிய பிரபஞ்சமெனவுஞ் சுட்டுணர்வின்றிநின்ற சங்காரமெனவு மீரிடத்துமுடம்பொடுபுணர்ந்தோதினர். சுட்டுணர்வுடையதனைச் சுட்டுணர்வென்றது உபசாரம். ஈண்டுப்பிரபஞ்சமென்றது சேதனப்பிரபஞ்சத்னை, பிரிநிலையேகாரத்தான் விலக்குதற்குரியததுவே யாகலின். தேர்முதலாயின பலராற் செய்யப்படினு மப்பலரு மொருவனே வல்வழிநின்றேசெய் பவராகலானும் வேதத்துட்காரண வாக்கியங்களிற் சுட்டுணர்வினராகிய நாராயண னிரணிய கருப்ப னிந்திர னங்கி சூரியன் முதலியோரைக் காரணமென்றது குயவன்போலவாந்தர காரணமாதல்பற்றியேயாகலி னவையெல்லா மாகுபெயராற் சங்காரகாரணனாகிய முதற்கடவுளையே யுணர்த்திநிற்கு மாகலானுஞ் செய்துஞ் செய்வித்துமெல்லாத்தொழிற்கும் வினைமுதலாய்நிற்கு முதற்கடவுள் சங்காரகருத்தா வொருவனேயென்பதுகருத்து.

வெண்பா.

ஒன்றலா வொன்று ளுளதாகி நின்றவா ... ...*
றொன்றலா வொன்றிலவை யீருத-லொன்றலா ...*
வீறேமுதலதனி னீறலா வொன்றுபல ... ... *
வாறேதொழும்பாகு மங்கு. ... ... ... (௫)

ஒன்றலா - அங்கு-எ-து-உ-ம்-எ-னின், அங்ஙனமாயினுஞ் சுட்டுணர்வாகிய பிரபஞ்சம் பலவாயினாற் போலச் சுட்டுணர்வின்றிநின்ற சங்காரமும் பலவுள வெனக்கோடும், ஒன்றேயென்றற்குப் பிரமாண

மென்னை யென்னுங் கடாவை யாசங்கித் தேதுவை வலியுறுத்துத லுதலிற்று.

(இ-ள்) அவை-எ-து-சேதனப் பிரபஞ்சத் தொகுதி - ஒன்றலா வொன்றால்-எ-து-உருவு மருவு மென்னு மவ்விரு கூற்றுப் பிரபஞ்சத்து ளொன்றல்லாத வொப்பற்ற பரம்பொருளாலே - உளதாகி நின்றவாறு-எ-து-சிருட்டிப் பட்டுத் திதிப்பட்டவாறே - ஒன்றலாவொன் றிலீறுதல்- எ-து - அந்தப் பரம்பொருளின் கண்ணே சங்காரப்படுதலால் - ஒன்றலா வீறேமுதல் - எ-து - அச்சங்காரக் கடவுளொருவனே யுலகிற்கு முதற்கடவுள் - அற்றே லிவ்வாறு முத்தொழிற் செப் பஞ்சேதனப் பிரபஞ்சம் வீடுபெற்ற வழிச் சுட்டுணர்வின்றிச் சிறு சமமாமென வேதத்து மாகமத்து மோதுதலி னவ்வழி யவ்வைப்பு முதற்கடவுளாமெனறற் கிழுக்கென்னையெனின், அதனினீறலா வொன்று-எ - து - அப்பரம் பொருள்போ லழிவின்றி நித்தமாய சேதனப்பிரபஞ்சம்-அங்கு-எ-து - வீடுபேற்றின் கண்ணும் - பலவாறே தொழும்பாகும் - எ-து-பலவாற்றானும் பரம்பொருளுக் கடிமையா மென்றவாறு.

இது சொற்பொருட்பின் வருநிலை. காரியப் பிரபஞ்சஞ் சடமா கலானும், சேதனப்பிரபஞ்ச மவிச்சையாற் கட்டுற்றுச் சுட்டுணர்விற் றாய் நிற்றலானும், இவற்றைத்தொழிற் படுத்துதற்கிவற்றின் வேறா யொரு முதற் கடவுளுண்டென்பது பெற்றாம். பெறவே, பிரபஞ்சம் விசித்திரகாரியமாய்க் காணப்படுதலி னிவ்வாறு நடாத்து முதற் கட வுண் முற்றுணர்வு மளவிலாற்றலும் பொருளுஞ் சுதந்திரமுதலிய நி ரதிசய குணங்களுமுடைய னென்பதூஉம் பெறப்பட்டது. படவே, இத்தன்மையனாய முதற்கடவுளொருவனே யமையுமாகலான் வேறு மத்தன்மை யருண்டெனக் கொள்ளின் மிகையென்னுங் குற்றமாம். அல்லதூஉம், இலக்கணத்து ளொருவாற்றானும் வேற்றுமையில் வழி யிலக்கியம் பலவாதல் செல்லாதென்னுங் கருத்தாலொன்றலாவொன் றெனவனை யறுத்தோதினர். ஈறேமுதலென்றது முடிந்தது முடித்த ல். ஈறு ஆகுபெயர். இறந்ததுதழீஇ இயவெச்சவும்மை விகாரத்தாற் றொக்கது. பலவாறுவன; இருணீங்கியவழியுங் கண்ணுக்குக்காட்சிஞா யிற்றையின்றி யமையாதவாறுபோல மலநீங்கிய முத்தி நிலையினுமான் மாவுக்கறிவு வியஞ்சக மாயுடனின் றறிவிக்கு முதல்வனை யின்றி

யமையாதவாறும், கண்படிக மாகாயம்போலச்சார்ந்த தன்வண்ணமா யன்றி முதல்வன்போலத் தனித்துநிற்கு மியல்பில்லாதவாறும், முத ல்வன்போ லைந்தொழிற்கும் வினைமுதலா முரிமையின்றிச் சிவானுப வமொன்றற்கே யுரித்தாயவாறும், சமவியாபகமாயினு முதல்வனை நோக்கத்துல வறிவாகலான் விளக்கொளி யுட்கண்ணொளிபோல முத ல்வனின் வியாப்பியமாயன்றி நில்லாதவாறு முதலாயின. அற்றேல், முத்திநிலையினுன் மாச்சிவசமமென்னுஞ் சுருதிக்குப்பொரு ளென்னை யெனின், அஃதுண்மை யதிகாரத்திற் பெறப்படும். இதனானே சிவ சமவாதி, சங்கிராந்தவாதி, உற்பத்திவாதி, ஆவேசவாதி மதங்களுமறு க்கப்பட்டன. பதியுண்மைக்குப் பிரமாணங் கூறுவார் மலத்துளதா மெனப் புனருற்பத்திக்கேதுக் கூறுமுகத்தான் மலத்துண்மைக்குப் பி ரமாணமு முடன் கூறினர். அதனையீண்டுவேறோ ரதிகரண மாகவை த்துரையாராயினர் அதிகரணத்துக் குரியவை யப்பாடு முதலியன வெல்லாஞ் சகசமலத்துணரா தென லதனிலக்கணங்கூறும் வழிப்பெ றப்படுதலா லீண்டுமிகைபடவே றோதல்வேண்டாமையின். இச்சூத் திரத்தினதி காரணங்களாற் போந்ததொகைப் பொருளாவது தோற்ற க்கேடுகளதுண்மை காட்சிமுதலிய வளவைகளானறிய வாராமையிற் பிரபஞ்ச நித்தப்பொருளேயாம். அன்றித்தோன்றி யழியுமெனக்கொ ள்ளினு மிப்பொருடத்தஞ் சார்பிற்றோன்றி நின்றழிதலியற்கையென வமையுஞ் செயற்கை யென்றற்கோரேது வின்மையின், மற்றுளபொ ருளாயினது வேயமையுமிறைவன்வேண்டா. இரண்டுள்பொருள்கோ டன் மிகையாகலின், வேண்டுமாயினு மாயோன்முதலிய கடவுளரி லொருவனே யமையுமவனை யொழித்துச் சங்காரகருத்தா முதற்கட வுளென்றற்குப் பிரமாணமென்னை, பிரமாணமுண்டாயினு மதிவிசித் திரமாய பிரபஞ்ச மொருவனாற் செய்தல்கூடாமையின் மற்றுமவ்விய ல்பினராய முதற்கடவுளருள ராதல்வேண்டுமென, உலகாயதர், மீமா ஞ்சர், புத்தர், சமணர், சாங்கியர், பாஞ்சராத்திரிகள், அனேகேசுர வாதிகள் மதம்பற்றிப் பூருவபக்கம் நிகழ்ந்தவழியவனை மறுத்துச்சித் தாந்தஞ்செய்து முதற்கடவுள துண்மைபொதுவகையானுஞ் சிறப்பு வகையானுங் கருதலளவையின் வைத்துணர்த்திய வாறெனவுணர்க. இவ்வாறு சூத்திரந்தோறு முணர்ந்துரைத் துக்கொள்க. முதற்சூத்திர முடிந்தது.

# இரண்டாஞ்சூத்திரம்.

அவையேதானே யாயிருவினையிற் ... ...*
போக்குவரவு புரியவாணையி... ... ... *
னீக்கமின்றி நிற்குமன்றே. ... ... ...*

எ-து- எ - னின், புனருற்பவம் வருமாறுணர்த்து தனுதலிற்று.
எ-து-க-ஞா-எ-னின், சூத்திரக்கருத்துணர்த்து தனுதலிற்று.

(இ-ள்.) உலகமொடுங்கியு நின்று மீளவுளதாமாற் றைவகுத்து ணர்த்து முகத்தானே துணைக்காரணமுதலிய வில்வழி யிறைவனுலகி ற்கு நிமித்தகாரணனுதல் சாலுமாறியாங்ஙனமென்னுங் கடாவையாச ங்கித்தவற்றதுண்மைக்குப் பிரமாணமுணர்த்து தனுதலிற்றிச் சூத்தி ரமென்றவாறு.

சூத்திரவியைபு மிதனுனேவிளங்கும். ஒடுங்கி யுளதாமென்ற வழி யொடுங்கிநின்று மீளவுளதாவ தெவ்வாறென்றவாய்நிற்றலி னவ் வவாய்நிலைபற்றிப் புனருற்பவமேயீண்டுக் கூறப்பட்டது. இச்சூத்திர த்தின் பிண்டப்பொழிப்பு. மேலைச் சூத்திரத்தெடுத்துக்கொண்ட சங் காரகாரணனுகிய முதல்வன் கலப்பினுலுடலி னுயிர்போ லவ்வுயிர்க ளேயாய பொருட்டன்மையாற் கண்ணினருக் கன்போலவற்றின் வே றுமா யுயிர்க்குயிராதற் றன்மையாற் கண்ணொளியி னுன்மபோதம் போலுடனுமாய் நின்றுணை யென்னும் யரியாயப் பெயருடைய த னது சிற்சத்தியான்வரு மிருவினைகளான வையிறத்தல் பிறத்தல் க ளைப்புரியும் வண்ணமவ்வாணையிற் பிரிப்பின்றிச் சமவேதமாய் நிற்ப னென்றவாறு.

“ அவையேதானேயாய் ,, என்பதனை யிரட்டுற மொழிந்துகொ ண்டுரைக்க. இக்கருத்தேபற்றி, “ உலகெலாமாகிவேறுயுடனுமாய் ,, என்ருர் வழிநூலாசிரியரும். மேலைச்சூத்திரத்தி னந்தமாதியென் பு ழிவிகாரத்தாற்றொக்க பிரிநிலையே காரத்தான் விலக்கப்பட்டு நின்ற சேதனப்பிரபஞ்சத்தை யீண்டவையெனச் சுட்டிக்கூறினுர். புரிதல்- எப்பொழுதுமேற்கோடல். ஒடுங்கி யுளதாமென்றதற்கேற்ப வீண்டு

ம்போக்கினை முதற்கூறினர். ஆணையினென்பது சிக்கநோக்காயிருவி னையென்பதனோடு நீக்கமின்றியென்பதனோடுமியைந்து பொருடந்து நின்றது. ஆண்டின்னுருபு முன்ன ரேதுப்பொருட்கண்ணும் பின்னர் நீக்கப்பொருட்கண்ணுமாய் நின்றது. இன்னெனன்பது சாரியையெனக்கொண்டுரிடத்து மேற்குமுருபுகள் விரித்துரைத்தலுமொன்று. அன்றே-அசை-அநாதியே யிவ்வாறு நிற்குமெனினு மமையும். ஆய்ப்புரியநிற்குமெனவே யச்செயல்களெல்லா முதல்வன் காரணத்தானன்றிச் சங்கற்பமாத்திரத்தாற் செய்வனென்பது பெறப்பட்டது. இதனுனே மேலந்தமென் றுத்தேசமா யெடுத்துக்கொண்ட முதல்வனுக்கிலக்கணங்கூறியவாறு மாயிற்று. இது தடத்தவிலக்கண மெனப்படும் பொதுவியல்பு. ஆணையினெனவே, தனதுசிற்சத்திதுணைக்காரணமாய், இருவினையினெனவே, இருவினையுந்தன்வழித்தாயதுணைக்காரணமாய், அதற்குப்பற்றுக்கோடுண்டென்பதூஉம் பெறுமாகலின், அதுமுதற்காரணமென்பதூஉம், இருவினையிற் போக்குவரவு புரியவெனவேயொடுங்கி மீளவுளதாங்காலிருவினைகட்கேற்பப் பல்வேறுவகைப்பட்டு விரியுமென்பதூஉம் போந்தவாறுணர்க. இதனுள் 'அவையே தானேயாயென்றதோ ரதிகரணம், ஆணையி னிருவினையினென்றதோ ரதிகரணம், போக்குவரவு புரியவென்ற தோரதிகரணம், ஆணையினீக்கமின்றிநிற்குமன்றே யென்றதோ ரதிகரணம், ஆகநாற்கூற்ற திச் சூத்திரமெனக்கொள்க.

---

## முதலதிகரணம்

---

" ஈண்டிவ் வான்மக்கள்பலவு முதல்வன் றானேயாய் நிற்குமென்றது-எ-து-மே-ள்-எ-னின், மேன்முதற்கடவு ளல்லவென விலக்கப்பட்டுநின்ற சேதனப்பிரபஞ்சமு முதல்வனும் பொன்னும் பணியும் போல பேதமோ, இருளும் வெளியும்போற் பேதமோ, சொல்லும் பொருளும்போற் பேதாபேதமோவென்னு மையப்பாட்டின்கண் அம்மூன்றினு ளொரோவொன்றேபற்றி யவ்வவமதத்தார் கூறுங்கடாவை யாசங்கித்துச் சூத்திரத்தின் முதற்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோட்னுதலிற்று.

(இ-ள்) வெ-ம்ட.

ஈண்டுமிரட்டுற மொழிந்துகொள்க. இதனானே யொருவிடயத்தைக் காணுங்காலான்மபோதங் கண்ணொளியெனத் தானெனவேறின்றியுடனாய்நின்று காணுமாறுபோல முதல்வன் புனருற்பவஞ் செய்யுங்கா லுயிர்களோ டுடனாய்நின்று செய்வனென்பதூஉம் பெறப்பட்டது.

அத்துவிதமென்ற சொல்லானே யேகமென்னி லேகமென்று சுட்டுவதுண்மையி னத்துவிதமென்ற சொல்லேயந்நிய நாத்தியையுணர்த்துமாயிட்டு-எ-து-எ-னின், புனருற்பவஞ் செய்யுங்கா லுயிர்களோடுடனாய்நின்று முதல்வனவ்வாறு மூவகையுமாய் நிற்பனென்றதற்குப் பிரமாணமென்னையென்னுங் கடாவையாசங்கித்து மேற்கோளைச் சாதித்தனுதலிற்று.

(இ-ள்) அத்துவிதமென்ற சொல்லினகரம்-இன்மை, அன்மை, மறுதலையென்னு மூப்பொரு ளுணர்த்துமன்றே யவற்று ளின்மைப்பொருள்பற்றியத்துவிதமென்ற மொழிமாத்திரையானேயொருபொருளென்றல் பொருந்த முடைத்தெனிற் றானே தன்னையொன்றெனக் கருதல் வேண்டாமையி னவ்வாறு கருதும்பொருள் வேறுண்டென்பது பெறப்படுதலானும், எண்ணுப்பெயர்மேல் வந்தநகரம் அன்மைப்பெயர் மாத்திரையே யுணர்த்திப்பொதுமையி னிற்பதன்றி யேனைச்சொற்களின்மேல் வந்தநகரம்போல வின்மைமறுதலைப் பொருள்களையுணர்த்துதல் வழக்கின்கணின்மையி னத்துவிதமென்கின்றமொழிதானே பிரதிகாரணம் வேண்டாது வேறின்மையை யுணர்த்தி நிற்குமாகலானும், ஈண்டிவ்வான்மாக்கள் பலவு முதல்வன் றானேயாய் நிற்குமென மேற்கொண்ட தென்றவாறு. ஆகலானென்பதற் காயிட்டென்பது அக்கால வழக்குப்போலும். அற்றாகலினன்றே "நீயோ செய்யாய் நின்மலனாயிட்டு" என்றார் வழிநூலாசிரியரும். இனிமழைபெய்து குளநிறைந்ததென்புழிப்போல, ஆயிடலானென்பது ஆயிட்

டெனத்திரிந்து நின்றதென்றலுமொன்று. எண்ணும்மை விரித்துரைக்க. வேறின்றி யுடனாய்நிற்றல் பெறப்படவே, பொருண்மையாற் பேதமெனபதூஉந் தாமேபோதருமென்பது கருத்து.

வெண்பா.

கட்டுமுறுப்புங் கரணமுங் கொண்டுள்ள ... ...*
மிட்டதொரு பேரழைக்க வென்னென்றுங்-கொட்டி*
யவனுளமா கில்லா னுளமவனு மாட்டா ... ...*
தவனுளமா யல்லனுமா மாங்கு. ... ... .. (க)

சட்டு-ஆங்கு-எ-து-உ-ம்-எ-னின். ஒருபொருண் மூவகையியல்பை யுடைத்தாதல் யாங்ஙன மென்னுங் கடாவை யாசங்கித் தவற்றுளவையே யாதலே யுவ்மை முகதகான் வலியுறுத்துத னுதலிற்று.

(இ-ள்.) உள்ளங்கட்டு முறுப்புங் கரணமுங் கொண்டு - உயிர் நரம்பு முதலிய வற்றாற் பிணிக்கப்படு முடம்பினையு மைம்பொறி முதலிய கருவிகளையுங் கைக்கொண்டு நின்று - இட்டதொரு பேரழைக்க வென்னென்றுங்கு-எ-து- சாத்தா கொற்றவென வுடம்பிற் கிட்ட பெயராற் பிறரழைத்தவழி, தானென்னையெனவந்து நிற்றல் காண்டுமன்றே, இருவர் கைகோத்து நின்றுழியு மவரு ளழைக்கப்பட்டோனேயன்றி யேனை னென்னையென்ற னுலகத்தின் மையி னவ்வாறன்றி யுடம்பின்பெயரா னழைத்தவழி யுயிரொன் னென்றற்குக் காரணம் பிறிதோராற்றாற் பெறப்படாமையின் அருத்தாபத்தி யளவையானே யவ்வுயிருடம்பெனத் தானென வேற்றுமையின்றிய பேதமாய் நிற்றல் பெற்றாமதுபோல - ஒட்டி - எ - து - முதல்வ னுயிர்களி னபேதமாயொட்டி நிற்போனும் - அவனுளமாகில்லா னுளமவனுமாட்டாதவனுளமாயல்லனுமா மாங்கு - எ - து - அவ்வாறொட்டிய வழி யுயிருயிரே யுடம்புடம்பே யுயிருடம்பா யொழியாதுடம் புயிராக மாட்டாது. அவ்வாறுயினு முயிருடம்பாயு மதனின் வேறாயு நிற்கும்,உடம்பங்ஙன நில்லாது. அதுபோல, முதல்வன்முதல்வனே யுயிருயிரே முதல்வனுயிரா யொழியானுயிர் முதல்வனாகமாட்டாது, அவ்வாறுயினு முதல்வனுயிராயுமதனின் வேறாயுநிற்பன் உயிரங்ஙன நில்லாது - எ - று.

அவனுளமாகில்லா னுளமவனுமாட்டா தவனுளமாயல்லனுமா மாங்கு-எ-து-ஒன்றாயுமொன்றன்மைக் கனுபவங் காட்டியவாறு. உறுப்பு - ஆகுபெயர். எவனென்பதென்னென மரீஇயிற்று. ஒட்டியென்பது பெயர். வினையெச்சமாகக்கொள்ளிற் சிறப்பும்மை விரித்துரைக்க. ஒட்டுதல்-பொருந்துதல்-ஆங்கு-அதுபோல.

வெண்பா.

ஒன்றென்றதொன்றேகா ணொன்றேபதிபசுவா ... *
மொன்றென்றநீபாசத் தோடுளேகா-ணொன்றின்றா *
லக்கரங்களின்றா மகரவுயிரின்றே ... ... ... *
லிக்கிரமத்தென்னு மிருக்கு. ... ... ... (உ)

ஒன்றென்ற-இருக்கு- எ-து-உ-ம்-எ-னின் - வேதத்துளத்துவித மென்பதூஉமன்றி யேகமெனவுமோதுதலி னதற்கு மறுதலையாயுயிர்களோடொட்டி நிற்பனெனப் பேதப்படக்கூறுத லென்னை யென்னுங் கடாவையாசங்கித் தச்சொற்குத் தாற்பரியங்கூறுமுகத்தாற் றனேயாதலே வலியுறுத்த றுதலிற்று.

(இ-ள்) இருக்கொன்றென்ற தொன்றேகாண்-எ-து-வேதம் ஒன்றென்பதற்குப் பொருளொன்றென்பதேயாம் வேறுபொருள்படாது-ஒன்றேபதி-எ-து-அதற்குத் தாற்பரியம் பதிப்பொருளொன்றே யிரண்டல்லவென்பதாம்-பசுவாமொன்றென்றநீ-எ-து-இஃதறியாதொன்றென்று சொல்லுகின்றநீ யப்பதிப்பொருளின் வேறாய பசுவென்றறிவாயாக - பதியுஞ்சேதனமாக, யானுஞ்சேதனமாக, என்னைப்பசுவென்றதென்னையெனின், பாசத்தோடுளேகாண்-எ-து-நீ மலத்தோடு கட்டுற்று நின்றாயாகலிற் பசுவெனப்பட்டனை- அற்றே லிவ்வாறு வேற்றுமைகூறிற் பிரமமில்லையாயி னொருபொருளு மில்லையென்னும் வேதத்திற்குத் தாற்பரியமென்னையெனின், ஒன்றின்றாலக்கரங்க ளின்றாமகரவுயிரின்றே லிக்கிரமத்தென்னும்-எ-து-அகரவுயிரில்லையாயி னக்கரங்களில்லையாமென்னு மிம்முறைமைபற்றி வேதம் பிரமப்பொருளில்லையாயி னொருபொருளு மில்லையென் றோதுமத்தனை - எ-று. ஒன்றின்றா லக்கரங்களின்றா மகரவுயிரின்றே லிக்கிரமத்தென்னும் - எ - து-வேறாகியும் வேறன்மைக் கனுபவங் காட்டியவாறு. இக்கிரமத்தாலென வுருபுவிரித்துரைக்க. இன்றென்னு மொருமை பண்பின் மேனின்றது காணென்பதனை மேலே கூட்டுக.

வெண்பா.

பண்ணையு மோசையும் போலப்பழமதுவு ... ...*
மெண்ணுஞ்சுவையும்போ லெங்குமா - மண்ணன்று *
ளத்துவிதமாத லருமறைகளொன்றென்று ... *
தத்துவிதமென்றறையு மாங்கு. ... ... ... (கூ)

பண்ணை-ஆங்கு-எ-து-உ-ம்-எ-னின், வேதமேகமாய பிரமத்தை யேகமென்றொழியாது பிரமமத்துவிதமெனவு மோரோவிடங்களி னோதுதலி னத்துவிதமிருபொருட் கண்ணதென்பார்க்கேகமாய பிரமத்தை யத்துவிதமென்றல் பொருந்தாதாய் முடியுமென்னுங் கடாவையாசங்கித் ததனைநீக்கு முகத்தானே யவையேதானே யாதலை வலியுறுத்துத லுதலிற்று.

(இ-ள்) பண்ணையு மோசையும்போலப் பழமதுவு மெண்ணுஞ்சுவையும்போ லெங்குமா மண்ணன்றுளத்துவிதமாதல்- எ-து-பண்ணு மதனின்வேறன்றி யெண்ணப்படு மிசையும்போலவும், பழமுமதனின்வேறன்றி யெண்ணப்படுஞ் சுவையும்போலவும், யாங்கணும் வியாபகமாய முதல்வன் றிருவருளானுயிர்களின் வேற்றுமையின்றி நிற்பதாகலான் - அருமறைகளொன்றென்று தத்துவிதமென்றறையு மாங்கு-எ-து- வேதங்களேகமென்றுமற் பிரமமத்துவிதமென் றவ்வவ்விடங்களிற்கூறும்-எ-று.

ஆண்டுப் பிரமமத்துவிதமென்றது-பிரமமுயிர்களின் வேற்றுமையின்றி நிற்குமென்னும் பொருட்டாகலா னஃதேக மென்பதனோடு முரணுமாறில்லையென்பதாம். பண்ணையென்னு மைகாரம் பகுதிப் பொருள்விகுதி. பண்பாய்ப்பண் முதலாயின எங்குமண்ணன்றெ‌ன விசேடித்தது. குணகுணிகள் போலுடனாயு மவ்வா றுடனாகாமைக் கனுபவங்காட்டியவாறு. வியாப்பிய வியாபகமாத லொப்புமைமாத்திரையே பற்றிக் குணகுணிகளை யுவமைகூறினா னென்பது.

வெண்பா.

அரக்கொடுசேர்த்தி யணைத்தவக்கற்போ ... ...*
லுருக்கியுடங்கியைந்து நின்று-பிரிப்பின்றித் ... *
தானேயுலகாந் தமியேனுளம்புகுதல் ... ... ...*
யானேயுலகென்ப னின்று. ... ... ... ... (சு)

அரக்கொடு-இன்று-எ-து-உ-ம்-எ-னின், இங்ஙனம் வெவ்வேறு வமையெடுத்துக்காட்டின னேகாந்தவாதமா மென்னுங் கடாவை யா சங்கித்து, அஃதாகாமை யுவமைமுகத்தான் விளக்கி மூன்றனையுமொ ருங்கே வலியுறுத்துத னுதலிற்று.

(இ-ள்) உருக்கியரக்கொடு சேர்த்தியணைத்தவக் சற்போலுடங் கியைந்துநின்று பிரிப்பின்றித் தானே யுலகாம்-எ-து - அரக்கையுரு கசி யதனோடு சேர்த்தணைத்த கற்பொடி யவ்வரககினோ டொன்று யொருங் கியைந்து நீக்கமின்றி நின்றாற்போல முதல்வனுயிர்களினொ ருங்குகூடிநின்று நீக்கமின்றி யுடனாகலாற் றானேயாம்-உலகேயாந்தா னே யுலகேயாம், அற்றேல் வாமதேவமுனிவன் முதலியோர் யானே யுலகெல்லாமாயினேனெனக் கூறுதலானும், சர்வஞானோத்தரத்தில் யானே யெல்லாமா யல்லனுமா யுடனுமாய் நின்றேனென் றுயிர்கண் மேல்வைத் தோதுதலானும் உயிர்களு மிவ்விலக்கணத்தன வாவான் செல்லும்போலுமெனின்; தமியே னுளம்புகுதல் யானே யுலகென்ப னின்று-எ-து-அம்முதல்வன் பாசக்கூட்டத்தினீங்கித் தனியாய்நின்ற வென்னகத்துச் சோகம்பாவனையாற் புகுந்து வேற்றுமையின்றித்தோ ன்றலான் யானே யுலகெல்லாமென்பே னுயினே னிம்முத்திக்காலத் தாகலி னதுபற்றி யுயிர்களு மவ்வாறாவான் சேறலின்று-எ-று.

அதுபற்றி யுயிர்களு மவ்வாறாவான் சேறலின்றென்பது குறிப் பெச்சம். இவ்வேற்றுமைபற்றி யன்றே, அருச்சுனற்குக் கீதைநூல் செவியறிவுறுத்த கண்ணன்யானே யுலகெல்லா மாயினேனென்றதூஉ ம், முதல்வனது விசுவரூபதத்தைத் தான்காட்டியதூஉம், ஏனையவற் றைக் கைவிட்டு என்னையே வழிபடுகவென்றதூஉம், அதனையுறுதியா கக்கொண்ட அருச்சுனன் அவன் கூறியகருத்து நோக்கிச் சாங்காறு ஞ்சிவபூசை செய்ததூஉம், கண்ணன் மேலிட்ட போதுக்கள் முதல் வன் றிருமுடிமேற் கண்டதூஉமென்க. கண்ண னுபமன்னியமுனிபா ற் சிவதீக்கையுற்றுத் தன்னையுந் தலைவனையு முணர்ந்தோ னாகலிற் சோகம்பாவனையைத் தலைப்பட்டோனாதலறிக. கலப்பானிற்றலா னுல கேயாமென்பார் உடங்கியைந்து எனவும், 'பொருட்டன்மையால்வே று நிற்றலாற்றானே யாமென்பார் நின்றெனவும், உயிர்க்குயிராய் நிற் றலாற்றானே யுலகாமென்பார் பிரிப்பின்றி யெனவுங் கூறினார். ஈண் டு மிரட்டுறமொழிந்து கொண்டுரைக்க இன்றியென்னுஞ் செய்வெ

னெச்சக்குறிப்பு - மழைபெய்து குளநிறைந்த தென்புழிப் போலக் காரணப்பொருட்டாய் நின்றது. இவ்வதிகரணத்தானே பேதமென்றும் அபேதமென்றும் பேதா பேதமென்றும் பிணங்குஞ் சமயிகளை யெல்லாமறுத் தம்மூவகையியல்புந் தன்கட்டோன்றி நிற்கு மத்துவித த்துண்மை யேதுக்களானு முவமைகளானு முணர்த்தியவாறு. புடை நூலாசிரியரு மிவ்வதிகரணப் பொருளே பற்றி "புறச்சமயத்தவர்க் கிருளாய்த் தெரிக்கலுற்றும்" எனவெடுத் தோதினர். முதலதிகரண முடிந்தது.

---

## இரண்டாமதிகரணம்.

---

இனி யிவ்வான்மாக்களுக் கிருவினை முதல்வனாணையின் வருமென்றது-எ-து-மே-ள்-எ-னின். முதல்வ னவ்வா றுயிர்களோ டியைந்து நின்று புனருற்பவஞ் செய்யுங்கா லுலகத்துக்குப்போல அவனுக்கு த் துணைக்காரண முதலியன வேண்டப்படுமோ படாவோ வென்னு மையப்பாட்டின்கண் முதல்வனது சுதந்திரத்திற்கு மளவிலாற்றற்கு மிழுக்காய் முடியுமாகலி னவனுக்கவை வேண்டப்படாவெனப் பரிணு மவாதிகள் கூறுங்கடாவை யாசங்கித்துச் சூத்திரத்தி னிரண்டாங் கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோட னுதலிற்று.

(இ-ள்.) வெ-ட.

ஈண்டிருவினை யென்றது முற்பிறவிகளி னீட்டப்பட்டு மாயையிற் கட்டுப்பட்டுக் கிடந்த புண்ணிய பாவங்களையென்க. எனவேமாயையி னுண்மையும் பெறப்பட்டது. இவை வேண்டப்படுதல் பற்றி முதல்வன் சுதந்திரத்திற் கிழுக்கில்லை யென்பார் முதல்வனாணையின் வருமென்றார்.

ஒரு நகரியைக் காப்பான் பாடி காவலிட்டாங்கவை யவன தாக்கினை யாகலான்-எ-து-மே-ள்-எ-னின். ஆணையே யமையு மிருவினை யெற்றுக் கென்னுங் கடாவை யாசங்கித்து மேற்கோளைச் சாதித்த னுதலிற்று.

(இ-ள்.) ஒருபட்டணத்தைப் புரக்கும் வேந்தன் பாடிகாவற்றொழிலைக் களைகணுவா னொருவன்மாட்டு வைத்தாற்போல வெல்லாவறிவு முதன்மை யனுக்கிரகங்களுடைய வம்முதல்வன்புனருற்பவத்தைச்

செய்வதாகிய தனதாணையை யவ்விருவினை கண்மாட்டுவைத்து நடா த்துதலே முறைமையாகலா னினியிவ்வான்மாக்களுக்கிருவினைமுதல் வனாணையின் வருமென மேற்கொண்ட தென்றவாறு.

முதல்வன் செய்யுஞ் செய்தியெல்லா முலகத்தோடொப்ப நிக ழ்வனவாகலி னிண்டைக்கரசன் செய்தி யுவமை யாயிற்று. பாடிகாவ லாவது - களைகணுவா னொருவனைக் கொண்டு வேந்தன் செய்விப்ப தொருதண்டத்தொழில் விசேடம். அது "கோடிகாவனைக் கூறுநா ளொலாம் - பாடிகாவலிற் பட்டுக்கழிவரோ" என்னுந் திருப்பாட்டா னுமறிக. இஃதறியாதார் தத்தமக்கு வேண்டிய வாறெல்லா முரைப்ப.

வெண்பா.

உள்ளதே தோற்ற வுயிரணையு மவ்வுடலி ... ...*
னுள்ளதா முற்செய்வினை யுள்ளடைவே-வள்ளலவன்
செய்பவர்செய்திப் பயன்விளைக்குஞ் செய்யேபோற்*
செய்வன் செயலணையா சென்று. ... ... (௫)

உள்ளதே - சென்று-எ-து-உ-ம்-எ-னின். வினையுண்டென்பதற் கு மதுவே யுயிர்க்குப் பானாய் வருமென்றற்கு மேல் வினையேறுமா ற்றிற்குமது முதல்வனை யின்றி யமையாமைக்கும் பிரமாண மென்னை யென்னுங்கடாவை யாசங்கித் தேதுவை வலியுறுத்துதனுதலிற்று.

(இ-ள்.) உள்ளதே தோற்ற-எ-து- இல்லது தோன்றா தென்பது மேற்கூறிப் போந்தமையான் முன்னுள்ளதாய புண்ணிய பாவமென் னு மிருகூற்றுச் சஞ்சிதவினையே தன்பயனாகிய வின்பதுன்பங்களையு மவை நுகர்தற்குரிய நிலைக்களமாகிய வுடம்பினையுந் தோற்றுவிப் ப - உயிரணையு மவ்வுடலின்-எ-து-அவ்வின்ப துன்ப நுகர்ச்சி சட் த்துக்குக் கூடாமையிற் சித்தாகிய வுயிரே யவ்வுடம்பிற் பொருந்தி யவற்றை யனுபவிக்கும்;-முன்வினையை யீண்டனுபவித் தொழிந்தான் மேலைக்கு வினையுண்டாமாறி யாங்ஙனமெனின், உள்ளதா முற்செய் வினை யுள்ளடைவே-எ-து-முன்செய்தவினை யனுபவித்தற் கேதுவா ன முறைமையிலே மேலைக்கு வினையுளதாம்; அற்றே லவ்வினையே பயனாகவருமென வமையு மம்முதல்வ னென்றுக்கெனின்;செய்பவர் செய்திப்பயன்விளைக்குஞ் செய்யேபோல்-எ-து-உழவர் செய்யுந்தொ ழிற்குத்தக்க பயனை விளை நிலம் விளைவிப்பதன்றி யத் தொழிலுனே

விளைவிக்க மாட்டாததுபோல - வள்ளலவன் செய்வன்-எ-து- உணவும் விதுதுமாய்த் தொன்று தொட்டுவரு மவ்வினைகள் வள்ளலாகிய முதல்வனே யவ்வுயிர்கட்குக் கூட்டுவன் - செயலணையா சென்று-எ-து-அவ்வாறன்றி வினைதானே யுயிர்கட்குப் பயனாய்வந்து பொருந்தமாட்டாது-எ-று.

வள்ளலென்றார் தற்பயன் குறியாது வேண்டுவார் வேண்டியவாறே நல்கு மருளுடைமை நோக்கி. உள்ளடைவு - உள்ளுதற் கேதுவாகிய வடைவெனவிரியும். ஏகாரம் ஏழாவதன் பொருட்கண் வந்தது. உள்ளுதல் - ஈண்டனுபவித்தல். அதற்கேதுவாகிய முறைமையாவன - அனுபவித்தற்குத் துணைக்காரணமாகிய விருப்புவெறுப்புக்கள் அவற்றின்கணுண்டாமாறு முன்னர்க்காட்டிதும். மேல்முதல்வனுக்கு வினை வேண்டப்படு மென்பதற் கரசனை யுவமை கூறினார். ஈண்டுவினை முதல்வனை யின்றியமை யாதென்றுணர்த்துதற் குழவுத்தொழிலை யுவமை கூறினானெனக்கொள்க.

வெண்பா.

அவ்வினைஞர் தாஞ்சென்ற வவ்வினையைச்செய்வதனி*
னவ்வினையைக்காந்த பசாசம்போல- வவ்வினையைப்*
பேராமலூட்டும் பிரானி னுகராரோ............... *
லார்தாமறிந்தணைப்பா ராங்கு.................. (௬)

அவ்வினை - ஆங்கு-எ-து-உ-ம்-எ-னின். இருவினை சடமாதலிற் சென்றணைய மாட்டாவாயினு முயிர்கள் சேதனமாகலி னவையே யவற்றது பயனையறிந் தெடுத்துக்கொண்டு நுகரும் வள்ளலெற்றுக் கென்னுங்கடாவை யாசங்கித் ததனை வலியுறுத்துத் னுதலிற்று.

(இ-ள்.) காந்த பசாசம்போல-எ-து-ஒருவனையெடுத்து நேரோபிடித்தவழி யிரும்பினை வலித்துக்கொள்ளுங் காந்தம்போல- அவ்வினையைப் பேராமலூட்டும் பிரானின்-எ-து-அவ்வினைப் பயன்களைப்பிறழாமனுகர்விக்குமுதல்வனல்-அவ்வினைஞர்தாம்-எ-து-அவ்வினைகளைச்செய்யுமான்மாக்கடாம்-அவ்வினையைச்செய்வ தனிற்சென்ற வவ்வினையை நுகராரே லார்தாமறிந்தணைப்பார்-எ-து-அவற்றைச்செய்தற்கு நிலைகளமாகிய வுடம்பின்கட் பொருந்தியவற்றது பயனையனுபவிப்ப ரவ்வாறனுபவியாராயின் வேறேயெவர்தா மவற்றையறிந்து கூட்டுவர். ஆ

க்கு-எ-து-அறிவுஞ் சுதந்திரமுமின்றி மலத்தின் மறைப்புண்டு கிடக்குமப் பெத்தக்காலத்து-எ-று.

ஒருவருமில்லை யென்பதாம். ஆன்மாக்களுக்குத் தமக்கென அறிவின்மையானும், வினைசடமாகலானும், மாயை "தாரகமாமத்தன்றுணிற்றல்" எனப்போந்தமை யானும் முதல்வனே யறிந்தணைப்பனெனப் பாரிசேடவளவை கூறுவார் "பிரானினுகராரோ லார்தா மறிந்தணைப்பார்" என்றார். இதுசொற்பொருட் பின்வருநிலை.

வெண்பா.

நெல்லிற்குமியு நிகழ்செம்பி னிற்களிம்புஞ் ... *
சொல்லிற்புதிதன்று தொன்மையே-வல்லி... ...*
மலங்கன்மமன்றுளவாம் வள்ளலாற்பொன்வா... *
ளலர்சோகஞ் செய்கமலத்தாம். ... ... ... (எ)

நெல்லிற்கு - ஆம்-எ-து-உ-ம்-எ-னின்-அவ்வினை யாதியோ வநாதியோ, ஆதியெனின், முன்பில்ல திடையே தோன்று மென்பது சற்காரியவாதத்திற் கேலாது, அநாதியெனின்ஒருவர்கூட்டவேண்டுவ தில்லையென்னுங்கடாவை யாசங்கித் ததனை வலியுறுத்துத னுதலிற்று.

(இ-ள்.) நெல்லிற்குமியு நிகழ்செம்பி னிற்களிம்புஞ் சொல்லிற் புதிதன்று தொன்மையே-எ-து-நெல்லின்க ணுமியுஞ் செம்பின்கட்களிம்பு மெக்காலத்துளவாயினவென் றாராய்ந்து சொல்லுங்கா லந்நெல்லுஞ் செம்புமுளவாயினவன்றே யுள்ளனவன்றி யிடையே வந்தனவல்ல வதுபோல - வல்லி மலங்கன்ம மன்றுளவாம்-எ-து-மாயை மலங்கன்மமென்னு மும்மலங்களு மநாதியே யுள்ளனவாம். பொன்வாளலர் சோகஞ்செய் கமலத்து வள்ளலாலாம் - எ-து - முன்னே யுள்ளதாயதாமரைப்பூ வலர்தலுங் கூம்புதலு ஞாயிற்றினாற் செய்யப்படு மாறுபோல வவைதத்தங் காரியங்களைச் செய்தன் முதல்வனாலேயாம்-எ-று.

இஃதெடுத்துக் காட்டுவமை. புதிதன்றென்பதனைத் தனித்தனி கூட்டுக. தொன்மையிலுள்ளவற்றைத் தொன்மையென் றுபசரித்தார். ஏகாரம்-பிரிநிலைக்கண் வந்தது. மாயை யிறைவனுக்குப் பரிக்கிரகசத்தியாகலின் வல்லியென்றார். வினைக்குந் தொன்மைகூறுவா ரிணம்பற்றி மாயைமலங்களுக்குந் தொன்மைகூறினர். மூலமலத்தின் காரியம்-மோகந்தமமுதலாயின. இருவினையின்காரியம்-இன்பதுன்பமுதலாயி

ன. மாயையின்காரியந் தனுகரணமுதலாயின. வளளலாலாமெனவே, திரோதான சத்தியதுண்மையும்பெற்றாம். அது பாகம் வருதற்பொருட்டு மலத்தின்வழிநின்று மோகமுதலியவற்றைத் தொழிற் படுத்துவதாகிய சிவசங்கற்பத்திற் கேதுவாதல்பற்றி மலமென் றுபசரித்துக் கூறப்படும். இவ்வாறு மலங் கன்ம மாயை திரோதான மாயாகாரியமென்னுமை வகைப்பாசமுங் கண்டுகொள்க. இவற்றுண் மாயை சுத்தமாயை அசுத்தமாயையென் றிருவகைப்படும். இவ்விரண்டனுட் சுத்தமாயையின் காரியமே யசுத்தமாயை யென்பாரும், சுத்தமாயைபோல வசுத்தமாயையு மநாதியேயாமென்பாரும், ஒன்றுதானே யூர்த்துவமாயை யதோமாயையென் றிருவகைப்படுமென்பாரும், எனப் பலதிறத்த ராசிரியர். இனி முதல்வனது கிரியாசத்தியே சுத்தமாயையெனப்படு மென்பாருமுளர். அதுமுதல்வனுக்குத் தாதான்மியசத்தியாகலிற் பரிக்கிரகசத்தியாகிய சுத்தமாயையாதல் யாண்டையதென்றொழிக. சுத்தமாயையினின்றும் பஞ்சகலைகளு நால்வகைவாக்குஞ் சிவதத்துவமைந்துஞ் சுத்தகாலமுதற் சுத்தநிலமீறாகிய முப்பத்தொன்றுந்தோன்றும். அசுத்தமாயையினின்றும் அசுத்தகாலமுதல் அசுத்தநிலமீறாகிய முப்பத்தொரு தத்துவங்களுந் தோன்றும். இந்தத் தத்துவங்களெல்லாம் பொதுவுஞ்சிறப்பும் பொதுச்சிறப்பு மெனத் தனித்தனி மூவகைப்பட் டுயிர்கடோறும் வெவ்வே றுளவாம். கன்மமுநாசோற்பத்திபண்ணி வருமாதலா லநாதியென்பதுபற்றிப் பிரபஞ்சம்போலப் பிரவாகாநாதியென்பாரும் "ஏகனநேக னிருள்கருமமாயையிரண்-டாகவிவையாறுதியில்" எ-ம், "ஆணவமுதலன்றதுபோற் கருமமும்" எனவும், ஒப்பவோதுதல்பற்றி மூவகைவினைக்கு முதற்காரணமாய மூலகன்மமொன் றநாதிநித்தமா யுண்டென்பாருமென் றிருதிறத்தராசிரியரென்க. இவ்வினையீட்டப்படுங்காலம்-மந்திரமுதலியவத்துவாக்களிடமாக, மனம்வாக்குக் காயமென்னு மூன்றா னீட்டப்பட்டு, தூலகன்ம மாயா காமியமெனப் பெயர்பெற்று, பின்னர்ப் பக்குவமாங்காறுஞ் சூக்குமகன்மமாய், புத்திதத்துவம் பற்றுக்கோடாக மாயையிற்கிடந்து, சாதியாயுப் போகமென்னு மூன்றற்குமேதுவாய், முறையே சனகந் தாரகம் போக்கியமென்னு மூவகைத்தாய், அபூருவஞ் சஞ்சிதம் புண்ணியம் பாவமென்னும் பரியாயப்பெயர்பெற்று. பின்னர்ப்பயன் படுங்கால், ஆதிதைவிகம் ஆதியான்மிகம் ஆதிபௌதிகம் என்னு முத்திறத்தாற் பலதிறப்பட்டுப் பிராரத்தமெனப் பெயர்பெ

றும். ஆதிபௌதிகமாவது-சடம்வாயிலாகவருவது; ஆதியான்மிகமாவது-சடத்தொடுகூடிய சேதனம் வாயிலாகவருவது; ஆதிதைவிகமாவது-ஒருவாயிலானன்றித் தெய்வந்தானே காரணமாகவருவது. இன்னு மிவ்வினைகள்-உலகம் வைதிகா வைதிகம் அத்தியான்மிகம் அதிமார்க்கமென் றைவகைப்பட் டொன்றற்கொன் றேற்றமுடைத்தாய் முறையே நிவிர்த்திமுதலிய பஞ்சகலைகளி னடங்கி யசுத்தமிச்சிரமஞ் சுத்தமெனப்படும் போகங்களைப் பயப்பிக்குமென்றறிக. இரண்டாமதிகரண முடிந்தது.

---

## மூன்றுமதிகரணம்.

---

இனி யிவ்வான்மாக்கண் மாறிப்பிறந்து வருமென்றது - எ-து-மே-ள்-எ-னின். புனருற்பவஞ் சடத்துக்கன்றிச் சித்துக்கு முளதாயி னன்றே முற்செய்வினையே யீண்டைக்கு வருமென மேற்கூறியதமையும், அஃதுண்டோ வில்லையோவென்னு மையப்பாட்டின்கண், குடமுடைந்தவழிக்கு டாகாயமாகாயத்தோடு கூடுமாறுபோல உடம்பு நீங்கியவழி யுயிர் பிரமத்தோடுகூடுமென்னுஞ் சுருதிபற்றி யிறந்தவுயிர்மீளப் பிறப்பதில்லையெனக் கிரீடாப்பிரமவாதிகள் கூறுங்கடாவை யாசங்கித்து,சூத்திரத்தின் மூன்றுங்கூற்றைக் கண்ணழித்துக்கொண்டு மேற்கோட்டனுதலிற்று.

(இ-ள்.) வெ-டை.

வருதல் - தொன்றுதொட் டவ்வாறுதல். மாறுதல் - ஈண்டிறத்தலென்பது, "போக்குவரவுபுரிய" என்னுமூலத்தானும், ஏதுவுதாரணங்களோ டுளதாகிய வியைபானுமுணர்க. இஃதுணராது, அச்சுவேறுபடுதலென் றுரைப்பாரு முளர். அஃதீண்டைக்கியாது மியையாமையுணர்க.

தோற்றமுமீறுமுள்ளதற் கல்லதுளதாகலின்மையான் - எ. - து-மே-ள்-எ-னின். அதற்குப் பிரமாணமென்னையென்னுங் கடாவை யாசங்கித்து மேற்கோளைச் சாதித்தனுதலிற்று.

(இ-ள்.) உற்பத்தியு நாசமுந் தொடர்ச்சியாயுள்ள பொருட்கன்றி யேனைப்பொருட் குற்பத்திகூடாமையா னினி யிவ் வான்மாக்கண் மாறிப்பிறந்து வருமென மேற்கொண்டதென்றவாறு.

தோற்றமுமீறுமென்னு மும்மைகளை யெதிரதுதழீஇ யினவாகக் கோடலிற் றொடர்ச்சியாமென்பது போந்தவாறறிக. உளதாகல் ஈண்டுத்தோன்றுதல். இனி யிவ்வாறன்றிக் குடாகாய வுவமையைபற்றி யிருவினை யான்வரும் புனருற்பவ முயிரின்பொருட்டுச் சிவத்துக்கே யாமெனச் சிவாத்துவிதிகள் கூறுங்கடாவை யாசங்கித்தும், அம்மூலப்பகுதியிற் றோன்றும் புத்திதத்துவத்திற்கே யதுவெனச் சாங்கியர் கூறுங்கடாவை யாசங்கித்தும், மேற்கோடனுதலிற் றிவ் வதிகரணமெனக்கொண்டு, தோற்றமுமீறு மவ்வுரிமை யுள்ளதற்கேயன்றி யேனையவற்றிற் குளதாதலின்மையா னிவ்வான்மாக்களே மாறிப்பிறந்துவருமென மேற்கொண்டதென் றுரைப்பினுமாம். இப்பொருட் குரிமையென்பது அவாய்நிலையான்வந்தது. உளதாதலென்னுமொருமைதோற்றவீறுகளோடு தனித்தனியே சென்றியையும். ஆன்மாக்களேயென்னும் பிரிநிலையேகாரம் விகாரத்தாற் றொக்கது. இனி மாயாவாதி முதலியோர் மதத்தை மறுத்தற்பொருட்டு மேற்கொண்ட தென்பாருமுளர். அத்துவிதமென்ற சொல்லானே யவரைமறுத்தான் மாக்களைப் பெறுவித்தமையி னீண்டவர் மதம்பற்றிக் கடா நிகழ்தற்கோ ரியைபின்மையுணர்க.

வெண்பா.

கண்டநனவைக் கனவுணர்விற்றான்மறந்து ... ...*
விண்படர்ந்தத்தூடு வினையினாற் - கண்செவிகெட்...*
டுள்ளதேதோற்ற வுளமணுவாய்ச்சென்றுமனந் ...*
தள்ளவிழுங்கருவிற் றான். ........ (அ)

கண்ட-தான் - எ-து-உ-ம்-எ-னின். புனருற்பவமாங்காற்படு மியைபுகளுணர்த்தி யதனை வலியுறுத்துதனுதலிற்று. கண்செவிகெட்டுள்ளதேதோற்றவுள மத்தூடுவிண்படர்ந்து கண்டநனவைக் கனவுணர்விற்றான்மறந்து மனந்தள்ள வினையினா லணுவாய்ச்சென்று கருவில் விழுந்தான்-எனக்கொண்டு கூட்டுக.

(இ-ள்.) கண்செவிகெட்டுள்ளதே தோற்ற-எ-து-கண்செவி முதலிய வுறுப்புக்களையுடைய விவ்வுடம்புகெட்டவழித் தனக்குக்கேடின்றிப் படைப்புக்காலந்தொடங்கிச் சங்காரகாலமளவு நிலைபெற்றுள்ளதாகிய சூக்குமதேகம் பூதசாரவுடம்பு முதலியன வாய்க்காரியப்படஉளமத்தூடுவிண்படர்ந்து-எ-து-உயிரான தப்பூதசாரமுதலிய வுடம்

பின்கட்பொருந்தித் துறக்கநிரயங்களிற்சென் றனுபவித்துப் பின்னர்-கண்டநனவைக் கனவுணர்விற்றான்மறந்து-எ-து-நனவின்கட்கண்டவற்றைக் கனாக்காணுங்காலத்து மறந்தறிவு வேறுபட்டாற்போல முன்னைக் கண்செவிகெட்டவாறு முள்ளதே தோற்றவத்தூடு விண்படர்ந்தவாறு மாண்டனுபவித்தவாறுமாகிய வின்னோரன்னவற்றை மறந்தறிவு வேறுபட்டு-மனந்தள்ள வினையின லனுவாய்ச்சென்று கருவில்வீழுந்தான்-எ-து-முன்னுடம்பிறக்குங்கா லடுத்தவினைகாட்டு மக்கதிநிமித்தம்பற்றி யுயிரவாவுமாறுமனஞ்செலுத்துதலா னக்கதிக்கட் சேறற்கேதுவா யெஞ்சிநின்ற புண்ணியபாவசேடத்காற் சூக்குமதேகமாத்திரையாய்ச்சென்ற மனந்தள்ளிய கதிக்கடைந்த கருவின்கட்படுமென்றவாறு.

இன் - உவமவுருபு. தான் - அசை. மறத்தற்குச் செயப்படுபொருளவாய் நிலையான்வந்தது. விண் படர்ந்தென்னு முபலக்கணத்தா னிரயம்படர்ந் தென்பதூஉம் பெறுதும். படர்ந்தெனக்காரியத்தைக்காரணமாக வுபசரித்தார். அத்தூடென்புழி - அன்சாரியை விகாரத்காற்றொக்கது. பொருந்தியென்பது சொல்லெச்சம் - வினையாகுபெயர். உடம்பு நீங்கிப் போங்கால் முதற்கட்கெடுவன கண்ணுஞ்செவியுமாகலி னச்சிறப்பு நோக்கிக் கண்செவி கெட்டென்றுபசரித்தார். கெட்டவழியென்பது கெட்டெனத் திரிந்து நின்றது. ஐம்பெரும்பூதத்தின் காரியமெனப்பட்ட தூலவுடம்பு சூக்கும வுடம்பின் காரியமா மாறென்னை யென்னு மையநீக்குதற்கு உள்ளதே தோற்றவென்றார். ஏகாரந் தேற்றம், ஆகாயமுதலிய தூலபூதங்கள் சத்தமுதலிய சூக்குமபூதங்களின் காரியமாகலினது பற்றியேதன்மாத்திரைமயமாகிய சூக்குமவுடம்பிற் றோன்றுவதாய தூலவுடம்பு ஐம்பெரும்பூதமய மெனப் பட்டதன்றிப் பிறிதில்லை யென்பது. "பூதனாசரீரம் போனும் புரியட்ட ரூபந்தானே - யாதனாசரீரமாகி" எ-ம்- "சூக்குமவடிவதென்னிற் றூலகாரணமதாகும்" எ-ம்- "தூலமா முருவினுக்குச் சூக்குமமுதல்" -எ-ம்- "மாறியிவ்வுருவமெல்லாம் வருவதெங்கே நின்றென்னிற் - கூறிய சூக்குமத்தாம்" -எ-ம்- "விதிப்படிசூக்குமத்தே யுருவம்", எ - ம் - "மனுதிதருமுடல்" எ - ம் - வழிநூலாசிரியரு மிவ்வாறே கூறியவாறு காண்க. இஃதறியாதார் தத்தமக்கு வேண்டியவாறே யுரைப்ப. அதுகோன்றுங் காற்காலமூற்று நீக்கிடமாம்பின் வேரோர் நீண்மர நிகழ்த்துமாறுபோலச் சூக்

குமவுடம்பு கெடாது நிற்பத் தூலவுடம்பு வேறொரு குயியாமாரம் வீரசங்கிலியு மாதல்போல, வினைக்கீடாக வச்சு வேறுபட்டு, "ம திக்கெழு கலைகள்போல வருவதுபோவதாம்" எனவும் வழிநூலா சிரியர்கூறியவாற்றானறிக. அணு - சூக்குமவுடம்பு - தள்ள- தள்ளுக லானென்க. அக்கருவிலெனச் சுட்டுவருவிக்க. உள்ளதேதோற்றவெ ன்றதனால் உடற்றிரிவும், விண்படர்ந் தென்றதனால் இடத்திரிவும், கண்டநனவைக் கனவுணர்விற்றான் மறந்தென்றதனால் அறிவுத்திரி வும் பெறப்பட்டன. உள்ளதே தோற்றவென்றதனால்; புதிதுபுகி தாய்த் தோன்றுதல் பற்றிச் சற்காரிய வாதத்திற் கிழுக்கின்மையும்; அத்தூடு விண்படர்ந் தெனவும்; அணுவாய்ச்சென்று கருவில்விழு மெனவுங் கூறியதனாற் போக்குவரவுபற்றி வியாபகத்துக் கிழுக்கின் மையும், வினைச்சேடத்தா லென்றதனால், துறக்க நிரயங்களி னனுப வித்தொழிந்தமை பற்றிப் புனருற்பவ காரணத்திற் கிழுக்கின்மையும், மனந்தள்ள வென்றதனால், அஃதெஞ்சுதற் கேதுவுங் காட்டியவாறு. வேதத்துட் கூறப்படும் பஞ்சாக்கினி வித்தையி னியல்புணர்த்துவார் கண்செவி கெட்டவழி விண்படர்ந்து மறந்தணுவாய்ச் சென்றுகருவி ல் விழுமென்றார். பஞ்சாக்கினி வித்தையி னியல்பு - நீலகண்டபாடி யத்திற் காண்க. மறந்து விண்படர்ந்தெனக் கூட்டி யுரைப்பாருமுளர். துறக்க நிரயங்களிற் படர்ந் தனுபவிப் புழியறிவு திரியாமை புராண ங்களுட்காண்க.

வெண்பா.

அரவுதன்றோலுரிவு மக்கனவும்வேறு ... ... *
பரகாயம்போய்வருமப் பண்பும்-பரவிற் ... ... *
குடாகாயவாகாயக் கூத்தாட்டாமென்ப ... ... *
கடாதுள்ளம்போ மாறது. ... ... ... ... (௬)

அரவு-அது--எ-து-உ-ம்-எ-னின். உயிர்க்குப் புனருற்பவ மாகா மைக்கு வாதிகளாலெடுத்துக் காட்டப்படுங் குடாகாய வாகாய வுவ மைக்குப் பொருள்கூறி மேலதனை வலியுறுத்துத னுதலிற்று.

(இ-ள்.) அரவுதன் றோலுரிவு மக்கனவும் வேறுபரகாயம் போய் வரு மப்பண்பும் பரவில்-எ-து-கண்செவி கெட்டவழி யுள்ளதே தோ ற்றவத்தூடு விண்படர்தற்குப் பாம்புத்தோலுரித்துப் புதிதொரு தோ ல்போர்த்துச் சேறலும், புருடனனவுடம்பி னீங்கிக் கனவுடம்பிற் சே

றலும், யோகிகடம்முடம்பு நீங்கிப் பரகாயத்திற்சென்று மீட்லுமாகி ய விவ்வுவமைகண் மிக்கு வழங்குதற் கணிவற்றிற்குமாறாக - குடாகா யவாகாயக் கூத்தாட்டா மென்பதடாது-எ-து - குடவாகாயங் குடமு டைந்தவழி யாகாயத்தோடு கூடுமாறு போல்வதோர் கூத்தாட்டாமெ ன்று நீ கூறுதல் பொருந்தாது - உள்ளம்போமாறது-எ-து-சூக்குமவு டம்பு விட்டுப்போ மாற்றிற்கே யவ்வுவமை யாகலா னென்றவாறு.

எனவே உடல்விட்டுப் போமாற்றிற் கிவ்விருவகை யுவமைகளு மாகமங்களிற் கூறுதலினவை தம்முண் முரணுகவாறு. அரவுதன்றோ லுரிவு முதலியன தூலவுடல்விட்டுப் போமாற்றிற்கும், குடாகாயவுவ மை சூக்குமவுடம்பு விட்டுப்போமாற்றிற்கு மெனக்கோடல் பொருத் தமுடைமையின், அவ்வேறுபாடுணராது குடாகாய வுவமையுந் தூல வுடம்புவிட்டுப் போமாற்றிற்கே போலுமென மலையற்கவென மேலத னை வலியுறுத்த வாறுகாண்க. மேலைவெண்பாவில் "கண்டநனவைக் கனவுணர்விற் றன்மறந்து" என்றது - அறிவு வேறுபடுமுறைமைக் கெடுத்துக் காட்டியதெனவும், ஈண்டைக் கனவுமென்றது-அதனையே யுடல்வேறு படுமுறைமைக் கெடுத்துக்காட்டிய தெனவுந்தெரிந்துகொ ள்க. பரவு - முதனிலைத் தொழிற்பெயர். இல்லுருபு - தொழினிகழ் ச்சிக் கண்வந்த ஏழாவது. பரவுதல் எல்லார்க்கும் புலனுமாறுமிக்கு நிகழ்தல். ஈண்டுள்ளமென்றது சூக்குமவுடம்பை. போமாற்றிற் சென் று நான்காவது விகாரத்தாற் றொக்கது, "ஐந்தவித்தானாற்றல்" என் புழிப்போல. குளவாம்பல் குளாம்பலென மரீ இயினாற்போலக் குட வாகாயங் குடாகாயமென மரீ இயிற்று. ஆகாயக் கூத்தாட்டென்ப து வமத்தொகை. இதனை யும்மைத்தொகை யாகக்கொண்டு, குடாகாய வாகாயமுங் கூத்தாட்டும்போ லென்றுரைப்பாரு முளர். மூன்றாம திகரண முடிந்தது.

---

## நான்காமதிகரணம்.

---

இனி நீக்கமின்றி நிற்குமன்றே-எ-து-மே-ள்-எ-னின். அங்ஙனம் புனருற்பவமாதற் கேதுவா யிருவினைகளைச் செலுத்தி நிற்பதெனப் போந்த ஆணையெனப்படுஞ் சத்தியாவது, முதல்வனின் வேறாயவன் றாமென்னு மையப்பாட்டின் கட்பொருட்குச் சத்திவேறென்னு மீ

மாஞ்சகர் முதலியோர் மதமும், அன்றென்னு நையாயிகர் முதலியோர் மதமும்பற்றி நிகழுங்கடாவை யாசங்கித்து, சூத்திரத்தி னிறுதிக்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோட னுதலிற்று.

(இ-ள்) முதல்வன் றனதாணையாகிய சிற்சத்தியோடு சமவேதமாய் நிற்பனென்றவாறு. அன்னியயோக விவச்சேதம், அயோக விவச்சேதமென்றற் றொடக்கத்து வடசொற்கள் - பிறிதினியைபு நீக்குதல் இயைபின்மை நீக்குதலென்றற் றொடக்கத் தனவாக மொழிபெயர்த்து வழங்கப்படு மாறுபோல, சமவாயமென்னும் வடமொழி - தமிழின்க ணீக்கமின்றி நிற்றலென மொழிபெயர்த்து வழங்கப்படுமென்றுணர்க. வடமொழியிரண்டாஞ் சூத்திரத் திறுதியின் ஆணையின் முதல்வனோடு சமவேதமாய் நிற்குமென வாணைமேல் வைத்தோதியதனை யீண்டு முதல்வன்மேல் வைத்தோதினர். கண்ணழிப்புழி யிருவினை முதல்வனாணையின் வருமெனக் கூறிப்போந்த வாணையீண்டுக் கூறுமையே யினிதுவிளங்கு மென்னுங் கருத்தாற் சொற்பல் காமைப் பொருட்டதனையொழித்தெடுத்துக் கொள்ளப்பட்டது. இப்பொருள் காணமாட்டாதார் சர்வவியாபியாய் நிற்றலானென்னு மேதுவின் பொருளே மேற்கோளுக்கும் பொருளாகக் கொண்டுரைப்ப. அதுகூறியது கூறலாதலுமன்றி மொழிபெயர்த்தல் யாப்பிற்கேலாமையுமறிக. ஈண்டுச் சமவாயமென்றது - தாதான்மிய சம்பந்தத்தை. அஃதாவது பொருளா னொன்றே யாயுமொரு வாற்றாற் பேதமாதற் குரிமையுடைமை.

அவனே கானேக மிரண்டு மின்றிச் சருவவியாபியாய்நிற்றலான் எ-து-ஏது-எ-னின். அதற்குப் பிரமாணமென்னை யென்னுங்கடாவை யாசங்கித்து மேற்கோளை வலியுறுத்துத னுதலிற்று.

(இ-ள்.) அம்முதல்வன் ஒன்றே வேறே யென்னு மிருதன்மையுமின்றி யவ்விரண்டற்கும் பொதுவா யெங்கணும் வியாபியாய் நிற்றலானினி யாணையி னீக்கமின்றி நிற்குமன்றேயென மேற்கொண்ட தென்றவாறு.

அவினுபாவ முணர்த்துவார் ஏகானேக மிரண்டுமின்றியென மேற்கோளிற் போந்தபொருளை யனுவதித்துச் சருவவியாபியாய் நிற்றலானென வேதுக்கூறினர் சருவவியாபியாய் நிற்றல் " அவையேதானே

யாய் ,, என்று மதிகரணத்தாற் சாதிக்கப்பட்டமையின், அதனையீண் டேதுவாகவைத்து, ஆணையினீககமின்றி நிற்குமென்னு மேற்கோளை ச்சாதித்தவாறு.

வெண்பா.

எங்குமுளனென்றளவை யொன்றன்றிரண்டென்னி
னெங்குமுளனன்றெவற்றெவனு - மங்க ... ...*
ணவையவனன்றில்லைப் பொன்னொளிபோலீச ... *
னவையுடைமையாளரா மங்கு. ... ... ...(ய)

எங்குமுளன்-அங்கு-எ-து-உ-ம்-எ-னின். எதுவுமேற் கோளுந் தம்முளவி நாபாவமாமாறி யாங்ஙனமென்னுங்கடாவை யாசங்கித் ததனை வலியுறுத்துதனுதலிற்று.

(இ-ள்) எங்குமுளனென்றளவை யொன்றன்று-எ-து-யாங்கணு மவையேதானே யென மேற்கூறிய வளவையானே முதல்வனொரு பொருளாதல் கூடாதென்றவாறு. ஒன்றாயிற் கங்கைக்கரையினின்ற வொருமானுடனே காவிரிக்கரையினு மொருங்கு நிற்கமாட்டா னது போல வொருபொரு ளோரிடத்துளதாதலன்றி யாங்கணும் வியாபி த்து நிற்கமாட்டாதென்பதாம். இரண்டென்னி னெங்குமுளனன்று- எ-து-அற்றேல் முதல்வனிருபொருளாய் நிற்குமெனக்கோடுமெனின், யாங்கணு மவையேதானே யாயுளனாதல் கூடாதென்றவாறு. தன் மாட்டே வேற்றுமையுடையானுக்குப் பிறபொருள்களின் கண்வேற் றுமையின்றி வியாபித்துநிற்றல் சாலாதென்பதாம். அற்றே லவ்விர ண்டொடு முரணுதலின் எங்குமுளனல்லனெனக்கோடுமெனின், எவ ற்றெவனு மங்கணவை யவனன்றில்லை - எ-து - எவ்விடங்களினுள்ள வெத்திறப்பொருளுமாகி யவ்விடத்தவைகளெல்லா மகரவுயிரின்றே லக்கரங்களில்லையா மாறுபோல வம்முதல்வனை யின்றியமையாவாக லா னெங்குமுளனல்லனென்றல் பொருந்தாதென்றவாறு. ஆகலா னெங்குமுளனல்லனென்றல் பொருந்தாதென்பது குறிப்பெச்சம். அற்றேல், வேறுவிடுக்குமாறென்னையெனின், பொன்னொளிபோலீச ன்-எ-து-எங்குமுளனாகிய முதல்வன் ஞாயிறுமொளியும்போல வொ ன்றுதற்கு மிரண்டாதற்கும் பொதுவாய்த்தா தான்மியத்தாற்சிவமு ஞ் சத்தியுமென் றியைந்துநிற்கு மென்றவாறு. அற்றேற் பசுபாசங் களும் வியாபகமெனக் கோடலினவையு மிம்முறைமையற்றி யேகா

நேகமிரண்டுமின்றி முதல்வன்போலத் தத்தஞ்சத்திகளோடு தாதான்மியமாய் நிற்குமென்பது பெறப்படுதலான் முதல்வனோடு சமமாவானெல்லுமெனின், அவையுடைமையாளாகாமங்கு-எ-து- அவ்வாறாயினு முதல்வனது வியாபகத்தைநோக்கி வியாப்பியமாகலி னப்பாசங்களுடைமையாம், பசுக்களாகிய நாமடிமையாவேம் அம்முதல்வன் மாட்டென்றவாறு.

அன்றெனப்பாட மோதுவாருமுளர். பாசங்களுடைமையாமாறும், பசுககளடிமையாமாறும், "தாரகமாமத்தன்றனிற்றல்" எ-ம், "அக்ஙிலீறலாவொன்று பலவாறேதொழும்பாகும்" எ-ம், மேற்பெறப்பட்டமையின், அவற்றையீண்டெடுத்துக்காட்டி பாசங்கை நீக்கியவாறு. என்றவென்னும் பெயரொச்சத் தகரம் விகாரத்தாற்றொக்கது, புசழ்புரிந்தென்புழிப்போல. அளவையானென ஆனுருபு விரித்துரைக்க. ஒன்றன்று-உளனன்று-என்புழி-ஒன்று-உளனெனுந் தருமிவாசகங்கள் ஆகுபெயராலத்தருமங்களின் மேனின்றனவாகலான்உள்னென்பதும் அஃறிணையொருமையோடுமுடிந்தது. அன்மை கூடாமைப்பொருட்டு. எவற்றெவனுமென்பது-ஏழாம்வேற்றுமைத்தொகை. அஃறிணைக்கண் வருமெவனென்னும் வினாவினைக்குறிப்புச்சொல் லீண்டுப்பெயர்த்தன்மைப்பட்டெவனுமென வெஞ்சாப்பொருண்மை யுணர்த்திநின்றது. அன்றியென்னும் வினையெச்சம் - செய்யுளாகலின், அன்றெனத்திரிந்தது. இன்மை-ஈண்டமையாமைப்பொருட்டு - பொன்-ஆகுபெயர். ஆமென்பது-உடைமையோடியையும் - பொன்னொளிபோலீசனென்பது-தொகையுவமமாகலிற் பொதுவியல்பு விரித்துரைக்கப்பட்டது. இவ்வதிகரணத்தாற் போந்ததொகைப்பொருள்- முதல்வன் வியாபகனாகலின், வியாபகப்பொருட்கொன்றாய் நிற்றல்கூடாது, ஆகலான், முதல்வனொருவனே ஞாயிறுமொளியும் போலச் சிவமுஞ் சத்தியுமெனத் தாதான்மியத்தா லிருதிறப்பட்டு, சருவவியாபியாய்ப் பொதுமையினிற்பனென, சமவேதமாய் நிற்குமாறு தெளிவிக்கு முகத்தானே தாதான்மியசத்தி யுண்மைக்குப் பிரமாணங்கூறிய வாறுமென்றுணர்க. அஃதாமாறு தன்னை விளககுவதூஉம், விடயங்களை விளக்குவதூஉம் தானேயாகிய ஞாயிறொன்றுதானே, விடயங்களை விளக்குழிக் கதிரெனவும், தன்னை விளக்குழிக் கதிரோனெனவுந் தாதான்மியத்தா லிருதிறப்பட்டியைந்து நிற்றல்போல, புறப்பொருளை நோக்கா தறிவு

மாத்திரையாய்த் தன்னியல்பி னிற்பதூஉம், புறப்பொருளைநோக்கிநின்றுணர்த்துவதூஉமாகிய விருதன்மையுடைய பேரறிவாய பரைதன்னியமொன்றே யங்ஙனம் புறப்பொருளைநோக்கி நிற்குநிலையிற் சத்தியெனவும், புறப்பொருளைநோக்கா தறிவுமாத்திரையாய் நிற்குநிலையிற் சிவமெனவுந் தாதான்மியத்தாலிருதிறப்பட் டியைந்துநிற்குமெனவுணர்க. இனித் தீயின்சத்திபோன்று, சுடுதலடுதன் முதலிய தொழில்வேறுபாட்டாற் சுடுஞ்சத்தி யடுஞ்சத்தி யென்றற் றொடக்கத்துப் பல்வேறுவகைப்படுமாறுபோல, சிவசத்தியொன்றே காரியவேறுபாட்டாற் பரையாகி யிச்சை ஞானங் கிரியையென் றைவகைச்சத்திகளாயும், முறையே யைந்துநான்கு மெட்டும் பதின்மூன்று மெட்டுமாகிய கூறுபாடுடைய வீசானி முதலியவை வகைச்சத்திகளாயும், ஆரணி-சென்னி-முதலிய மூவகைச்சத்திகளாயும், நிவிர்த்தி-பிரதிட்டை முதலிய ஐவகைச்சத்திகளாயும், வாமை-சேட்டை முதலிய அட்டசத்திகளாயும், பரவாகீசுவரி-அபரவாகீசுவரி-மனோன்மனி-மகேசை-உமை-திருவர்ணியென வெழுவகைச்சிவபேதங்கட்கு முறையே யெழுவகைச்சத்திகளாயும், அத்தியான்மிகமெனப்படும் உன்மனை சமனை முதலிய கலைகளாயும், இன்னும் பல்வேறுவகைப்பட்டு நிற்கும். அவ்வச்சத்திகளோடு புணர்ந்த சிவமு மவ்வாறு பல்வகைப்பெயர்பெற்று நிற்கும். அவ்வச்சத்திகட்கிடமாய் விந்துவு மங்ஙனம் பல்வேறுவகையான் விருத்திப்பட் டவ்வப்பெயர்பெறும். இவற்றி னியல்பெல்லா மாகமங்களுட் காண்க. இரண்டாஞ்சூத்திரமுடிந்தது.

## மூன்றாஞ்சூத்திரம்.

உளதிலதென்றலி னெனதுடலென்றலி ... ... *
னைம்புலனொடுக்க மறிதலிற்கண்படி ... ... ...*
லுண்டிவினையின்மையி னுணர்த்தவுணர்தலின்... *
மாயாவியந்திர தநுவினுளான்மா ... ... ...*

என்பது - எ - னின், ஆன்மப்பிரகாசமுணர்த்துத னுதலிற்று. எ-று-க-ளை-எ-னின். மேலவையே தானேயென் றெடுத்துக்கொள்ளப்பட்ட வுயிர்சூனிய முதலியவற்று ளொன்றாகற்பாற்றென வவ்வவமதம்பற்றி நிகழுங்கடாவை யாசங்கித் துபிரவற்றிற்கு வேறாயுண்

டென்பது கருத்தளவை யான்விளக்கி மேலைச்சூத்திரத்து ளுயிர்கண் மேல்வைத்தோதிய முதல்வன திலக்கணத்தை வலியுறுத்துதன் மூன்றுஞ்சூத்திரத்தின் கருத்தென்றவாறு. முதன்மையுடைமைபற்றி யுலகிற்கு நிமித்தகாரணமாகிய பதிப்பொருளுண்டென்பது முதற்சூத்திரத்துட்கூறி, காரணமாதற் பொதுமையா னியைபுடைமைநோக்கித் துணைக்காரண முதற்காரணங்க ளதுண்மையு மவற்றானுலகங் காரியப்படுமாறு மிரண்டாஞ்சூத்திரத்துட் கூறி, அவற்றானாய பயன்கோடற்குரிய பசுக்கள துண்மைக்குப் பிரமாணமீண்டுக் கூறுகின்றாரென்றுணர்க. இதனானே சூத்திரவியைபு மினிதுவிளங்கும்.

இச்சூத்திரத்தின் பிண்டப்பொழிப்பு-இலதென்றன்முதலிய வறுவகை யேதுக்களானு மாயாவியந்திர தநுவென்னும் பெயரடையாற் பெறப்படுங் குறிப்பேதுவானு மிவற்றின்வேறா யிவ்வுடம்பினு ளுயிரெனப்படுவ தொன்றுண்டென்றவாறு.

இது பூட்டுவிற்பொருள்கோள் - உளதென்றது சாதியொருமை. அறிதலினென்றது - ஐம்புலனோடுஞ் சென்றியையும். தநுவினுளான்மா வுளதென்றாரேனுங் காணப்பட்ட வுடம்பாற் காணப்படாத வுயிருக்குண்மைகூறவேண்டுதலி னிவ்வுடம்பு சூனியமுதலியவற்றின் வேறாய வான்மாவை யுடைத்தென வுடம்பின்மேல்வைத் தோதுத லாசிரியர்கருத்து. அற்றாகலினன்றே பதியுண்மை யுலகின்மேல்வைத்தோதியதூஉமென்பது. ஈண்டு-மேற்கோளொன்றாயினு மேழுவகை மதங்களை வேறுவேறுமறுக்கு மேதுக்க ளேழாகலா னான்மாவுளதென்னு மேற்கோளவற்றொடு தனித்தனிசென் றியைதலி னேழதிகரணத்ததாயிற் றிச்சூத்திரமென்றுணர்க. இதனுட்கூறியவேதுவே யேதுவு மேற்கோளுமாகலா னேனைச்சூத்திரங்களுட்போல வேறேதுக்கூறவேண்டாமை யினிவை யேதுவுமாறும், இவற்றான் மேற்கோளைச் சாதிக்குமாறு மினிதுவிளக்கி வலியுறுத்துதன் மாத்திரையே யீண்டுரைக்கப்படுவதெனக்கொள்க.

---

## முதலதிகரணம்.

---

ஈண்டிலதென்றலினான்மாவுளதென்றது - எ-து-மே-ள்-எ-னின். சூனியான்மவாதி, தேகான்மவாதி, இந்திரியான்மவாதி, அந்தக்கரணா

ன்மவாதி, சூக்குமதேகான்மவாதி, பிராணான்மவாதி, விஞ்ஞானான்மவாதி, சமூகான்மவாதியென்னு மெண்மருள், அந்தக் கரணான்மவாதிகளான்மாவின திலக்கணங்கூறும்வழி யநுவாதமுகத்தான் மறுக்கப்படுதலி னவரையொழித்தொழிந்த வெழுவர்மதங்களையு முறையேமறுத்துயிருண்மை சாதிப்பான்றொடங்கி யவற்று ளிது சூனியமே யான்மாவென்னு மாத்துமிகர் கூறுங்கடாவையாசங்கித்துச் சூத்திரத்தின் முதற்கூற்றைக் கண்ணழித்துக்கொண்டு மேற்கோட னுதலிற்று.

(இ-ள்.) வெ-ளிடை.

ஆன்மாவிலதென்றலினை வருவித் துரைக்க.

எவற்றினையுமன்றன்றெனப்பட்ட வான்மாவிலதென்று நிற்றலுளதாதலி னதுவே யவ்வான்மாவாமென்றது-எ-து-பொ-ரை-எ-னின். ஆன்மாவிலதென்றலேபற்றி யஃதுண்டெனக்கோடன் முயற்கோடில்லையென்னு மேதுவா லஃதுண்டெனச் சாதித்தலோ டொக்குமென்னுங்கடாவை யாசங்கித் ததன் றற்பரியமுணர்த்துத னுதலிற்று.

(இ-ள்.) ஆன்மாவிலதென்னுஞ் சூனியவாதிகளு மில்லையென வாளாகூறுதலமையாமையி னுடல்பொறிவிடய மனைத்தினையு முறையானே யிஃதான்மா வன்றென வொரோவொன்றாகக்கழித் திவ்வாறு கழி னான்மாவென்றது சூனியமென் றங்ஙனங்கூறுபவாகலா னவற்றை யொரோவொன்றாகவிட் டங்ஙனங்கூறிக்கொண்டு நிற்பதோ ரறிவுண்மையி னவ்வறிவே;மேல், "அவையேதானேயாய்" என்பதனு ளாகமவளவையாற் சாதித்துப்போந்த வான்மாவென்றவாறு.

ஈண்டிலதென்றலி னான்மாவுளதென மேற்கொண்டதென்றவாறு. அங்ஙனமறியுமறிவுஞ் சூனியமேயெனின், அஃதென்னையீன் றுண்மலடியென்பதனோ டொக்குமென் றொழிகவென்பதுகருத்து. இன்மையீண்டுச் சூனியப்பொருட்டு. சூனியமாவது-உள்ளதுமன்று, இல்லதுமன்று, இரண்டுமாவதுமன்று, வேறுமன்றெனப்படும்பாழ். ஏகாரம்-பிரிநிலைக்கண் வந்தது.

வெண்பா.

அன்றன்றெனநின்றனைத்தும்விட்டஞ்செழுத்தாய் *
நின்றொன்றுளதுவேநீயனைத்து - நின்றின்று ... *
தர்ப்பணம்போற்காட்டலாற்சார்மாயைநீயல்லை ... *
தற்பரமுமல்லைதனி. ... ... ... ... ... (க)

அன்றன்-தனி-எ-து-உ-ம்-எ-னின். அவ்வுயிரை யுடல்பொறி விடயமுதலியவற்றின் வேறாகப்பிரித்துக் காணுமாறு மதுவே யுயிராமாறுந் தெரித்துணர்த்தி யதனை வலியுறுத்துத னுதலிற்று.

(இ-ள்.) அனைத்து நின்று-எ-து-உடல்பொறி விடயமுதலியவனைத்தினு மதுவதுதானாக நின்று - அன்றன்றெனவிட்டு-எ-து-முறையானே யிது நானன் றிதுநானன்றென வொரோ வொன்றாகக்கண்டு நீக்கியவழி - அஞ்செழுத்தா யொன்று நின்றுளது-எ-து-அவ்விடத்தகரமுதலிய சூக்கும பஞ்சாக்கர ரூபமாயறிந்து வந்ததோரறிவு நிலைபெற்றுளதன்றே - அதுவே நீ-எ-து-அதுவு நானன்றெனக்கழிப்பி னங்ஙனங்கழித்த வுணர்வு வேறுண்டெனப்பட்டு மேலும் வரம்பின்றியோடுமாகலிற் சூக்கும பஞ்சாக்கரரூபமாய் நின்றறிந்து வந்த வவ்வறிவுதானே நீயென்ப தறிவாயாக - அற்றேல், மாயையுஞ் சிவமு முளவென்பது மேலைச்சூத்திரங்களாற் சாதிக்கப்பட்டமையி னவையே யவ்வறிவினையு மறிந்து நீக்குமென வமையுமாகலான் வரம்பின்றியோடுமா றில்லையாலெனின், சார்மாயை-எ-து-நின்னாற் சாரப்பட்ட மாயை - அனைத்து நின்றின்று தர்ப்பணம்போற் காட்டலா னியல்லை எ-து-நிலமுதலிய காரியமனைத்துமாய் நின்னோடு விரவி நின்றிப்பெத்தக்காலத்துக் கண்ணுக்குக் கண்ணாடிபோல வுனக்கறிவைவிளக்கி நிற்றன் மாத்திரையே யன்றி யறிவதன்றாகலா னிம்மாயையல்லை-தற்பரமல்லை-எ-து-மாயையான் விளங்கி யறியு நீயதற்கதீதமாகிய சிவமுமல்லை-தனி-எ-து-அவற்றின் வேறு-எ-று.

விட்டவழி யென்பது விட்டெனத் திரிந்து நின்றது. அவ்வழியாவ திதுவென்றுணர்த்துவா ரன்றன்றெனநின்றனைத்தும் விட்டவழியென வேதுப்பொருளை யநுவதித் தஞ்செழுத்தா யொன்று நின்றுளதென வடையாளங் கூறினார். அஞ்செழுத்தாய் நின்றறியுமாறு வருகின்ற சூத்திரத்துட் பெறப்படும். இதற்குப் பிறரெல்லாங் கூறியது கூறலென்னும் வழூஉப்பட மேலு மோரியையின்றி யுரைத்தார். அனைத்து நின்றென் புழிமுன்னர்க் கண்ணுருபும் பின்னராக்கச் சொல்லுந் தந்துரைக்க. ஏகாரந்தேற்றம். தற்பரமென்றது குறிப்பேதுவாய் நின்றபெயர். அனைத்து நின்றின்று தர்ப்பணம்போற் காட்டலாற் சார்மாயை யல்லை தற்பரமுமல்லை தனியென்றத னானே வருகின்றவதிகரணங்களுக் கெல்லாந் தோற்றுவாய் செய்தவாறு மாயிற்று.

---

## இரண்டாமதிகரணம்.

இனியென துடலென்றலி னான்மாவுளதென்றது-எ-து-மே-ள்-எ-னின். அவ்வறி வுடம்பின்க ணன்றி நிகழக் காணாமையானும், நானுணுகினேன் பருத்தேன் என வுடம்பினையே நானெனன் வழங்கக்காண்டலானு முடம்பே யான்மாவெனத் தேகான்ம வாதிகள் கூறுங்கடாவை யாசங்கித்துச் சூத்திரத்தி னிரண்டாங் கூற்றைக் கண்ணழித்துக் கொண்டு மேற்கோட னுதலிற்று.

(இ-ள்.) வெ-ளை.

நான் பருத்தேன், சிறுத்தேன், கரியேன், மனிதன், பார்ப்பானென வுடம்பின் குணவிசேடங்களை யுபசாரத்தா லுயிருக்கேற்றிவழங்கினும், யானுடம்பு, யான்கை, யான் காலென வுடம்பை யவ்வாறு வழங்குவாரின்றியெனதென வேற்றுமைப்படவே யாவரும் வழங்கக்காண்டலி னதுவேயுயிர்வேறுண்டென்பதனை யறிவுறுக்குமெனவவன் வழங்குமுறையே பற்றி யவனை மறுத்தவாறு.

என்பதி யென் மனையென்றாற்போல, என்கை யென்காலென நிற்பதுளதாதலி னதுவே யவ்வான்மாவா மென்றது - எ - து- பொ-ஸா - எ - னின் - எனதுடலென்பது பிறிதின் கிழமைப் பொருள்படாது தலைமாத்திரையாய் நிற்கு மிராகுவை யிராகுவினது தலையென்று வழங்குமாறுபோல வபேதம் பற்றியே வழங்கப்படுமென வமையுமென்னுங் கடாவை யாசங்கித் ததன் றுற்பரிய முணர்த்துதனுதலிற்று.

(இ-ள்.) இராகுவினது தலையென்றாற்போல, என்கை,என்கால், என்கண், என்செவி, என்பொறி, என்பிராணன்,* என்னறிவெனப் பலவாற்றானும் பெரும்பாலு முலகத்து வழங்கக் காண்டலி னவ்வழக்கமிகுதிப்பாடு பிறிதின் கிழமைப் பொருட்கணன்றி வாராமையா னங்ஙனங் கூறிக்கொண்டு நிற்கும்பொருள் வேறொன்றுண்டென்பது பெறப்படுதலின், அதுவே மேலுரை யளவை பற்றிச் சாதித்த வான்மாவென்றவாறும் எனதுடலென்றலி னானமா வுளதென மேற்கொண்டதென்றவாறு.

வெண்பா.

எனதென்றமாட்டி னெனதலா தென்று ... ... *
னதலா துன்கைகால் யாக்கை-யெனதென்று ... *
மென்னறிவ தென்று முரைத்துநீ நிற்றிகா... ... *
ணுன்னிலவை வேறா முணர். ... ... ... (உ)

எனதென்ற - உணர்-எ-து-உ-ம்-எ-னின். பதிமனைவி முதலிய பொருள் கடம்மின் வேறாதல்கண்டு பிறிதின் கிழமைப்பொருள் படவெனதென்றற்போ லன்றிக்கைகால் முதலியவற்றைத் தற்கிழமைப்பொருள் படவெனதென்று கூறி நிற்றலி னவ்விருவேறுமொழியுந் தம்முளொக்குமா றென்னையென்னுங் கடாவை யாசங்கித் ததனைவலியுறுத்துதனுதலிற்று.

(இ-ள்) எனதலா தென்றெனதென்ற மாட்டின்-எ-து - நீயுலோகாயத நூல்கேட்கு முன்னெல்லாம் பதிமனைவி முதலிய புறப்பொருளையே யுயிரெனக்கொண்டு மயங்கி நின்றாயன்றே யக்காலத்தவற்றை யெனதன்றென வேறுகாணாது தனித்தனி யெனதென்றே தற்கிழமைப் பொருளாகக் கூறிக்கொண்டு நின்றாற்போல - உனதலா துன்கைகால் யாக்கையெனதென்று மென்னறிவதென்று முரைத்துநீநிற்றிகாண்-எ து-உனதன்றாகிய வுன்கைகால் யாக்கைகளைத் தனித்தனியெனதென்றுமங்ஙனமறிகின்ற பாசவறிவை யென்னறிவதென்றுந் தற்கிழமைப்பொருளாகக் கூறிக்கொண்டு நீயொருபொருள் வேறுநிற்கின்றாய்காண்-உன்னில்-எ-து-உலோகாயத நூலாராய்ந்த பின்னர்ப்பதிமனைவிமுதலியபொருள்களுனக்கு வேறாதல்கண்டாற்போலக் கைகான்முதலிய வற்றினியல்புகளையு மேதுக்கண் முதலியவற்றா னாராய்ந்து பார்த்தியாயின்-அவைவேறாமுணர்-எ-து-அக்கை கான்முதலியன வுனக்கன்னிய மதனை யறிவாயாக வென்றவாறு.

இன் - உவமவுருபு. உனதலா தென்பதனைக் கைகால் யாக்கைகளோடு தனித்தனி கூட்டுக. இரண்டாமதிகரண முடிந்தது.

---

## மூன்றாமதிகரணம்.

---

இனியைம்புல னறிதலினுன் மாவுளதென்றது-எ-து- மே-ள்-எ-னின். ஐம்பொறிகளு மைம்புலன்களை யறியுமென்ற தெல்லார்க்கு மொப்ப முடிந்தமையி னவையுடல்போற்சடமன்மை பேறப்படுதலா

னும், அவற்றை யெனதென்னும் வழக்கம் பெரும்பான்மை யன்றாக லானும், அவையே யுயிராத லமையுமென விந்திரி யான்மவாதிகள் கூறுங்கடாவை யாசங்கித்து மூன்றாங்கூற்றைக் கண்ணழித்துக் கொண்டு மேற்கோட னுதலிற்று.

(இ-ள்) வெ-டை.

ஐம்புலனாகிய சத்தபரிச ரூபரசகந்தங்களை யிந்திரியங்க ளொன்றறிந்ததொன் றறியாமையி னிவ்வைந்தினு மைம்புலன்களை யறிதலு ளதாதலதுவே யவ்வான்மாவென்றது-எ-து-பொ-ள எ-னின். ஐம்புல னறிதலாலான் மாவைம்பொறியின் வேறெனச் சாதித்தற் கேதுவா மாறு யாங்ஙனமென்னுங் கடாவை யாசங்கித் ததன் றாற்பரிய முணர்த்துத னுதலிற்று.

(இ-ள்.) வெ-டை.

வெண்பா.

ஒன்றறிந்ததொன்றறியா தாகியுடன்மன்னி ... *
யன்றும்புலனையவ் வஞ்செழுத்தை-யொன்றறித ...*
லுள்ளதேயாயினது நீதனித்தனிகண் ... ... *
டுள்ளவைவொன்றல்லே யோர். ... ... ... (ரு)

ஒன்றறி-ஓர்-எ-து-உ-ம்-எ-னின். இந்திரியங்க ளொன்றறிந்ததொன்றறியாதென்ற தொக்கும். ஐந்துமைந் துயிரெனக் கோடலினதனை னெமக்காவ தோரிழுக்கில்லை, இனி யிவ்வைந்தையுங்கொண் டைம்புலனையு மொருபொருளே யறியுமெனின தற்குப் பிரமாணங்கண்டிலம், குடத்தைக்கண்டயானே யதனைத் தீண்டினேன், மறித்துணர்வு நிகழ்தல் ஐந்து மோருடம்பின் கண்ணே நிலைபெறு மொற்றுமைபற்றி யமையுமெனக் கோடுமென்னுங்கடாவை யாசங்கித் ததனை வலியுறுத்துத னுதலிற்று.

உடன்மன்னியொன்றறிந்த தொன்றறியாதாகி-எ-து- உடம்பின் கண்ணே நிலைபெற் றொருவிடயத்தையறிந்த விந்திரிய மற்றொரு விடயத்தை யறியாதாய் - அன்றும்புலனை யவ்வஞ்செழுத்தை-எ-து-அங்ஙனந் தம்முண்மாறுபடுந் சத்தமுதலிய புலன்களைச் சூக்குமபஞ்சாக்கரத்தாற் செலுத்தப்பட்டா ராய்ந்தறிகின்ற வவ்வைம்பொறிகளின் றொழிற்பாட்டை - அறிதலொன்றுள்ளதேயாயின் - எ-து- கண்ணுருவத்தையறிவது செவியோசையையறிவதென் றிவ்வாறுணர்தலையுடை

ய தோர்பொருளில்லதோ வுள்ளதோவென வினாயினார்க்கில்லதெனி னவ்வறிவு நிகழாதாதல் வேண்டுமாகலா னுள்ளதேயாமெனின்- அது நீ-எ-து-அவ்வாறுணர்வதியா தனுவே நீயாகிய வான்மா, அவ்வாறு ணர்வனவு மவ்விந்திரியங்களே யென்றாற் படுமிழுக்கென்னையெனின், தனித்தனி கண்டுள்ளலவை எ-து - அவ்விந்திரியங்க டத்தம்விடயங் களை வேறுவேறு கண்டறிதன் மாத்திரையேயன்றி யித்தொழிற்பாட் டை யுடையேம் யாமெனவு மறியமாட்டாவாகலான்-ஒன்றல்லையோர் எ-து-அவ்வைந்தின் றொழிற்பாட்டையு மறிந்தவற்றின் வரும்பயன் கொள்வதாய நீ யவற்றின்வேறுவை யதனை யாராய்ந்தறிவாயாக வெ ன்றவாறு.

ஆகியென்னுஞ் சிறப்புவினை ஆயென்னும் பொதுவினையோடு முடிந்தது, இவனுமிவளுஞ் சிற்றிலிழைத்துஞ் சிறுபறையறைந்தும் விளையாடுபவென்றாற்போல. ஆய்-என்பது-வினைத்தொகை, அவ்வஞ் செழுத்தென்க. அஞ்செழுத்தாற் செலுத்தப்பட்ட பொறியை ஆகு பெயரா னஞ்செழுக்தென்றார். அஃதிருமடியாகுபெயராய் ஐம்பொ றியின் றொழிற்பாட்டை யுணர்த்திநின்றது. உள்ளல்-உள்ளலானெ ன்க. இம்மூன்றதிகரணத்தானுஞ் சாக்கிரத்தினிகழு மியல்புபற்றி யான்மாவினுண்மை சாதிக்கப்பட்டது.

---

## நான்காமதிகரணம்.

---

இனியொடுக்க மறிதலி னான்மாவுளதென்றது-எ-து - மே-ள்-எ-னின். நேயவிந்திரியங்கட்கு நிகழறிவதனாற் காண்டுமென நீ விருங் கோடலி னவ்விந்திரியங்களின் வேறு யங்ஙனமறிவது புரியட்டகவுட ம் பேயாமென வமையும், அது புறத்து நிகழாதாயினு மகத்தே நின் றிந்திரியங்களைப் புறத்திற் செலுத்தி யறியுமெனக் கோடுமெனச் சூக் கும தேகான்மவாதிகள் கூறுங்கடாவை யாசங்கித்து நாலாங்கூற்றை க் கண்ணழித்துணாத்து மேற்கோட னுதலிற்று.

(இ-ள்.) ஐம்பொறிகளுமொடுங்கின சொப்பனத்தானத்தி னிக ழ்ந்தவற்றை யறிதலி னான்மாவேறுண் டென்றவாறு.

ஒடுக்கம்-ஆகுபெயர். கனவின்கட்கனவுகண்டாமென்று நிற்ப துளதாதலி னதுவே யவ்வான்மாவாமென்றது - எ - து - பொ-ழை-எ-னின். சொப்பனத்தி னிகழ்ந்தவற்றை யறிவதுஞ் சூக்குமதேக

மேயாகலின், இது சித்தசாதனமாமாலென்னுங் கடாவை யாசங்கித் ததன் ருற்பரிய முணர்த்துதனுதலிற்று.

(இ-ள்.) வெ ளிடை.

இஃதென் சொல்லிய வாறோவெனின், ஒடுக்கமறிதலின்-எ-து- ஒடுக்கத்தி னிகழ்ந்தவற்றை நனவின்கண்மயங்கி யறிதலென்னும்பொ ருட்டாகலாற் சித்தசாதனமாதல் யாண்டையதென விடுத்தவாறென் பது. கனவுகண்ட சூக்குமவுடம்பே நனவின்கணதனை யறியுமாயிற் கண்டபடியறியாது மயங்கியறிதல் கூடாமையின், உயிர்க்காயினது போல வொருதன்மைத்தாக லின்றியகத்துச்சேறலும் புறத்துச்சேற லும் வேறுபாடுடைமையானதுபற்றி மயங்கியறிதல் கூடுமாகலி னங் ஙனமறியு முயிர்வேறுண்டென்பது கண்டுகொள்க.

வெண்பா.

அவ்வுடலினின்றுயிர்ப்ப வைம்பொறிகடாங்கிடப்பச்
செவ்வினவ்வுடலிற் சென்றடங்கி - யவ்வுடலின் *
வேறொன்றுகொண்டு விளையாடிமீண்டதனை ... *
மாறலுடனீயல்லைமற்று. ... ... ... ... (௪)

அவ்வுடல்-மற்று-எ-து-உ-ம்-எ-னின். கனவின்கட்செல்லுமாறு மாண்டுநிகழுமாறு முணர்த்தி யதனை வலியுறுத்துதனுதலிற்று.

(இ-ள்.)அவ்வுடலினின் றுயிர்ப்ப வைம்பொறிகள்கிடப்ப-எ-து- மேலுயிரன்றெனக் கூறிப்போந்த தூலவுடம்பினின் றுயிர்ப்பனவாய வைம்பொறிகளாண்டே யுயிர்ப்பொழிந்து கிடப்ப-அடங்கிச் செவ்வி னவ்வுடலிற்சென்று-எ-து - அவையங்ஙனங் கிடந்தவழிப்புறத்து நிகழுந் தொழிற்பாடெல்லாமடங்கி யவ்வுடம்பினுள்ளால் வருத்தமி ன்றிச் சென்று- அவ்வுடலின் வேறொனறுகொண்டு விளையாடி-எ-து- அத்தூலவுடம்புபோ லதனின் வேறாயதோ ருடம்பை யெடுத்துக் கொண்டு வேறோராற்றாற்கண்டு கேட்டுண் டுயிர்த்துற்று விளையாடி- மீண்டதனைமாறல்-எ-து-மீளவதனைமாறி மேற்சேறலான் - உடனீயல் லை-எ-து-நீ யச்சூக்குமதேகமல்லை யதனின் வேறாவை யென்றவாறு.

உயிர்ப்பவென்றது - அன்பெறாத அகரவீற்றுப் பலவறிசொல். உயிர்த்தல்-தொழிற்படுதல். தாமும் - மற்றும்-அசை. மீண்டு-மீள. மாறல் - மாறலானென்க. இவ்வதிகரணத்தாற் சொப்பனத்தி னிக

மூ மியல்புபற்றி யுயிருண்மை சாதிக்கப்பட்டது. நான்கா மதிகரண முடிந்தது.

---

## ஐந்தாமதிகரணம்.

---

இனிக் கண்படிலுண்டி வினையின்மையி னுன்மாவுளதென்றது-எ-து-மே-ள்-எ-னின். சொப்பனத்தானமா நித்திரையினன்றித் தொழிற்படாத சூக்குமதேகம்போலன்றிச் சுழுத்தி துரியங்களினுந் தொழிற்படுவதாய பிராணவாயுவே யடங்குதல் விடுதல் செய்தறிவதாகிய வான்மாவாத லமையுமெனப் பிராணன்மவாதிகள் கூறுங்கடாவை யாசங்கித்துச் சூத்திரத்தி னஞ்சாங்கூற்றைக் கண்ணழித்துரைததுக் கொண்டு மேற்கோடனுதலிற்று.

(இ-ள்.) வெ-டை.

உண்டிவினை- உம்மைத்தொகை. அஃது-"உண்டியும் வினையுமின்றிக் கிடந்து" என வழிநூலாசிரியர் கூறியவாற்றானுமறிக.

ஒடுங்கினவிடத் தின்பதுன்பஞ்சீவனம் பிரகிருதிக் கின்மையின் ஒடுங்காதவிடத் தின்பதுன்பஞ் சீவியாநிற்ப துளதாதலி னதுவே யவ்வான்மாவாமென்றது - எ-து-பொ-ா-எ-னின். கண்படைகொண்டவழி யுண்டிவினையில்லையென்ற துட்கோ பிராணவாயுவுக்கோவென வினுயினர்க்குட்ம் புயிரன்மையானதற் கவையில்லாமைபற்றி யீண்டைக் காவதோ ரிழுக்கில்லை, இனிப் பிராணவாயுவுக்கென்னில், அது துயின்றெழுந்தபின்னர்ச் சுகமாகத் துயின்றேனென் றறிதல் பிறிதோராற்றுற் பெறப்படாதென்னு மருத்தாபத்தி யானுண்டு மின்ப துன்ப நுகர்ச்சியுண்டென்பது பெற்றும். விழித்துழிப்போல வுறங்குழியும் பிராணவாயு வியங்குதலான் வினையுண்மையுங் கண்டாமாகலின், அதற்கவை யாண்டில்லையென்றன் மாறுகோள்போலு மென்னுங்கடாவை யாசங்கித் ததன் முற்பரிய முணர்த்துத னுதலிற்று.

(இ-ள்.) ஈண்டுண்டியென்றது விடயங்களினிடமாகவரு மின்ப துன்ப நுகர்ச்சியை. வினையென்றதுடம்பு சேட்டித்தலையாகலி னிவ் விரண்டும் பிராணவாயுவையொழிந்த கருவிகளெல்லா மொடுங்கிய துயிலிடத் தஃதியங்காநிற்பவு முடம்பின்கண்ணே நிகழ்த லின்மையி

னவையொடுங்காத நனவினிடத் தவையிரண்டு மதன்கணிகழ்தலுண் மையி னவ்வின்மை யுண்மைகட் கேதுவாகக் கருவிகளை யொடுக்கியு மொடுக்காதுநிற்பதியா ததுவே யவ்வான்மா வென்றவாறும். கண்படி-லுண்டிவினை யின்மையினான்மாவுளதென மேற்கொண்டதென்றவாறு. பிராணவாயுவை யொழித்தொழிந்த கருவிகளென்ப தாற்றலான் வந்தது. இன்பதுன்ப நுகர்ச்சியை யின்பதுன்பமென் றுபசரித்தார். சீவனம்-சீவித்தல், சேட்டித்தலென்றதாம். செவ்வெண்டொகை விகாரத் தாற் றொக்கது. சீவியாநிற்பதென்பது- சீவியாநிற்றலென்னுந் தொழிற்பெயர் மாத்திரையாய்நின்றது, "உறங்குவதுபோலும்" என்புழிப் போல. உளதென்றது தனித்தனிச் சென்றியையும். ஐந்தாமதிகரண முடிந்தது.

---

## ஆறுமதிகரணம்.

---

இனி யுணர்த்தவுணர்தலி னான்மாவுளதென்றது-எ - து-மே-ள்- எ - னின்-பிரமப்பொருள்-மேற்கூறிப் போந்த சடப்பொருள்கள்போ லன்றிச் சித்தாகலானதுவே யுயிராதலமையுமென விஞ்ஞானான்மவாதிகள் கூறுங்கடாவை யாசங்கித் தாறுங்கூற்றைக் கண்ணழித்துக் கொண்டு மேற்கோட்டுதலிற்று.

(இ-ள்.) தொழிற்படுங் கருவிகளொன்று மின்றிக் கேவலமா யதீதவவத்தையி னின்றுழியறியுமாறின்றிப் பின்னர்க் கலைமுதலிய கருவிகளான் றறிவிக்க வறிந்து வருதலுண்மையின், எக்காலத்துந்திரிபின்றியறிந்தாங் கறிந்து நிற்குஞ் சித்தாகிய பிரமத்திற்கிது தகாமையா னங்ஙனமுணரு மான்மா வேறுண்டென்றவாறு.

உணர்த்த வுணர்தலெனவே முன்னுணர்ந்து கிடத்தல்பெற்றும்;

அவனறிந்தாங் கறிவனென் றறிவிக்க வறிந்துயதேசியாய் நிற்பதுளதாதலின், அதுவே யவ்வான்மாவா மென்றது-எ-து-பொ-ளா-எ-னின், அறிந்தாங் கறிவதாகிய பிரமப்பொரு ளவிச்சைக் காலத்துக் கருவிகளோடுங் கூடி யறியாதெனக் கோடுமாகலினதுபற்றி யுயிர்வேறுண்டென்றல் பொருந்தா தென்னுங் கடாவை யாசங்கித் தவ்வளவி

னவன் மகிழுகவென்னு நியாயத்தால் வேறு மதன் முற்பரிய முணர்த் துதனுதலிற்று.

(இ-ள்) கருவிகளோடு கூடிய வழியுந் தன்னியல் புணருமாறின் றி யம்முதல்வன் இதுபோலமறந்து மறந்தறிதலின்றி யறிந்தவாறே யறிந்துநிற்கும் பேரறிவுடைய னென வேதாகமங்களா னறிவிக்க வறி ந்து குரவனறிவுறுக்கு முபதேசமொழியைப் பெற்றுடையதாய் நிற்ப தொன் றுளதாகலினது வேமேலுணா யளவையாற் சாதித்துப்போந்த வான்மாவென்றவாறும். உணர்த்த வுணர்தலி ஞன்மாவுளதென மேற் கொண்டதென்றவாறு.

அறிந்தாங்கென்பது - அப்பொருட்டாதல் " எண்ணிய வெண் ணியாங் கெய்துப ,, என்பதனுனுமறிக. இதற்குப் பிறவாறு முரை ப்ப· அவையெல்லாம் பொருந்தாமை யுணர்க.

வெண்பா.

அறிந்து மறிவதே யாயுமறியா ... ... ... ...*
தறிந்ததையும் விட்டங் கடங்கி-யறிந்த ... ... *
தெதுவறிவு மன்றுகு மெய்கண்டா ஞென்றி... ...*
னதுவதுதா னென்னு மகம். ... ... ... ...(ஙு)

அறிந்தும்-அகம்--எ-து-உ-ம்-எ-னின். கருவிகளோடு கூடிய வ ழியு மவிச்சை நீங்காமையின் விடயங்கண் மாத்திரையே யறியுமன்றி த்தன்னியல் பறியுமாறில்லை, அஃதுபதேசத்தா லறியற்பாலதே யாமா கலானது பற்றியிழுக் கென்னே யென்னுங் கடாவை யாசங்கித் ததனே யு மேற்கூறிய நியாயத்தா னுடம்பட்டின்னு மொருதாற்பரிய முணாக் கு முகத்தானே விடயங்களே யறிவுழியும்படும் வேறுபாடு கூறி யத னை வலியுறுத்துதனுதலிற்று.

அவனறிந்தாங் கறியுமாறும், உயிர்மறந்து மறந்தறியு மாறும், தெரித்துணர்த்தி வலியுறுத்துத னுதலிற்றெனினு மமையும்.

(இ-ள்.) அறிந்து மறிவதே யாயுமறியாது-எ-து-கருவிகளெல்லா வற்றேடுங் கூடிச் சாக்கிரத் தானத்தினின்று விடயங்களே யறியுமிட த்து மொருங்கே யறியமாட்டா தொன்றனே யறிந்து மொன்றனே யறி

யப் புகுவதாயு முன்னறிந்த தொன்றனையறியா தொழிந்தும் - அறிந்ததையும் விட்டங்கடங்கி-எ-து-இங்ஙன மோரோ வொன்றாக வறியப்பட்ட விடயத்தையு மிடையீடின்றி யறியமாட்டாது விட்டு விட்டாங்கே யைந்தவத்தைப் பட்டடங்கி - அறிந்ததெது-எ-து-மீளவறிந்து வருதல் கண் கூடாகக் காணப்படுதலான் அங்ஙன மறிந்து வந்த பொருள்யாதது சடமன் றென்பது மேற் காட்டப்பட்டது முன்னருங்காட்டப்படும்-அறிவுமன்று-எ-து-ஒன்றாக வியல்பாக வுணர்தலே பேரறிவாகலின் அதுவுமன்றாம் - மெய்கண்டானென்றின் - எ-து - இனி மெய்யாகிய சித்தாந்த நெறியினை யுணர்ந்தோன் வேறென்னையோவெனமனமொருங்கி யாராயுமாயின் - அது வதுதானென்னு மகமாகும்-எ-து-காட்டு மொளிக்கு வேறாப கண்ணொளிபோல வவ்வறிவிற்கு வேறாயது வதுவேதானெனச் சார்ந்ததன் வண்ணமாய் நின்றறியு மியல்பையுடைய வுயிரா மென்றவாறு.

அறிந்து மறிவதே யாயுமென்னும் உம்மைகள் எண்ணின் கண் வந்தன. அறியாது மென்னும் எண்ணும் மைவிகாரத்தாற் றொக்கது. அறிந்ததையு மென்னும் உம்மை - இழிவு சிறப்பு. அறியுமென்னும் உம்மை இறந்ததுதழீஇ இயது. ஏகாரம் அசை நிலை. அங்கு-உணர்த்து முறைமைத் தானமாகிய விலாடத்தி னென்றவாறு.

அறிந்ததையும் விட்டங் கடங்கி யறியுமாறு வருகின்ற சூத்திரத்திறுதியினும், அது வதுதா னெனச் சார்ந்த தன்வண்ணமா மாறுண்மை. யதிகாரத்தும் பெறப்படும். அறிந்து மறிவதேயாயு மறியாதறிந்ததையும் விட்டங் கடங்கி யறிந்த தெதுவென்பதற்கு, ஓதியதனை யோதியபொழுதே யுணர்ந்து பலகாலோதி யுணர்வதாயும், பலகாலோதியு முணர்தலின்றியும், உணர்ந்ததனை மறந்தபின்னர் மறந்தொழிந்தும், இவ்வாறோதி யுணர்ந்த தியாதென் றுரைத்தலுமொன்று. இப்பொருட்கடங்கி யென்புழியும் எண்ணும்மை விரித்துரைக்க. இங்ஙன மூவகைப் படுத்துரைக்கவே யுணர்த்த வுணர்தலென்னு மேது வான் முறையே யதீதத்தின் கணிகழு முறைமை பற்றியும், உணர்த்து முறைமைக் கணிகழு மியல்பு பற்றியும், சுத்தத்தி னிகழு மியல்பு பற்றியு முயிருண்மை சாதிக்கப் பட்டது. இது தற்பரமுமல்லை தனியென்றதனை வலியுறுத்தியவாறு.. கணிகவிஞ்ஞானமே யான்மா வெ

ன்னும் புத்தரின் யோகாசாரன் மதத்தை மறுத்தற் கெழுந்த திவ்வ திகரண மெனக் கொண்டதற் கியைய வுரைப்பாருமுளர். ஆறாமதி கரண முடிந்தது.

---

## ஏழாமதிகரணம்.

---

இனிமாயா வியந்திர தநுவினு ளான்மா வுளதென்றது - எ-து- மே-ள்-எ-னின், உடம்பு முதலியவற்று ளோரோவொன்றே யான்மா வாதலின் றென்றதொக்கும், அவற்று ளொன்று குறைந்தவழியு மறி வு நிகழாமையானும், எல்லாங் கூடிய வழியதுநிகழ்தலானும், அனை த்துங்கூடிய சமுதாயமே யுயிராத லமையுமெனச் சமு கான்மவாதிக ளாகிய சௌத்திராந்திகர், வைபாடிகர், கூறுங்கடாவை யாசங்கித்து, சூத்திரத்தி னிறுதிக் கூற்றைக் கண்ணழித் துரைத்து மேற்கோட னுதலிற்று.

(இ-ள்.) மாயாகாரியங்களான் யாக்கப்பட் டியன்ற சூத்திரப்பா வைபோலு முடம்பின் கண்ணே யவற்றிற்கு வேறா யான்மாவுண் டென்றவாறு. எனவே யவையெல்லா மாயையின் காரியங்களாய் நிலை பெறுதன வாதலி னிலைபேறுடைய வுயிராகா தென்றவா றாயிற்று.

மாயை - ஆகுபெயர். இகரம் விரித்தல் விகாரம்.

அவைதாம் வெவ்வேறுபெயர் பெற்று நிற்றலான்-எ-து-மே-ள்- எ-னின், சித்தமுஞ் சித்தப் பகுதியுமாகிய வகச்சமுதாய மைந்தும் மாயாகாரியமென்ப தெம்மனோர்க்குடம் பாடன்மையினதுபற்றி யான் மா வேறுண்டெனச் சாதித்த லமையுமாறென்னை யென்னுங்கடாவை யாசங்கித்து, அவ்வளவினவன் மகிழுக வென்னு நியாயம் பற்றிவேறு மோராற்றாற் சாதித்த னுதலிற்று.

(இ-ள்) நீயைந்து கந்தமெனக் கொண்ட மாயா காரியங்களான் மாவெனப்பெயர் பெறுமாறின்றி வேறு வேறு பெயர் பெற்று நிற்ப னவாகலான் மாயாவியந்திர தநுவினுளான் மாவுளதென மேற்கொ ண்ட தென்றவாறு.

வேறுவே றென்பது வெவ்வேறென மரீ இயிற்று.

வெண்பா.

கலையாதிமண்ணந்தங் காணினவைமாயை ... ...*
நிலையாவாந் தீபமேபோல-வலையாமன் ... ... *
ஞானத்தை முன்னுணர்ந்து நாடிலதுதநுவாந் ...*
தானத்தின் வேறாகுந் தான். ... ... ... (கா)

கலையாதி-தான் எ-து--உ-ம்-எ-னின், அவை தனித்தனி வெவ்வேறுபெயர் பெறினுந் தொக்க சமுதாயத்தின்கணான்மாவெனப் பெயர் பெறுமெனக்கோடு மாகலினதுபற்றி யிழுக்கென்னை யென்னுங் கடாவை யாசங்கித்து, அவைவெவ்வேறுபெயர் பெறும்வழியும் அவர் கூறியவாறு பெயர்பெறாது வேறுபெயர் பெறுமாறும், அவை மாயா காரியங்க ளேயாமாறும், அவைதொக்க சமுதாயத்தினு மான்மாவெனப்பெயர் பெறாது வேறுபெயர் பெறுமாறு முணர்த்தி யதனை வலியுறுத்துத லுதலிற்று.

(இ-ள்.) காணிற்கலையாதி மண்ணந்தம்-எ-து-அங்ஙனஞ் சமுதாயமாதற் குரியவை யாவையென் றளவைகளா னறியப் புகிற்கலை முதனில மீறாகிய தத்துவங்களேயாம் - அவைமாயை நிலையாவாம்-எ-து-அவை யனைத்து மாயையின் காரியங்களாக வினிலையுதலின்றிச் சில கால நின்றழிவனவாம்-ஞானத்தை யலையாமன் முன்னுணர்ந்துநாடில் எ-து-அவைதொக்க சமுதாயத்தின் விளங்கித் தோன்றுவதாய ஞானத்தினியல்பை யசையாமற் கருத்தை யொருக்கி முன்னுணர்ந்து பின்னரச்ச முதாயத்தை யாதென்றாராயின்-அது தீபமேபோலத் தநுவாம்-எ-து-அச்சமுதாயங் கண்ணுக்கு விளக்குப்போல வுயிர்க்குத் தூல சூக்குமபரங்களாகிய வுடம்பாம் - தானத்தின் வேறாகும்-எ-து-ஆகலாற் கண்விளக்கின் வேறாயினாற்போல வுயி ரவ்வுடம்பின் வேறாமே யென்றவாறு.

ஆமென்பது மேலுஞ் சென்றியையும், மாயை-ஆகுபெயர். தானென்பது - முன்னையது எழுவாய், பின்னையது அசை. அதனினென்பது-அத்தினெனமரீஇயிற்று, "இத்தைமெய்யெனக்கருதி" என்புழிப்போல. இதனானே தனியென்றதனை வலியுறுத்தியவாறு. இவ்வாறு மூன்றுசூத்திரத்தானுஞ் சைவாகமங்களுட் கூறப்படும் பதிமுதலிய பொருள்களதுண்மை யநுமானவளவை யான் வலியுறுத்தப்பட்டது.

ஆகமவளவையே யமையுமாகலி னநுமானவளவை மிகையாம் போலுமெனின், ஆகாது; மந்தவுணர்வுடைய மாணுக்கர்க்கு வேற்றுச் சமயநூல்களை நோக்கிய வழிச்சைவாகமப்பொருளின் மலைவு நிகழாமைப்பொருட்டும் கேட்டல்-சிந்தித்தல்-தெளிதல் - நிட்டையென்னு நான்குவகையானன்றி யாகமங்களைக்கேட்ட துணையானே யநுபவங் கூடாமையிற் சிந்தனை செய்து வுண்மை மென்மையுணர்ந்து தெளிந்து கோடற்பொருட்டுங் கருத்தளவையும் வேண்டப்படுமாகலா னென்க. ஏழாமதிகரணமுடிந்தது.

---

## நான்காஞ்சூத்திரம்.



அந்தக்கரண மவற்றி னொன்றன்றவை ... *
சந்தித்ததான்மாச் சகசமலத் துணரா... ...*
தமைச்சரசேய்ப்பநின் றைந்தவத்தைத்தே *

(எ-னின்) இதுவுமது-எ-று-க-ளா - எ-னின். சூத்திரக்கருத்துணர்த்துத னுதலிற்று.

(இ-ள்) பிரமாணவிலக்கண மிரண்டானும் பொருளுண்மைபெறற் பாற்றென்னு முறைமைபற்றி மேற்பிரமாணத்தாற் பெறுவிக்கப் பட்ட பதிபசுபாசங்களுக் கிலக்கண மெதிர்நிரனிறையாக வைத்துக் கூறுவான்றொடங்கி யவற்றுளிது மேலடுக்கநின்ற வான்மவிலக்கணங் கூறுதனுதலிற்று. சொற்பல்காமைப்பொருட்டும், ஓத்துவேறுய வழியுமியையுடைமை யுணர்ந்துகோடற்பொருட்டு மேயீண்டிதுவுமதுவென மாட்டெறிந்துரைத்த வாசிரியர் இங்ஙன முரைத்துக்கோடற்கேற்பவன்றே, ஆண்டான்மாவின துண்மையுணர்த்துத னுதலிற்றெனச் சிறந்தெடுத்தோதாது பொதுப்பட வான்மப்பிரகாச முணர்த்துத னுதலிற்றென்றதூஉமென்க. இவ்வாறன்றி மேலச்சூத்திரத்தில் ஆன்மாவினதுண்மை 'கூறுமுகத்தாற் றொகுத்தோதிய வைந்தவத்தையே யீண்டிலக்கணங் கூறுமுகத்தான் விரித்தோதப்படுதலின், இதுவுமதுவென்றது மேலச்சூத்திரப் பொருளோடு மாட்டெறிந்ததென்றுரைப்பினுமாம் இதனானுஞ் சூத்திரவியைபினிது விளங்கும் இச்

சூத்திரத்தின் பிண்டப்பொழிப்பு. ஆன்மா வந்தக் கரணங்களாகிய மனம் புத்தி யகங்காரஞ் சித்தமென்னு நான்கனு ளொன்றன்றாயினு நுண்ணுணர் வின்மையிற் சூழ்ச்சித் துணைவராகிய வமைச்சரோடு கூடிநின்று தன்றொழினடாத்து மரசன்போலச் சகசமலத்தினுணர் வின்றிக் கஞ்சுகம்போலுங் கலாதிகளாற் பொதுவகையா னுணர்வு நிகழினுஞ் சிறப்புவகையா னிகழுமா றவற்றாற் பெறப்படாமையிற் சிறப்புவகையா னுணருமாறுதனக்குச் சூழ்ச்சித்துணையாகிய வவ்வந் தக்கரணங்களோடு கூடிநின்று சாக்கிரமுதலிய வைந்தவத்தை யுடைத்தாமென்றவாறு.

எனவே யங்ஙனநின் றைந்தவத்தைப் படுதலான்மாவுக் கிலக்கணமென்றவா றாயிற்று. இஃதுயிர்க்குத் தடத்த விலக்கண மெனப்படும் பொதுவியல்பு. ஒன்றன்றாயினுஞ் சகசமலத் துணராது மைச்சரசேய்ப் பவவற்றொடுசந்தித்து நின்றைந்தவத்தைத் தாமெனவியையும். உணராது சந்தித்ததென்பது காரணகாரியப் பொருட்டாய் நின்றது. சந்தித்தது வினையெச்சமுற்று. இவ்வாறன்றியான் மாவவற்றி னொன்றன்றாயினுஞ் சகசமலத்துணராமையா லவற்றொடு சந்தித்தது, சந்தித்தவழி யவையுந்தானு மமைச்சர சேய்ப்பநிற்றலா னைந்தவத்தைத் தாயிற்றென வதிகரணம் பகுத்துக்கோடற் கேற்ப, வேறுவேறு வினைமுடிபு செய்துரைத்தலுமொன்று. வடமொழிச்சூத் திரத்தோடுதலின், ஈண்டுமொயினுமென வருவித்தொரு தொடராக வைத்துரைக்க. அந்தக்கரண மவற்றினொன்றன்றாயினு மெனவே, அவற்றினொன்றன்றுதலு மநுவாதமுகத்தாலீண்டுபெற்றாம். இஃதுணராதார் அந்தக்கரண மவற்றினொன்றன் றென்றதனை வேறுதொடராக வைத்துரைப்ப. அங்ஙனமுரைப்பின் முன்வருவனவற்றையவாய் நின்றொருபொருண்மேல் வாராமையினொருசூத்திரமாதற் கேலாமையறிக. அவைசந்தித்ததென்புழி, ஒடுவுருபுவிகாரத்தாற் றொக்கது. இரண்டா வது விரிப்பினுமமையும். ஆன்மாவென்பது மேலைச்சூத்திரத்தினின் றும் வருவித்துரைக்கற்பாலதாகவும், ஈண்டு வேறோதியதோத்து வே றுதல்பற்றியென்றுணர்க. ஆன்மாவென்னுஞ் சொற்குப்பொருள் வியாபகமென்பதூஉமாம். மலத்து-மலத்தாலெனவிரிக்க. அமைச்சரசு- அமைச்சரோடுகூடிய வரசெனமூன்றனுருபும் பொருளுமுடன்றொக் கன. காரணப்பொருட்டாய் நின்றென்னும் வினையெச்சம் - ஐந்தவத் தைத்தென்னும் வினைக்குறிப்பு முற்றோடுமுடிந்தது. அந்தக்கரண

அ

மவற்றினென்றன்றவை 'யென்றதோரதிகரணம், ஒன்றன்றாயினுஞ் சக சமலத்துணராதவை சந்தித்ததென்றதோரதிகரணம், அமைச்சரசேய்ப்ப நின்றைந்தவத்தைத்தே யென்றதோரதிகரணம், ஆக மூன்றதிகரணத்ததிச்சூத்திரமென்றுணர்க.

---

## முதலதிகரணம்.

---

ஈண் டிவ்வான்மா வந்தக் கரணங்களாயுள்ள மனோபுத்தி யகங்கார சித்தங்களி லொன்றன்றென்றது- எ-து - மே - ள் - எ-னின், ஏனையவெல்லாம் வெவ்வேறு பெயர்பெற்று நிற்பவாகலா னுயிராகாவாயினு மன முதலிய வந்தக்கரணங்கள் சிந்தையைச் சீவனென்றுஞ் சீவனைச் சிந்தையென்று மிங்ஙன முயிரொன்னும் பெயரானும் வழங்கப்படுத லுண்மையானும், இந்திரிய முதலியவற்றை யவ்வாறுகூறுமையின் அஃதாகுபெயரொன்றற் கேலாமையானும், அவையே தனித்தனியான் மாவாமென்றலமை வுண்டீதெனை வந்தக்கரணன்மவாதிகள் கூறுங்கட்டாவை யாசங்கித்து, சூத்திரத்தின் முதற்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோட்டினுதலிற்று. இது மேலைச் சூத்திரத்து ளோகற்பாலதேயாயினுமீண் டிலக்கணங்கூறும் வழியுமவற்றொடு சந்தித்தமைச் சரசேய்ப்ப நிற்பதெனவவத்தைக் கேதுவாகவெடுத்தோதவேண்டுதலி னீரிடத்து மெடுத்தோதுதல் “சில்வகையெழுத்தின் செய்யுட்டாகிச், சொல்லுங்காலை யுரையகத்தடக்கி, நுண்மையொடு புணர்ந்த வொண்மைத்தாகி” என்னுஞ்சூத்திரத்துக்கேலாமையினதுபற்றி விதிமுகத்தானன்றி யநுவாதமுகத்தானீண்டுணர்த்தப்பட்டது.

(இ-ள்.) வெ-டை.

ஈண்டந்தக்கரணமென்றது - உள்ளந்தக்கரணமாகிய கலாதிகளினுஞ் செல்லாமைப் பொருட்டு மனோபுத்தி யகங்கார சித்தங்களிலெனக்கிளந்தெடுத்துரைத்தார். கலாதிகளுண்டெனக்கொண்டோரினுயிர் வேறுண்டெனக் கொள்ளாதாரின்மையின், ஆண்டாசங்கை நிகழாமையானும், அமைச்சரோடு வமிக்கப்பட்டவத்தைக் கேதுவாவணவு மனமாதியேயன்றிக் கஞ்சுகத்தோடு வமிக்கப்பட்டுக் கேவலத்தினு நீங்காதுடனிற்பனவாய கலாதிகளன்மையானு மவற்றை யீண்டெடுத்தோத

வேண்டாமையின், மனமுதலிய புறவந்தக்கரணங்களே மீண்டுக்கூற நின்றனவென்பது கருத்து.

அவை தாம்பிரகாசமாய் நின்றே யப்பிரகாசமாய் நிற்றலான்-எ-து-மே-ள்-எ-னின். மனம் புத்தி யகங்காரஞ் சித்த நான்குமருவி யான்மாவே யென்னவருமென நீயிருங்கோட்லி னுயிரவற்று ளொன்றுதலமையுமென்றுற் படுமிழுக்கென்னையென்னு மேற்கோளைச் சாதித்தனுதலிற்று.

(இ-ள்) அவ்வந்தக்கரணங்கடாந் தம்மிற் கீழுள்ளவற்றை நோக்கிச் சித்தாய்நின்றே தம்மைநோக்கிய சித்தாய் நிற்றலாற் றன்னைநோக்கியுஞ் சித்தாய்நிற்கு மிவ்வான்மாவாவ தந்தக் கரணங்களாயுள்ள மனோபுத்தி யகங்காரசித்தங்களி லொன்றன்றென மேற்கொண்டதென்றவாறு.

எனவே யுயிரான திட்டிக்கப்பட் டைம்பொறிக ளறிந்தவிடயங்களு ளொன்றனை யிஃதியாதா கற்பாற்றெனச் சித்தஞ் சிந்தித்தறியும் யான் சிந்தித்தேனென் றறியமாட்டாது, மனமதனை யிஃதின்னதா கற்பாற்றெனவு மஃதாமோ வன்றேவெனவு மிவ்வாறு சங்கற்ப விகற்பஞ்செய்தறியும் யான் சங்கற்ப விகற்பஞ்செய்தேனென் றறியமாட்டாது, அகங்காரமதனை யின்னதெனத்துணிவேன் யானென் றெழுப்பட்டெழுந்தறியும் யானெழுப்பட்டெழுந்தேனென் றறியமாட்டாது, புத்தியதனை யின்ன திதுவென நிச்சயித்தறியும் யானிச்சயித்தேனென் றறியமாட்டாது, ஆகலா னவ்வாறின்றி யவற்றொடுகூடி யான் சிந்தித்தேன், பற்றினேன், எழுந்திருந்தேன், நிச்சயித்தேனென்றும், அதன்பின் னதுவாய்ப் பரிணமித்துச் சுகதுக்க மோகரூபமாய்த் தன்மாட்டுவருந்திப் புத்திதத்துவத்தின் பரிணமங்களைக் கலாதிகளோடுகூடி நின்றிது சுகமிது துக்கமிது மோகமென்றறிந்தும், யான் சுகித்தேன், யான் றுக்கித்தேன், என்றறிந்தும், இங்ஙனம் பிறவற்றைநோக்கியுந் தன்னைநோக்கியுஞ் சித்தாகிய வான்மாத் தம்மைநோக்கிச் சித்தாகாத வந்தக்கரணங்களி னொன்றுமாறி யாண்டையதென மறுத்தவாறாயிற்று, "இவன்றானும் புத்தியுஞ்சித்திவ ணமோபுத்தி, என வழிநூலாசிரியர் கூறியதூஉ மிவ்வியல்புநோக்கி. ஈண்டுப்பிரகாச மப்பிரகாசமென்பன சித்தசித்தென்னும் பொருளவாம். ஏனையோரைநோக்கி யரசனுக்கணுக்கரா தற்சிறப்புப்பற்றி யமைச்சரா யரசனொன்றுபசரித்துக் கூறப்படுமொறுபோலப் புறக்கருவிகளை நோக்கி

யான்மாவுக் கணுக்கமாய்நிற் றற்சிறப்புப்பற்றி மனம்புத்தி யகங்காரஞ் சித்த நான்குமருவி யான்மாவேயென்ன வுபசரித்துக் கூறப்படுமத்தனையென்றொழிக. சூழ்ச்சித்துணையாதல்பற்றி யந்தக் கரணங்களமைச்சனையொகருமெனவே யேனைக்கருவிகளேனைப்பரிசனங்களையொக்குமென்பது பெற்றாம். அதுஞானாமிர்தத்திற் காண்க. மேலைச்சூத்திரத்தி னோதியவேதுக்களே யீண்டைக்கு மமையுமாயினுஞ் சிறந்தமைபற்றி வேறேதுக் கூறினார்.

வெண்பா.

மனமாதியா லுணர்தன் மன்னுபுலன்கண் ... ... *
மனமாதிமன்புலனி னல்லன் - மனமே ... ...*
லுதித்தொன்றையுள் ளமுணர்தலதனி ... ... *
னுதிக்குங்கடற்றிரையை யொத்து. ... ... (க)

மனமாதி-ஒத்து-எ-து-உ-ம்-எ-னின். அவ்வந்தக் கரணங்கடம்மிற் கீழுள்ளவற்றைநோக்கிச் சித்தாமாறுந் தம்மின்மே லுள்ளவற்றை நோக்கியுந் தம்மைநோக்கியும் சித்தாமாறுந் தெரித்துணர்த்தியேனவை வலியுறுத்துதனுதலிற்று.

(இ-ள்) மனமாதியா லுணர்தன் மன்னுபுலன்கள்-எ-து-மனமுதலிய வந்தக்கரணங்களா லுணரப்படுவன வைம்பொறிகளாற் றரப்பட்டுப் புறத்தே நிலைபெற்ற விடயங்களாம்- உள்ளமுணர்தன் மனமேலுதித்தொன்றை-எ-து-ஆன்மாவுணர்வது மனத்துக்கு மேலெனப்படும் புத்தியிற்றோன்றிய தொன்றனையாம்-கடற்றிரையை யொத்துதிக்கும்-எ-து - அவ்விருவேறுணர்வுங் கடலிடையெழுந்து கரைசாருந்திரைபோலப் பரம்பரையிற் பரமான்மாவின் மாட்டுவந்து தோன்றும்- அதனின் மனமாதி மன்புலனினல்லன்-எ-து- அதனானே மனமுதலியன வவ்விடயங்களின் வேறாயினாற்போல வான்மாவு மம்மனமுதலியவற்றின் வேறாமென்றவாறு.

உதிக்குமென்னும் பயனிலைக் குணர்த்த லிரண்டு மெழுவாய். செவ்வெண்டொகை விகாரத்தாற் றொக்கது. புலனினென்புழி - இன் உவமவுருபு. அல்லனென ஆடூஉ வறிசொல்லாற் கூறியது வடமொழி மதம்பற்றி. உதித்த வென்னும் பெயரெச்சவீறு விகாரத்தாற் றொக்கது. புத்தியிற் றோன்றிய தொன்றுவது - சுகதுக்க மோகரூப விடயம்.

பரம்பரையிற் றோன்றுகலாவது - முன்னர் வாயிற் காட்சி யுணர்வு தோன்றிய தன்பின் மானதக்காட்சி யுணர்வுதோன்றிய தன் பின்னர்த் தன் வேதனைக்காட்சி யுணர் வுயிரின்கண்வந்து தோன்றுதல். இதனுனே யந்தக்கரணங் கீழுள்ளவற்றை நோக்கிச் சித்தாமாறு மேலுள்ளவற்றை நோக்கிய சித்தாமாறு முயிரவ்வாறன்றி யாண்டுஞ் சித்தாமாறுங் கண்டுகொள்க.

வெண்பா.

சிந்தித்தாய்ச் சித்தந் தெளியாதா யாங்காரம் ...
புந்தியாயாய்ந்து மனமாகிப்-பந்தித்து ... ...
வெவ்வேறுதானே துணிந்துள்ள மிவ்வேறு... ..
மவ்வேறும் போதுபோ லாங்கு. ... ... ...(உ)

சிந்தி - ஆங்கு-எ-து - உ-ம்-எ-னின், மேற்பொது வகையாற் கூறிப்போந்த வந்தக் கரணங்களி னியல்புஞ் சிறப்புவகையாற் கூறு முகத்தான் மானதக்காட்சி யுள்ளுங்கடற் றிரைபோலப் பரம்பரையின் வெவ்வேறு யுணர்வு நிகழுமாறுணர்த்தி யுயிர்வேறுதல் வலியுறுத்துதனுதலிற்று.

(இ-ள்.) உள்ளம் எ-து-புருடதத்துவமென நின்றவுயிர்-ஆங்கு-எ-து-வாயிற் காட்சியாற் கண்ட விடயங்களி னென்றனை மனமாகியானுணரு மானதக்காட்சியின் கண்ணு மொருபெற்றித் தாதல்பற்றி-சித்தமாய்ச் சிந்தித்து-எ-து-சித்தமாக நின்றிஃதியா தாகற்பாற்றெனச் சிந்தித்தும்-மனமாகிப் பந்தித்து-எ-து-அதன்பின் மனமயமாய் நின்றிஃதின்ன தாகற்பாற்றெனப் பற்றியும் - ஆங்காரமாய்த் தெளியாது-எ-து-அதன்பின் னுங்காரமாய் நின்றஃதாமோ வன்றோ விதனை யின்னதெனத் தெளிவேன் யானெனத் தெளிவு பிறவாதெழுந்தும் - புந்தியாயாய்ந்து-எ-து-அதன் பின்னர்ப்புத்தியாய் நின்றிஃ தின்னதெனத் தெளிந்து - வெவ்வேறே துணிந் தவ்வாறு மிவ்வேறும்-எ-து-இங்ஙனம் வெவ்வேறுகவே யுணர்தலா னவ்வாறுணரும் புருடனிவ்வந்தக்கரணங்களின் வேறும் - போதுபோல்-எ-து-ஞாயிறு முதலிய வற்றேடுகூடி நின்று நாழிகை நாள் பக்கந்திங்கள் யாண்டுமுதலியன வாய்ப்படும் பாகுபாடு செய்யுங்காலதத்துவ மஞ்ஞாயிறு முதலியவற்றின்வேறுயினுற்போ லென்றவாறு.

ஆய்தலீண்டு நிச்சயித்தற் பொருட்டு. துணிதல்-எ-து - அறித
லென்னும் பொருண் மாத்திரையாய் நின்றது. தான்-அசை. ஏகாரந்
தேற்றம். இவ் அவ் என்பது - வகரவீற் றஃறிணைப் பன்மைச் சுட்டு
ப்பெயர். வேறும் போதுபோலெனவே யாண்டு நீக்கப்பொருண் ஞா
யிறுமுதலியன வென்பதுதானே விளங்குமென்பது நோக்கி யவ்வெ
ணச் சுட்டியொழிந்தார். சாரியையு முருபுமுடன் றொக்கன. சிறப்பு
ம்மை விகாரத்தாற் றொக்கது. ஆங்கும் வெவ்வேறுதானே துணிகெ
னவே மானதக்காட்சியு மிங்ஙன நால்வேறுவகைத்தா யொன்றற்கொ
ன்று முறைமையே யேதுவும் பயனுமாய்க் கடற்றிரைபோலப் பரம்
பரையிற் றோன்றுமென்றவா றாயிற்று. செய்யுளாகலின் முறைபிறழ
வைத்தார்.

வெண்பா.

அகாரவுகார மகங்காரம் புத்தி ... ... ... ...*
மகாரமனஞ் சித்தம் விந்துப்-பகாதிவற்றை ... *
நாதமுளம் வடிவா நாடிற்பிரணவமாம். ... ... ...*
போதங்கடற்றிரையே போன்று. ... ... ... (௩)

அகார - போன்று-எ-து-உ-ம்-எ-னின், அம் மானதக் காட்சியி
னிகழுஞ் சவிகற்ப வுணர்விற் கேதுவாய வற்றையுட்னின்று செலுத்
துமக்கரங்களிவை யென்பதூஉ மவ்வாற்ற னுணர்வுமாறி மாறித்தோ
ன்றுமாறு முணர்த்துத லுதலிற்று.

(இ-ள்.) வெ ளிடை.

"மன்னுமகார மனஞ்செலுத்தும் புத்தியினை-யுன்னுமுகாரமுப
கரிக்கு-முன்னுகு - மாங்காரந்தன்னை யகாரஞ்செலுத்தியிடு-நீங்காத
சித்தம் விந்துநோ" என்பவாகலான், ஈண்டோதியமுறையே முறை
யெனவும், "அவ்வுட் னுவ்வுமவ்வு மனம்புத்தி யாங்காரங்கள்" என்
றதே முறையெனவுங் கொண்டதற்கியையக்கொண்டு கூட்டியுரைப்பா
ருமுளர். பகாதிவற்றை நாடிற் பிரணவமாமெனவும் போன்றுமென
வுங்கூட்டுக. அந்தக்கரணங்களைச் செலுத்து மக்கரங்களைக் கூறுவா
ரொப்புமைபற்றிப் புருடனைச்செலுத்து மக்கரமுமுடன்கூறினார். உட
னின்றுசெலுத்துதல்பற்றிப் பேதமாகவைத் தோதப்பட்டன. நிகழ்ந்
திடும்வாக்கு நான்குநிவிர்த்தாதிகலையைப்பற்றி யகாரமுதலிய பஞ்சக

லைவடிவாய் நின்றிவற்றை வேறுவேறுசெலுத்துதல்பற்றிக் கணந்தோறு நினைப்புமறப்புமாகிய சகலகேவலங்க ளதிநுட்பமாய்க் கறங்கோலைபோலமாறிமாறிநிகழுமெனவு மச்சகலகேவலத்தின்கட் கணந்தோறு மங்ஙனமுணர்வுதித்து மொடுங்கியும்வருதல் சமுத்திரத்தின்கட்புதிது புதிதாய்த் திரைதோன்றியு மொடுங்கியும் வருமாறுபோலுமெனவு முணர்க. கடற்றிரையுவமை மேற்பரம்பரையாயுணர்வுவருதற்கெடுத்துக் காட்டினர். ஈண்டுப்புதிதுபுதிதாய் வருதற்கெடுத்து க்காட்டினர். ஆகலாற் புனருத்தியன்மை யுணர்க.

### வெண்பா.

எண்ணிலவோங்காரத்தீசர்சதாசிவமா ... ...
நண்ணியவிந்துவொடுநாதத்துக்-கண்ணிற் ...
பகரயன்மாலோடுபரமனதிதெய்வ ... ...
மகரவுகரம்மகரத்தாம். ... ... ... (௬)

எண்ணில-ஆம்-என்-து-உ-ம்-எ-னின், அவ்வக்கரங்களுஞ் சட்மாத்லி னவற்றையதிட்டிக்கு மதிதெய்வங்க ளிவையென்ப துணர்த்துதனுதலிற்று.

(இ-ள்) எண்ணிலவோங்காரத்து நண்ணியவிந்துவொடு நாதமதிதெய்வங்கண்ணில் ஈசரொடுகூடிய சதாசிவமாம், அகர வுகர மகரத்ததி தெய்வங்கண்ணிற் பகரயன்மாலோடு பரமனுமென்றவாறு.

எண்ணிலவோங்காரம் - எண்ணத்தின் கணிலவிய வோங்காரமென வினைத்தொகை. எண்ணம்-ஈண்டுமானதக்காட்சி. ஒடு-எண்ணின்கண்வந்தது. ஈண்டயன்மால் பரமனென்றது - சுத்தவித்தையின்வைகுவாரை. பரமன்-உருத்திரன். அகரவுகரம்மகரத்தா மென்புழிமகரமிசைப்பொருட்டா யொற்றில்வழி யொற்றாய்வந்தது.

---

## இரண்டாமதிகரணம்.

---

இனிச் சகசமலத்தினு லுணர்வின்றென்றது - எ - து - மே-ள்-எ-னின். ஆன்மா வந்தக்கரணங்களி னுன்றன்றுயி னவற்றெடு சங்

திந்து நிற்றற்கேது வென்னையெனு வவர் கூறுங்கடாவை யாசங்கித்துச் சூத்திரத்தி னிரண்டாங்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோட்னுதலிற்று.

(இ-ள்) வெ-டை.

ஆகந்துகமலங்களி னீக்குதற்குச் சகசமலமென விசேடிக்கப்பட்டது. படவே யுயிர்முதல்வனைப்போல வந்தக்கரண முதலியவற்றின் வேறாய சேதனப்பொருளாயினுஞ் செம்பிற் களிம்புபோல வேறுகாரணமின்றி மூலமலந் தன்னோடுடனாய் நிற்றலிற் றன்னியல்பானுணருமாறின்றிக் கருவிகளைக்கூடிநின் றுணர்வதாயிற்றென விடுத்தவாறாயிற்று. இதனானே மலத்துளதாமென மேற் பிரமாணத்தாற் பெறுவிக்கப்பட்ட மூலமலத்திற் கீண்டிலக்கணங் கூறினானென்பது பெறுதும். அறியாமையைச் செய்தலாகிய சேவலத்தி னிகழுமியல்பே மலத்திற்குத் தன்னியல்பு; கருவிகளோடுகூடியவத்தை யுறுவதாகிய விபரீதவுணர்வைச் செய்யுஞ்சகலத்தி னிகழு மியல்பே பொதுவியல்பாகலான் மலத்திற் கிருவகை யிலக்கணமு மீண்டே பெறப்பட்டன.

அதுதான் ஞானதிரோதகமாய் மறைத்துக்கொடு நிற்றலான்-எ-து-எது-எ-னின், சகசமலத்தினு லுணர்வின்றி யொழியிற் பின்கருவிகளோடு கூடிய வழியறிவுண்டாமாறி யாங்ஙன மெனச் சற்காரியவாதம்பற்றி நிகழுங்கடாவை யாசங்கித்து மேற்கோளைச் சாதித் தனுதலிற்று.

(இ-ள்) அச்சகச மலமாவது ஞானத்திற்குத் திரோதகமா யதனை யில்லையென்னும்படி மறைத்துக்கொண்டு நிற்றலானினி யிவ்வான்மாச் சகசமலத்தா லுணர்வின்றென மேற்கொண்ட தென்றவாறு.

மலத்தின திலக்கணம் வடமொழி வழக்குப் பற்றிக் கூறுவார் ஞானதிரோதகமாயெனவும், அதனைத் தமிழ்மொழியின் விளக்குவார் மறைத்துக்கொடு நிற்றலானெனவுங் கூறினார்; ஆகலானது கூறியது கூறலன்மையுணர்க. திரோதகமென்னும் வடமொழி மறைத்தலைச்செய்வ தென்னும் பொருட்டாய் வினை முதன்மேனின்ற வினைப்பெயர்.

இதனானே ஞானபாவமே யஞ்ஞான மென்பார் மதமு மறுக்கப்பட்டது; அபாவமொருகாரியத்தைச் செய்ய மாட்டாமையின்.

வெண்பா.

மாயாதநுவிளக்காய் மற்றுள்ளங்காணாதே ... *
லாயாதாமொன்றை யதுவதுவாய்-வீயாத... ...*
வன்னிதனைத்தன்னுண் மறைத்தொன்றுங்காட்டம்போற்
றன்னைமல மன்றணைத ரூன். ... ... ... (௫)

மாயா - தான் - எ - து - உ - ம் - எ - னின், ஆகந்து கமலமே ஞானநிரோதகமா தலைமையும் வேறோர் மலமுண்டென்றன் மிகைபோலுமென வைக்க வாதசைவர் முதலியோர் மதம்பற்றி நிகழுங்கடாவை யாசங்கித்து, ஆகந்து கமலத்தானுஞ் சகசமலத்தானுஞ் செயப்படுங் காரியங்கட்குத் தம்முள் வேற்றுமைபெரிதா மாறுணர்த்து முகத்தானேதுவை வலியுறுத்துத னுதலிற்று.

(இ-ள்.) உள்ளமாயாதநுவிளக்காய்க் காணாதேலொன்றை யாயாதாம்-எ-து-உயிர் ஆகந்துகமலமெனப்படு மாயாகாரியமாகிய வுடம்பு தனக்குக் காட்டாகக்கொண்டு காணாதாயின் ஒருவிடயத்தையு மறிவதில்லையாம் - மலந்தன்னையன்றணைதரூன்-எ-து-சகசமலமுயிரை யநாதியேபற்றிநிற்றல்-அதுவதுவாய்வீயாதவன்னிதனைத்தன்னுண்மறைத்தொன்றுங்காட்டம்போல்-எ-து-காட்டமுதலிய வற்றுளது வதுவேயாய்நின்றுந் தனக்குக் கேடில்லாதவன்னி தனக்குண் மறைத்துவைத்ததொன்றேயாய் நிற்குங் காட்டம்போலுமென்றவாறு.

எனவே காட்டாகநின்று விடயங்களையறியும்வண்ண முயிர்க்கறிவை விளக்குதன் மாயையின்செய்தி, அவ்வறிவைத் தடைசெய்து கொண்டு நிற்றன்மலத்தின்செய்தி, இவ்விரண்டு மிருளு மொளியு மிருளும்போ லிகலிநிற்பனவாகலான் அத்தன்மைத்தாய மாயை யத்தன்மைத்தாய மலமாதல் யாண்டையதென மறுத்தவாறாயிற்று. மற்றென்பது-மலமன்றணைத லென்பதனோடியைந்து வினைமாற்றின்கண் வந்தது. முற்றும்மை-சிறப்பும்மைக ளொக்கன. ஆறுந்தானுங் கட்டுரைக்கண்வந்தவசை. வன்னியது வதுவாதல்- காட்டத்தின் மறைந்துழிக் காட்டமேயாயுஞ் சூரியகாந்தத்துண் மறைந்துழி யதுவேயாயு மிவ்வாறே யவ்வவற்றின் மறைந்துழித்தானென்ப தொன்றில்லை யெ

ன்னும்படிநிற்றல்; அங்ஙனமாகியும் வியாமை - கடைதன்முதலிய
தொழிற்பாடு நிகழ்ந்த வழித்தோன்றுதலாற் பெற்றும். தன்னுண்
மறைத்தல் வன்னியென்ப தொன்றில்லையென்னும்படி பொதிந்து
கொண்டு தானேயாதல். ஒன்றுங்காட்டம்-ஒன்றேபோ லத்துவிதமாங்
காட்டமென்றவாறு. இவ்வா றுவமைக்கோதியவடையுந் தொழிலு
மியையும் பொருட்கண்ணுங் கூறிக்கொள்க. மாயை - கன்மங்கள்
போலாதியன்றெனக் காலத்தானும் வேற்றுமைகூறுவா ரன்றனைத
லென்றார். இங்ஙனங் கூறிப்போந்த மலமாவது- ஞானாபாவமென்
பாரும், பிராந்திஞானமென்பாரும், தமோகுணமென்பாரும், பஞ்சக்
கிலேசத்து ளொன்றாகிய அவிச்சையென்பாரும், மாயை - கன்மங்க
ளென்பாரும், சிவசத்தியென்பாரும், உயிர்க்குணமென்பாருமாய், அ
வ்வவசமயநூல்பற்றி மயங்குவாருமுளர். அம்மலத்திற்குப் பற்றுக்
கோடாகிய சூனியமுதலியவற்றின் வேறெனப்பட்ட வான்மாவு மிய
ற்கையாற் சடமென்பாரும், அறிவு மாத்திரையேயென்ற குணிப்பொ
ருளன்றென்பாரும், சுதந்திரவறிவுடைத்தென்பாரும், அவ்வுடம்பள
விற்றென்பாரும், அணுவளவிற்றென்பாரும், உருவென்பாரும், அரு
வென்பாரும், உருவருவென்பாருமாயின்னும் பலதிறப்படக்கூறி மய
ங்குவாருமுளர். அவையெல்லாம் பொருந்தாமை யாகமங்களுட்கா
ண்க. ஈண்டுரைப்பிற்பெருகும். இந்தச் சகசமலம்-ஞானநிரோதக
மாய், திரவியமாய் அறியாமைக்குணத்ததாய், செம்பிற் களிம்புபோ
ல் வுயிரின்குற்றமாய், அநாதிபந்தமாய், சடமுமாய், பலவுமாயி னழி
வெய்துமாகலின், அநாதிபந்தமாதல் பெறப்படாமையாய், ஒன்றே
யாய், விஞ்ஞானகலர் பிரளயாகலர் சகலரென்னு முயிர்ப்பாகு பாட்
டிற் கேதுவாய், உயிர்கடோறுந் தனித்தனி வெவ்வேறாய் மறைந்து
நின்று தத்தங்கால வெல்லையி னீங்குவனவாகிய சத்திகள் பலபல
வுடைத்தாய், உயிர்கண் மூன்றவத்தைகளும் படுதற்கு மூலகாரண
மாய், நித்தமாய், வியாபகமாய், வியாபகவுயிரணுத் தன்மைப்படுமாறு
செய்தலி னாணவமென்னும் பெயர்த்தாய், பசுத்துவம்- பசுநீகாரம்-
விருத்தி-மூர்ச்சை-மலம்-அஞ்சனம்-அவித்தை-ஆவிருதியென்றற் றொ
டக்கத்துக் காரணக்குறிகளு முடைத்தாய் நிற்பதெனவும், படலம்
படர்ந்தகண்-ஞாயிற்றின் சந்நிதியி னிற்பினும் படலத்தா னவ்வொளி
யை யிழந்திருளி னழுந்துமாறுபோல முதல்வன்சந்நிதியி னிற்பினுஞ்
சோபானமுறையி னறிவிக்க வறியுந்தன்மைத்தா யுயிராகியே யறிவி

த்தா லறியமாட்டாமையி னவ்வறிவை யிழந்தறியாமையா யழுந்துத லி னஃதவ்வுயிர்க்குப் பந்தமாயிற்றெனவுமுணர்க. அநாதியேமலத்தி னீங்குதல்-முதல்வன் வினையா யநாதிமுத்தத் தன்மையென வெண் குணங்களுள்வைத் தெண்ணப்படுவது சிவாகமங்களுக்கெல்லா மொப்பமுடிந்தாறபோல, அநாதியேமலத்தைப்பற்றுத லுயிரின்வினையா யுயிர்க்குற்றங்களுள்வைத் தெண்ணப்படுவதென்பதூஉ மவற்றிற்கெல்லா மொப்பமுடிந்தது. ஈண்டுப்படுங் கடாவிடைகளெல்லா மீரிட்த்துமொக்கும்.

---

## மூன்றுமதிகரணம்.

---

இனியிவ்வான்மாச் சாக்கிரஞ் சொப்பனஞ் சுழுத்தி துரியந்துரியாதிதமாயுள்ள பஞ்சாவத்திதனுய் நிற்குமென்றது. எ-து-மே-ள்-எ ணின், இருளகப்பட்ட கண்விளக்கோடுகூடியவழிவிடயங்களைக் காண்டலேயன்றி வெவ்வேறவத்தைப் படுமாறில்லை; அதுபோலமலத்தகப்பட்ட வுயிர்கருவிகளோடு சந்தித்தவழி யொருதன்மைத்தா யறிதலேயமைவுடைத்து; அவ்வாறன்றி மேலைச் சூக்கிரததோதிய முறையானைம்புலனறிந்தும், ஒடுக்கமறிந்தும், உண்டியும் வினையுமின்றிக் கிடந்தும், உணர்த்தவுணர்ந்தும், இங்ஙனம் வெவ்வேறவத்தைப் படுமாறியாங்ஙனமென வவர்கூறுங்கடாவை யாசங்கித்து, சூத்திரத்தினிறுதிக் கூற்றைக்கணணழித்துரைத்து மேற்கோடனுதலிற்று.

(இ-ள்) வெ-டை.

அவத்தையெனப்படுவன பலவுளவாகலினவற்று ளீண்டைந்தவத்தை யெனப்பட்டவை யாவையென்னுமைய நீக்குதற்குக்கிளந்தெடுத்துரைத்தார். அவத்திதனென்னும் வடமொழியை ஆடூஉவறி சொல்லாற் கூறியதம்மதம்பற்றி. அமைச்சரசேய்ப் பிற்றலா னென்பதூஉமீண்டும் வருவித்துரைத்துக்கொள்க; கொள்ளவே, படைகொடுபவனிபோதும் வேந்தன்கடைதொறும் விட்டுவிட்டுக் காவலுமிட்டந்தப்புரத்திற்செல்லுமாறுபோல, ஆன்மாவங்ங னைமைந்தவத்தைப் படுதலமைவுடைத்தென விடுத்தவாறாயிற்று.

அதுதான் மலசொரூபத்தின் மறைந்தரூப சொரூபியாய் நிற்றலான்-எ-து-எது-எ-ணின்; அரசன்போலுயிரங்ங னைமைந்தவத்தைப்

ஞராயினர். ஏனையவும் விரிந்த நூல்களுட் கூறியவாறு பற்றியுண ர்ந்து கொள்க.

வெண்பா.

இலாடத்தே சாக்கிரத்தை யெய்தியவுள்ள ... *
மிலாடத்தே யைந்தவத்தை யெய்து-மிலாடத்தே...*
யவ்வவவிந்திரியத் தத்துறைகள் கண்டதுவே .. *
யவ்வவற்றி னீங்கலது வாங்கு. ... ... ... (எ)

இலாட - ஆங்கு-எ-து-உ-ம்-எ-னின், அங்ஙன மதீதத்தை யெ ய்திய புருடன்மீளப் பிரேரக வவத்தையாகிய வுணர்த்து முறைமைச் சாக்கிரத்தைத் தலைப்படு மாறனு வாதமுகத்தான் விளக்கி யவ்விடத்தி னு முறையிற் செலுத்தும் பிரேரக கருவிகளாந்தின் றொழிற்பாடு பற் றி யைந்தவத்தை நிகழுமென்பதூஉம், அவையிவை யென்பதூஉம், சுத்தாவத்தையு மிவைபோ லுண்டென்பதூஉங் கூறியதனை வலியுறு த்துதனுதலிற்று.

(இ-ள்.) இலாடத்தே சாக்கிரத்தை யெய்திய வுள்ளம் - எ-து- இலாடத்தானத்தி னீங்கி யாண்டாண்டவத்தைப் பட்டுக்கீழ்ப்போந்து மூலாதாரத்தி னெய்தியபின் மறித்து மவ்வாறே யாண்டாண் டவத்தை ப்பட்டு மேற்சென்றி லாடத்தான ததி னுணர்த்து முறைமைச் சாக்கிர த்தைத் தலைப்பட்டபுருடன் - இலாடத்தே யைந்தவத்தை யெய்தும் எ-து-ஆண்டுஞ் சாக்கிர சாக்கிர முதலியவைந்தவத்தை யுறும்- இலா டத்தே யவ்வவவிந்திரியத் தத்துறைகள்கண்டு-எ-து-அவையாவன-அ வ்விலாடத்தின் கண்ணேய்ந்த வவ்வப்பொறிகளா னவ்வவ் விடயங்க ளை யுணர்ந்து-அதுவே-எ - து - அப்போ தப்போதே-அவ்வவற்றினீ ங்கல்-எ-து-அவ்வவ் விடயங்களி னீங்குதலாம் - அதுவாங்கு-எ-து- இனி முன்னர்க் கூறப்படுஞ் சுத்தாவத்தையுமிவைபோல வைவகைப் படு மென்றவாறு.

மேற்செல்வுழி யாண்டாண்டுப்படு மவத்தைகளுங் கீழ்ச்செல் வுழிபோலன்றி விசேடமின்மையான் வகுத்தோதாது, இலாடத்தே சாக்கிரத்தையெய்திய வுள்ளமென வநுவாதமுகத்தாற்கூறியொழிந் தார். இழியுங்காலு மேறுங்காலுங் கண்டத்தானத்திற் கனாக்காண் டலுண்டென்பது,முறையே; ஞானமிர்தத்தினும் போற்றிப் பஃறொ

டையினுங்காண்க. அவ்வவவிந்திரியம்-ஆண்டாண்டு விடயித்தற்குரிய விந்திரியம். அவ்வவ்விடயம்- ஆண்டாண்டுப் புலனாதற்குரியவிடயம். கண்டுநீங்கலென வினையும். அது-அவ்வக்காலம்;மீண்டுமடுக்கிக் கூறிக்கொள்க. கண்ணுருபுதொகுத் தேகாரம் விரித்தார் கண்டதென வொருமொழியாகவைத்துரைப்பாருமுளர். குற்றியலுகரத்தின் முன்னுடம்படு மெய்பெறுதற் கேதிலாமையானும், பொருட்சிறப்பின்மையானும், அஃதுரை யன்மையறிக. அப்போதப்போதே நீங்கலாவது விடயங்களைக் கண்டகண்டபொழுதே யவற்றை யயர்த்துவிடுதல். "ஒன்றன்பாலும் வருபயன் மாறிமாறிவந்திடும்" என வழிநூலாசிரியர்கூறியதூஉ மிவ்வியல்பு நோக்கியென்க. "கரணந்தன்னிற் செயமுறுங்கண்டுகொண்ணி" "உந்திடுங்கரணந்தன்னிற் செயமுறுமுணர்ந்துகொள்ளே" என்பனவுமது, இந்நுட்பமுணர்ந்துகோடற்குத் நூலாருந்திநியாயம்பற்றிக் கைப்பொருளேயீழ்க்கித் தெளிதன்முதலிய நூலத்துள்வைத்துக்காட்டுப. இனியருபசொருபியாய் நிற்புழிப்படுமைந்தவத்தையி னியல்புகூறுதற் கெடுத்துக்கொண்ட விவ்வதிகாரணத்தி னதனோடியைபில்லாத சுத்தத்தின்கட்படு மைந்தவத்தைகூறுதற் கோரியைபில்லையாயினும், அவத்தையெனப்படுவன வீண்டோதியனமாத்திரையே போலுமென மயங்காமைப்பொருட்டு, வேறுமைந்தவத்தையுள வவைமுன்னர்க் கூறப்படுமென்னுந் துணையேகூறுவார் அதுவாகுமென்றொழிந்தார். இக்கருத்தேபற்றி, "பிறிவிலாஞானத்தோரும் பிறப்பறவருளானுங்கே - குறியொடுமஞ்சவத்தை கூடுவர்வீடு கூட" என்றொழிந்தார் வழிநூலாசிரியரும். இவ்விரண்டு வெண்பாக்களானுங் கூறிப்போந்த மூத்திறத் தைந்தவத்தைகட்கு முறையே மூலமலமாய கேவலஞ்சகலஞ் சுத்தமென்ற மூன்றனுள் வைத்துத் தன்னுண்மை யெனப்படுங் கேவலத்தினியல்பு-சகசமலத்துணராதென்பதனானேபெற்றும். ஏனைச்சகலத்தினியல்பு வருகின்ற சூத்திரத்தினுஞ் சுத்தத்தினியல்பு அப் பாலைச்சூத்திரத்தினும் பெறுதும். நான்காஞ்சூத்திரமுடிந்தது.

---

# ஐந்தாஞ்சூத்திரம்.



விளம்பியவுள்ளத்து மெய்வாய்கண்மூக் ... ... *

களந்தறிந்தறியா வாங்கவைபோலத் ... ... ..*

தாந்தமுணர்வின் றமியருள் ... ... ... ... *
காந்தங்கண்ட பசாசத்தவையே ... ... ... *

என்னின், இவ்வான்மாக்களிடத்துத் தமது முதலுபகார முணர்த்துதனுதலிற்று.

எ-று-க-ரை-என்னின், ஐந்தவத்தைப்படும் வழிக்கருவியுமுயிரு மமைச்சு மரசுமேய்ப்பதிற்பி னவையேயமையுமாகலான், முதல்வனு லாண்டைக் காகற்பால தொருபயனில்லைபோலு மென்னுங்கடாவை யாசங்கித்து, ஆண்டு மின்றியமையாது வேண்டப்படுவதாய முதல்வ னுடைய வுதவியை யறிவிக்குமுகத்தானே யிரண்டாஞ்சூத்திரத்தி னோதிய துணைககாரண முதற்காரணங்க ளதிலக்கணமுணர்த்துதலிவ் வஞ்சாஞ்சூத்திரத்தின் கருத்தென்றவாறு.

இதனுனே சூத்திரவியைபு மினிதுவிளங்கும். மாயை-கன்மங் கள் திரோதான சத்திக்குக் கருவியா யதனுளடங்குதலிற் றமது முத லுபகாரமெனப்படுந் திரோதானசத்திய திலக்கணமுங்கூறவே யவற்ற திலக்கணமுங் கூறியவாறுதலறிக.

இச்சூத்திரத்தின் பிண்டப்பொழிப்பு - மேலைச்சூத்திரங்களினங் ஙனங் கூறிப்போந்த வுயிரானே, மெய் வாய் கண் மூக்குச் செவி யெ ன்பன தத்தம் விடயங்களை யிஃதின்னதென் றளவிட்டறிந்து மங்ங னமறிகின்ற தம்மையுந் தம்மை யதிட்டித்து நின்று செலுத்து மிவ்வு யிரையு மறியமாட்டா ; அவ்விந்திரியங்கள்போ லுயிர்களுந் தமதறி விற்கு வியஞ்சககமாகிய முதல்வனது சிற்சத்தியான்மேற் கூறிப்போந் த விருவகை யைந்தவத்தையி னின்று வினைப்பயன்களையறிந்தனுபவி க்குந் தம்மையுந் தம்மைச்செலுத்துந் திருவருளையு மறியமாட்டா; உயிர்க ளவ்வாறுணர்தல் காந்தத்தைக்கண்டவிரும்பு அதன் சந்நிதி மா த்திரையின் வலித்துக்கொள்ளப்படுமாறுபோலக் காரணத்தானன்றிச் சங்கற்பத்தான திட்டிக்கு முதல்வன் சந்நிதி மாத்திரையி னுமாகலான துபற்றி முதல்வன் விகாரியாதலின் றென்றவாறு,

ஆகலானது பற்றி முதல்வன் விகாரியர்தலின் றென்பது குறிப் பெச்சம். ஐம்பொறிகளைக் கூறியது பலக்கண மாதலினேனைக் கருவி களு மவ்வாறுதல் கொள்ளப்படும்; அற்றாகலினன்றே, "பொறிபுல ன் கரணமெல்லாம் புருடனாலறிந்து ,, என்றார் வழிநூலாசிரியரும்.

விடயங்களையறிவுழி முதல்வனுடனின்று செலுத்துவனாயின் விடயங்களோடொப்ப முதல்வனையு மறிதல்வேண்டுமென்பாரை நோக்கி, அளந்தறிந்தென்றொழியா தறியாவென்றார். ஆங்கவை - ஒருசொன்னீர்மைத்து - தம்முணர்வின்றமியென்றது - தமது முதலென்னும் பொருள்படவந்த வாறும்வேற்றுமைத்தொகை - ஈண்டருளென்றது தேற்புழிக்கோடலாற் றிரோதானசத்தியின் மேனின்றது. அருளாலெனவிரித்து, அளந்தறிந்தறியாவென வுவமைக்கோதிய வினையைப்பொருளினுங் கூட்டியுரைக்க. இதனுள் "விளம்பியவுள்ளத்து மெய்வாய் கண்மூக்களந் தறிந்தறியா" என்றதோ ரதிகரணம்; "ஆங்கவைபோலத் தாந்தமுணர்வின் றமியருள்காந்தங்கண்ட பசாசத்தவையே" என்றதோ ரதிகரணம்; ஆகவிரண்டதிகரணத்த திச்சூத்திரமென்றுணர்க.

---

## முதலதிகரணம்.

---

ஈண்டையுணர்வுக ளான்மாவா லுணருமென்றது-எ-து-மே-ள்-எ-னின், தாமரையினீர்போறபுருடன் பற்றற்றுநிற்பப் புருடன் சந்நிதியிற்புத்திதத்துவமேயைம்பொறிவழியான்விடயங்களை யறியுமெனவமையும், அவ்வாறன்றிக் கருவிகளோடுகூடிய புருடனேயவத்தைப்படுமென மேற்கூறியதமையு மாறென்னையெனச்சாங்கியநூலார்மதம்பற்றி நிகழுங்கடாவை யாசங்கித்து, சூத்திரத்தின் முற்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடனுதலிற்று.

(இ-ள்.) வெள்ளிடை.

உணர்விற்கேதுவாகிய பொறிகளை யுணர்வென் றுபசரித்தார்.

அவற்றினலான்மாவொற்றித்துக்காணினல்லதவையொன்றையும்விடயியாவாகலான்-எ-து-ஏது-எ-னின், அதற்குப் பிரமாணமென்னையென்பாரை நோக்கி மேற்கோளைச்சாதித் தனுதலிற்று.

(இ-ள்.) அவ்வைம்பொறிகளோடான்மா வொற்றுமைப்பட்டுநின்றறிந்தாலன்றி யவையொரு விடயத்தையும் விடயிக்கமாட்டா தாகலானீண்டை யுணர்வுக ளான்மாவா லுணருமென மேற்கொண்டதென்றவாறு.

ஆன் உடனிகழ்ச்சிப் பொருட்கண் வந்தது. உம்மையிழிவுசிறப்பு; முற்றுமாம். எதிர்மறை முகத்தாற் கூறினரின்றி யமையாமை விளக்குதற்கு.

வெண்பா.

ஐம்பொறியை யாண்டங் கரசாய்உளநிற்ப ... ...
வைம்பொறிகளுள்ள மறியாவா-வைம்பொறியிற்
காணதேற்காணது காணுமுளங் காணதேற்... ...
காணுகண்கேளா செவி. ... ... ... ... ...(க)

ஐம்பொறி-செவி-எ-து-உ-ம்-எ-னின், உயிரங்ஙன மொற்றுமைப்பட்டு நின்று செலுத்துதலு மவைஉயிரையின்றி யமையாமையு மெற்றாற் பெறுது மென்பாரை நோக்கி யேதுவை வலியுறுத்துத னுதலிற்று.

(இ-ள்) அரசாய்-எ-து-அரசனத்தாணி மண்டபத்தின் வைகித்தன்கீழ்க்கருமஞ் செய்வாரை யவ்வவர்க்குரிய கிரியங்களிற் செலுத்தியாளுமாறுபோல - உளமைம்பொறியை யாண்டங்கு நிற்ப-எ-து-உயிரைம்பொறிகளை யவ்வவற்றிற்குரிய விடயங்களிற் செலுத்தி யாண்டிலாட்த் தானத்தினிற்றலான்- ஐம்பொறிகளுள்ள மறியாவாம்-எ-து-அரசனுலேவப்பட்டோரேவிய கருமமாத்திரையினன்றி யதிகத்திற்செல்லமாட்டாமைபோல வவ்வைம்பொறிகளுயிரையறியமாட்டாவாயின - அற்றேலைம்பொறிகளுயிரானன்றியறிதலமையாவாயினுமுயிரைம்பொறிகளா னன்றியு மறிதலமையும்போலுமெனின்; ஐம்பொறியிற் காணதேற் காணதுகாணுமுளங் காணதேற்காணுகண் கேளாசெவி-எ - து - ஒருகருமஞ்செய்தற் கண்ணரசரு மமைச்சர் முதலாயினருந் தம்மு ளின்றியமையாதவாறுபோல வொன்றனைவிடயித் தற்கணுயிருமைம்பொறிகளுந் தம்மு ளின்றியமையா வென்றவாறு.

அன்னவாதல்-உயி ரைம்பொறியினீங்கிச் சொப்பனத்தானத்தினெய்தியவழிக் கண்டுகொள்க. நிற்பவென்னுஞ் செயவெனெச்சம்-மழைபெய்யக் குளநிறைந்த தென்புழிப்போல, நிற்றலாலெனக் காரணப்பொருட்டாய் நின்றது. இவ்வாறுரையாக்கால் இஃதேதுவின் பொருள் வலியுறுப்பதாய வுதாரணமாதற் கேலாமையறிக.

## இரண்டாமதிகரணம்.

இனி யிதுவுந் தமதுமுதலாலே யுணருமென்றது-எ-து-மே-ள்-எ-னின், கருவி சடமாகலிற் சித்தாகிய வுயிரானன்றி யமையாவாயி னுஞ்சித்தாகியவுயிர் முதல்வனதுபகாரத்தை யவாய்நிற்பதன்று; அவாவுமாயின், முதல்வனு மவ்வாறே பிறிதொன்றனுபகாரத்தை யவாவுமெனப்பட்டு, மேலும் வரம்பின்றியோடுமென வீசுரவவிகா ரவாதிகண்முதலியோர் கூறுங்கடாவை யாசங்கித்து, சூத்திரத்தின் பிற்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடனுதலிற்று.

(இ-ள்.) வெ-டை.

தமது முதலென்பது- யானெம்மூர்புகுவன் நீ நும்மூர்புகுவை யென்புழிப்போல வேறு முடிபுகோடலிற் பால்வழுவன்மை யுணர்க. உம்மையிறந்ததுதழீஇய வெச்சம். இம்முறைமை தமக்கொரு முதலு டை யவற்றிற்கேயன்றி யேனைப்பொருட்கு வரம்பின்றியோடுமா றில் லையென்பார் தமது முதலென் றுடம்பொடு புணர்த்தோதினர். தம் முணர்வின் றமியென்றதுமது. தத்துவங்களு முயிருந் தமக்கொரு முதலுடையனவாதலு முதல்வனுக் கஃதின்மையு மேற்கூறிப்போந்த சூத்திரங்களாற் பெறப்பட்டன வென்பதுகருத்து.

இவ்வான்மாத்தன்னாலேயுணருமிந்திரியங்களைப்போலத்தானுந் தன்னையுணராது நிற்றலான் - எ-து-ஏது - எ-னின், உயிரைம்பொ றியிற்சடமன்மையானவற்றையெடுத்துக்காட்டிமேற்கோடலீண்டைக் கமையாதென்பாரைநோக்கி யதனைச்சாதித்தனுதலிற்று.

(இ-ள்) வெ-டை.

சடமுஞ்சேதனமுமாய வேறுபாடுபற்றித் தம்முளொவ்வாவாயி னும், தம்மையுந்தமதுமுதலையுமறியமாட்டாமைக்கண், ஐம்பொறி யுமுயிருந்தம்முளொக்குமாகலின், அதுபற்றி யங்ஙன மேற்கோட லமையுமென்பது கருத்து.

வெண்பா.

மன்னுசிவன்சந்நிதியின் மற்றுலகஞ்சேட்டித்த ...
தென்னுமறையினியன்மறந்தாய் - சொன்னசிவன்
கண்ணாவுளம்வினையாற் கண்டறிந்துநிற்குங்கா ...
ணெண்ணுஞ்சிவனசத்தையின்று. ... ... (உ)

மன்னு-இன்று - எ-து-உ-ம்-எ-னின், தன்னானுணருமிந்திரியங்களை யிண்டைக்குவமைகூறி, அவ்விந்திரியங்கட்கு வரும்பயன் அவற்றினை லொற்றித்துக்காணு முயிர்க்காய வாறுபோல, உயிர்க்குவருமின்பதுன்பப் பயனு முயிரானொற்றித்துக்காணு முதல்வனுக் காதல் வேண்டு மென்பானைநோக்கி, அங்ஙன மாகாமைகூறி, அதனை வலியுறுத்துதனுதலிற்று.

(இ-ள்) மன்னுசிவன் சந்நிதியின் மற்றுலகஞ்சேட்டித்ததென்னு மறையினியன்மறந்தாய்-எ-து- ஈண்டுக்கூறிய கருத்தளவைபேயன்றி நிலைபெற்ற முதல்வனது சந்நிதியிற் பிரபஞ்சஞ் செயற்படுகின்றதென்றோதும் வேதப்பொருளையு மயியாது பிணங்குகின்ற பேதாய்-உளஞ்சொன்ன சிவன் கண்ணாவினையற் சண்டயிந்து நிற்குங்காண்-எ-து-உயிராவது தமக்கென வோர்காரணமின்றித் தன்பொருட்டேயறிவனவாய வவ்விந்திரியங்கள்போலன்றி யவ்வேதத்துளெடுத்தோதப்படு முதல்வன் றனக்குக் காட்டாகிநிற்பத் தான் செய்தவினைசகீடாக ஒன்றனையறிந்துநிற்கு மவ்வேறுபா டறிவாயாக-இன்று சிவனசத்தையெண்ணன்-எ-து-அங்ஙனங் காட்டாக நிற்பினுந் தனது சந்நிதியி னசத்தெல்லாஞ் சூனியமாகலான் மங்கலவடிவினனாய முதல்வனவ்வுயிர்போ லவற்றை யநுபவியா னென்றவாறு.

இதனுட் சிவனென்றது- மன்னுசிவனென்புழிப்பே ரின்பத்துக்குக்காரணமென்னும் பொருட்டாய்த் தனது சந்நிதிக்கணுலகத்தைச் சேட்டிப்பித்தற்குரிய வினைபுணர நின்றது; சொன்னசிவ னென்புழி முற்றுணர்வின னென்னும்பொருட்டாய்க் காட்டாதற்குரிய வினைபுணரநின்றது; எண்ணான்சிவ னென்புழித்தூய தன்மைய னென்னும் பொருட்டா யசத்தையெண்ணாமைக்குரிய வினைபுணர நின்றதாகலாற் கூறியதுகூறலன்மையுணர்க. அஃதம்மூப்பொரு ளுடைத்தென்பது சோமசம்புபத்ததிவியாக்கியான முதலியவற்றுட்காணக. சிவதத்துவ விவேகத்துண் மூவகைப்படுத்தோதிய பொருளுமிவையேயாமாறு கண்டுகொள்க. ஈண்டுலகமென்றதுயிர்கள் - மறையினியலும் பொருளைமறையினியலென் றுபசரித்தார். இறந்ததுதழீஇய வெச்சவும்மை விகாரத்தாற்றொக்கது. மறந்தாயென்பது விளியுருபேற்ற பெயர். ஈண்டுச்சந்நிதியென்றது- அவிகாரவாதிகள்கூறு மபிமுகமாத்திரையன்றென்பார் சொன்னசிவன் கண்ணுமென்றார். சிவசத்தி யவ்

லக்காரியங்களி னுன்முகமாதலாகிய சங்கற்பமேயீண்டுச் சந்நிதியெ னப்படுமென்பதாம். காந்தங்கண்ட பசாசத்தவையே யென்றது-ஒரு புடையுவமையாதல்பற்றியே பிறிதன்றென்பது கருத்து. வினையினு லென்றது-ஐம்பொறிபோலன்றி யுணர்தற்பயனுயிர்க்கே யாதற்கேதுக் காட்டியவாறு. கண்டறிதல்-ஒருபொருட்பன்மொழி. எண்ணலீண் டநுபவித்தன்மேற்று. இன்றெனபது- சாதியொருமை. அவனெனி றொன்பது - அவாய்நிலையான்வந்தது. ஆகலாலென்பது- சொல்லெச் சம். இன்றாகல் "யாவையுஞ் சூனியஞ் சத்தெதிர்" என்புழிப் பெற ப்படும். இக்கருத்துப்பற்றி "மாயைமருவிடான் சிவனவன்கணுறை தராவசேதனத்தால்" என்றார் வழிநூலாசிரியரும். "உன்னுதாத்தே கிடந்த கிடமுறுவதெல்லா - முன்னுடையதென்னுய்நீ யுற்றனையோ- மன்னுயிர்க-ளவ்வகையேகாணிங் கழிவதுவுமாவதுவுஞ் - செவ்வகை யேநின்ற சிவன்பால்" என்றது உ மிவ்வியல்பு நோக்கி.

வெண்பா.

வெய்யோனொளியி னொடுங்கிவிளங்காது ... ...*
வெய்யோனையாகாத மீன்போல-மெய்யவனிற் ... *
கண்டுகேட்டுண் டுயிர்த்துற்றறியுமைம்புலனைக் ...*
கண்டுடனாய் மன்னுதலைக் காண். ... ... ...(௩)

வெய்யோன் - காண்-எ-து-உ-ம்-எ-னின், உயிரங்ஙன முணர்த் த வுணருங்கால முதல்வனின் வேறு நின்றுணருமோ வொன்றாய் நின் றே யுணருமோ வென்பாரை நோக்கி, அவ்விரண்டியல்பு மின்றி நின் றுணருமா றுணர்த்தி, அதனை வலியுறுகதுதனுதலிற்று.

(இ-ள்.) வெய்யோ னொளியி னொடுங்கி-எ-து-ஞாயிற்றி னொளி யினடங்கி - விளங்காது-எ-து-அதனின் வேறாய் விளங்கித் தோன்று தலின்றி - வெய்யோனை யாகாத மீன்போல-எ-து-அதுவா யொழித லுமில்லாத நாணமீன்கள் அஞ்ஞாயிற்றானே யொளியுடையவாமாறு போல - மெய்யவனிற்கண்டு கேட்டுண்டுயிர்த்துற்றறியுமைம்புல னைக்கண்டு-எ-து-கண்டுங் கேட்டு முண்டு முயிர்த்துந் தீண்டியு மறிய ப்படு மைவகை விடயங்களையு முயிர் மெய்ப்பொருளாகிய முதல்வனு லுணர்ந்து - உடனாய் மன்னுதலைக்காண்-எ-து-வேறாதலு மொன்றா தலுமின்றி யிவ்விரண்டிற்கும் பொதுவாயடங்கி யுடனாய் நிலைபெறுத லை யறிவாயாக வென்றவாறு.

உவமையடை பொருளினும், பொருள்வினை யுவமையினுஞ்செ ன்றியையும். ஐ - சாரியை. நாண்மீன்முதலியவற்றினொளியெல்லா ஞாயிற்றினுடைய வொளியே யென்பது வேதநூற்றுணிபாகலா னஃதீண் டைக் குவமையாயிற்று. உயிரொன்னு மெழுவாய்மேலைவெண்பாவினி ன்றும் வருவித் துரைக்கப் பட்டது.

வெண்பா.

அருளுண்டாமீசற் கதுசத்தியன்றே ........*
யருளுமவ னன்றியில்லை-யருளின் ... ... ... *
றவனன்றேயில்லை யருட்கண்ணூர்கண்ணுக் ... ...*
கிரவிபோனிற்குமர னேய்ந்து. ........ (ச)

அருளுண்டாம்-ஏய்ந்து-எ-து-உ-ம்-எ-னின், அங்ஙனமாயினுமு யிர்கட்குப் பல்வேறு வகைப்பட வுணர்வு நிகழ்தலின் அஃதுணர்த்து தல் வேறுபாட்டானுய தெனல்வேண்டும், வேண்டவே, நிருவிகாரியெ ன்னுஞ் சுருதியோடு முரணி, முதல்வன் விகாரியாவான் செல்லு மென்பாரை நோக்கி, விகாரியாகாமை யுணர்த்தி, அதனைவலியுறுத்து த னுதலிற்று.

(இ-ள்.) அருளுண்டா மீசற்கு-எ-து-உயிர்கட்குப் பசுத்துவத் தை நீக்கிச் சிவத்துவத்தை விளக்குதற் கணுளதாகிய விரக்கமுதல்வ னுக் கநாதியே யுள்ளது - அது சத்தி-எ-து-அவ்விரக்கம் வேறுபொ ருளன்று முதல்வனுக் குளதாகிய சத்தியேயாம் - அருளு மவனன்றி யில்லையரு ளின்றவனன்றே யில்லை-எ-து-இரக்கமு மவனுங் குணமு ங் குணியுமாகலி னவ்வருளு முதல்வனையின்றி யமையாது முதல்வ னு மதனையின் றியமையானாய் - அருட்கண்ணூர் கண்ணுக் கிரவிபோ லேய்ந்து நிற்கு மரன்-எ-து-ஞானக்கண்ணுடையாருணர்விற்கு ஞா யிறு தன்னொளியோடு தாதான்மிய மாயியைந்து நிற்கு மாறுபோல, அவ்வருளோடு தாதான்மிய மாயியைந்து நிற்பன் முதல்வனாகலால் த ன்வயத்தனாகிய வம்முதல்வன் விகாரமின்றி நின்றே தனது சங்கற்ப சத்தி மாத்திரையா னனைத்துஞ் செய்தல் கூடுமென்றவாறு.

ஆகலாற் றன்வயத்தனாகிய வம்முதல்வன் விகாரமின்றி நின்றே தனது சங்கற்ப சத்திமாத்திரையா னனைத்துஞ் செய்தல் கூடுமென்ப து குறிப்பெச்சம். உம்மை யெதிரது தழீஇயது. இன்றியென்னும்வி

னையெச்சக் குறிப்பி னிகரஞ் செய்யுளாகலி னுகரமாய்த் திரிந்தது. அ ன்றே அசை. இவ்வியல்பு சித்தாந்த நெறி யுணர்ந்தார்க்கன்றி விளங் காதென்பார் அருட்கண்ணூர் கண்ணுக்கென்றார். சத்தியத்துண்மையும தனியல்பு நீக்கமின்றி நிற்குமன்றே யென்பதனுள் வருத்துரைத் த மையினுண்டுக் காண்க. ஐந்தாஞ் சூத்திர முடிந்தது.



# ஆறுஞ் சூத்திரம்.

உணருருவ சத்தெனி னுணராதின்மையி ...*
னிருதிறனல்லது சிவசத்தாமென ... ... *
விரண்டு வகையி னிசைக்குமன் னுலகே. ...*

எ - னின், சத்து மசத்தும் வரைசெய் துணர்த்துத னுத லிற்று.

எ-து-க-ரை-எ-னின், சூத்திரக்கருத் துணர்த்துத னுதலிற்று.

(இ - ள்) மேலைந்து சூத்திரத்தானுங் கூறிப்போந்த பொருள்க ளுள்; யாதுசத்தியாதசத்தென்னுமைய நீக்குதற்குச் சத்தி னியல்பு மசத்தினியல்பு மிவையென வவ்விரண்டி மிலக்கணத்தாற்றம் முண்ம யங்காதவாறு வரைந்து வைத்துணர்த்தி, உண்மையதிகாரத்திற்குத் தோற்றுவாய் செய்யு முகத்தானே யிலக்கண வோத்துட் கூறுதற் கெ ஞ்சி நின்ற பதிப்பொருள திலக்கணங் கூறுதலிவ்வாறுஞ் சூத்திரத்தி ன் கருத்தென்றவாறு.

இதனானே சூத்திர வியைபுமினிது விளங்கும்.

இச்சூத்திரத்தின் பிண்டப்பொழிப்பு - தம்முணர்வின் றமியாகி ய முதற்பொரு ளளவைகளா னறியப்படு மியல்பிற்றெனின், அங்ங னமறியப்படும் பிரபஞ்சம்போ லழிபொருளாகிய வசத்தாம்; எல்லா வற்றானு மறியப்படாத வியல்பிற் றெனின், அங்ஙன மறியப்படாத முயற்கோடுபோலச் சூனியப்பொருளாம்; ஆகலா னிவ்விருபகுதியும ன்றி ஒருவாற்று னறியப்படாமையு மொருவாற்று னறியப்படுதலுமா

கிய விரண்டு வகையானுஞ் சிவசத்தாமெனக் கூறுவார் மெய்யுணர்
வினிலைபெற் றுயர்ந்தோ ரென்றவாறு.

உணருருவெனினசத்தெனமாறுக. எனினென்பது முன்னரு
ஞ்சென்றியைந்தது. முற்றும்மைகெடாக்கன. அல்லதென்பது வினை
யெச்சக் குறிப்பு முற்று. அன்றியா மெனவியையும். ஒருவாற்று
ணறியப்படாமை - பாசஞானம் பசுஞானங்களா லறியப்படாமை.
ஒருவாற்று னறியப்படுதல் - சிவஞானமொன்றானே யறியப்படு
தல். பாசஞானம்பசுஞானங்களாலறியப்படாமையிற்சிவமாதலும், ப
திஞானத்தாலறியப்படுதலிற்சத்தாதலும்பெறப்படு மென்பார், இர
ண்டுவகையிற்சிவசத்தாமெனவிசைக்குமென்றார். சிவசத்தென்னுமி
ருபெயரொட்டுப்பண்புத்தொகை வடநூன்முடிபு. சடமாகிய சத்
தி னீங்குதற்குச் சிவசத்தென்றார். சிவசத்தென்பது - சித்துச் சத்
தென்னும் பொருட்டு. எழுவாய் மேலைச்சூத்திரத்தினின்றும் வரு
வித் துரைக்கப் பட்டது. இருதிறனுமன்றி யிரண்டுவகையானுஞ்
சித்தாதலுஞ் சத்தாதலு முடையனாய் நிற்றன் முதல்வனுக்கிலக்
கணமென விலக்கணமு மிதனுட்போந்த வாறுணர்க. முதல்வனு
க்குப் பொதுவியல்புமேற் புனருற்பவ மூணர்த்து முகத்தாற்கூறிப்
போந்தமையின் இது சொரூபவிலக்கண மெனப்படுஞ்சிறப்பிலக்கண
மெனக்கொள்க. அற்றாகலினன்றே, இதனை யிலக்கணவோத்துண்
முதற்கட்கூறு தன்மையைச்சாரவைத் திறுதிக்கட்கூறியதூஉமென்க.
இன்னு முதல்வனுக் குளவாகிய சிறப்பியல்புக் குணங்களெல்லா மிவ்
விரண்டனு ளடங்கும். அஃதறிந் தடக்கிக்கொள்க. “தன்னாலே தனை
யறிந்தாற் றன்னையுந்தானே காணும்” -எ ம்- “உன்னரிய திருவரு
ளாலொழிய மலமுளதென்றுணர்வரிதா மதனுண்மை தெரிவரிதா மு
னக்கே” எ-ம், “மாயை மாமாயை மாயாவரு மிருவினையின் வாய்
மை, யாயவாருயிரின் மேவுமருளெனி லொளியாய் நிற்கும்” எ-ம்,
ஓதியவற்றாலேனைப் பசுபாசங்களுஞ் சிறப்பியல்பு பற்றி யுணர்தல் சி
வஞானத்தானன்றிய மையாதாயினும், “தீபமெனத் தெரிந்தாங்கொ
ருவியான் மாவினுண்மை யுணர்ந்தவர் தமையுணர்ந்தோர்க்கு மிது
பசுஞானம்” எ-ம், “இவை கீழ்நாடலே காதலினானன் பிரமமென்
னு ஞானங்கருது பசுஞானம்” எ-ம், பொதுவியல்புபற்றி யோதுத
லானும், யானிதனை யறிந்தே னறிகின்றிலே னென்றறியும் பாசவுணர்
விற் கவற்றது பொதுவியல்பு விடயமாதல் கண்கூடாகப் பெறப்படுத

லானும், அவையொருவாற்றா னுணருருவாதலு முடைமையிற் சிவச த்தாவான் செல்லாமையறிக. சற்காரியவாதங் கூறுஞ் சைவசித்தாந்த த்தில் அசத்தென்பது சத்துக்குமறுதலை யன்மையான் அப்பசுபாசங்க ளங்ஙன மறியப்படும் பொதுவியல்புபற்றியசத்தெனப்படுமாயினு ஞ்சிறப்பியல்புபற்றி யசத்தாதல் செல்லாமையிற் சிறப்பியல்பு நோ க்கும் வழி யவை சத்தாதற் கிழுக்கின்மையுமறிக. இங்ஙனஞ் செவ் வனே யிறுக்க வறியாதார் அபாவத் தியல்பாவது பாவத்திற்கு மறுத லைப்பொருள்போலுமென நையாயிகர் முதலியோர் மதம்பற்றி மய ங்கி, எல்லாப்பொருளுஞ் சத்தென்னுஞ் சித்தாந்தத்தோடு முரணு மைப்பொருட்டு, ஈண்டுச்சத்த சத்தெனப்பட்டன சித்தசித்தென் னும்பொருளவா மெனவும், சுத்தமசுத்தமென்னும் பொருளவாமெ னவுமுரைத்திடர்ப்படுப. காரியப்பிரபஞ்சம் ஏனைப்பசு பாசங்கள் போலன்றி யிருவகை யியல்பானுங் காட்சிப்புலனா யித்துணைப்பொ ழுது நிற்குமென நம்மனோரா லறியவாராது நிலைபெறுவதுபோலத் தோன்றி விரையக்கெட்டு மறைந்துபோதற் சிறப்புடைமை பற்றிய துவே யீண்டுணருரு வசத்தென்றெடுத்துக்கொள்ளப்பட்டது. அ சத்தெனவே அசித்தென்பதுந்தானே போதரும். இதனுள், "உண ருருவ சத்தெனி னுணராதின்மையின்" என்றதோரதிகரணம், "இரு திறனல்லது சிவசத்தாமென விரண்டுவகையி னிசைக்கு மன்னுல கே" என்றதோரதிகரணம், ஆக விரண்டதிகரணத்த திச்சூத்திரமெ ன்றுணர்க.

---

## முதலதிகரணம்.

---

ஈண்டறிவினு லறியப்பட்ட சுட்டசத்தென்றது-எ-து - மே-ள்-எ-னின், மேலைச்சூத்திரத்தின் "அளந்தறிந்தறியா" என்றதனை யுடம்படாது, பிரபஞ்சம்போல முதல்வனுமளவைகளானளந்தறி பொருளேயாமென, நையாயிகர்முதலியோர் கூறுங்கடாவையும், எல் லாப்பொருளுஞ்சத்தாகலி னளந்தறிபொருளுஞ் சத்தேயாமெனச் சாங்கியர்கூறுங்கடாவையு மாசங்கித்து, சூத்திரத்தின் முற்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோட்டூதலிற்று.

(இ-ள்.) சுட்டறிவினு லறியப்பட்ட சுட்டுப்பொருளெல்லா மசத்தென்றவாறு.

சுட்டு ஆகுபெயர். சிவஞானத்தா லறியப்படுதலை நீக்குதற்கு அறிவினுலென விசேடித்தார். சுண்டறிவென்றது - ஒன்றை முந்தியதுவதுவாகச் சுட்டிக்காணுமளவையறிவினையென்பது "அறிவினு லறிந்தயாவு மசத்தாதலறிதி" என்ற புடைநூலாசிரியர் மீள வங்ஙனந்தெரித்தோதியவாறுபற்றி யுணர்ந்துகொள்க.

- அவைதாம் பிரகாசமாய் நின்றே யப்பிரகாசமாய் நிற்றலான்- எ-து-ஏது-எ-னின், உள்ளதென்னு முணர்விற்கு விடயமாயுபலத்தியைப்பயப்பிக்கும் பிரபஞ்சத்தை யில்லையென்னு முணர்விற்கு விடயமா யநுபலத்தியைப் பயப்பிக்கு மில்பொருளோடொப்ப வசத்தென்ற லமையுமாறியாங்ஙனமெனவும், சத்தாகிய பிரபஞ்சத்தைச்சுட்டப்படுதன்மாத்திரையானசத்தென்றல் சற்காரியவாதத்திற்கிழுக்காம்போலுமெனவும், முறையே யவ்விருவர் மதம்பற்றிக் கூறுவாரைநோக்கி, மேற்கோளைச் சாதித்த னுதலிற்று.

( இ - ள் ) அச்சுட்டுப்பொருள்கடாமிராசதகுணமிகுதிப்பாட்டானுள்ளதென்னு முணர்விற்கு விடயமாயுபலத்தியைப் பயப்பித்துநின்று தானே தாமதகுண மிகுதிப்பாட்டா னில்லையென்னுமுணர்விற்கு விடயமா யநுபலத்தியைப் பயப்பித்து நிற்றலான், சுண்டறிவினு லறியப்பட்ட சுட்டசத்தென மேற்கொண்டதென்றவாறு.

சுண்டுப்பிரகாச மப்பிரகாச மென்பன உபலத்தி அநுபலத்தியென்னும் பொருளவாய், அவைநிகழ்தற்கிடனுகிய பொருண்மேனின்றன. இதுணையாயிகளை நோக்கிமேற் கோளைச்சாதித்தவாறு. இனியிதனையே யிரட்டுறமொழிந்துகொண்டு, அவைதாங்காரியவவத்தை யிற்றாலமாய் விளங்கிநின்றே காட்சிப்புலனுய், சடிதியின்மறைந்து, சூக்குமமாயாகாரண வவத்தையின் விளங்காது நிற்கு மிவ்வேற்றுமை யுடைமையான், அங்ஙனம் புலனுகாதகாரணப் பொருள்களை நோக்கிக் காரியப்பிரபஞ்சமசத்தாதல் சாலுமாகலின் சுண்டறிவினு லறியப்பட்ட சுட்டசத்தென மேற்கொண்ட தென்றவாறெனவு முரைத்துக் கொள்க.

வெண்பா.

அசத்தறியாய்கேணீ யறிவறிந்தவெல்லா ... ... *
மசத்தாகுமெய்கண் டானுயி-னசத்தலாய் ... ...*
நீரிலெழுத்து நிகழ்கனவும் பேய்த்தேரு .. ... *
மோரினவையின்றாமா றெப்பு. ... ... ... (௧)

அசத்தறியாய் கேணீ யறிவறிந்த வெல்லா மசத்தாகு மெய்கண் டானுயின்-எ-து-உ-ம்-எ-னின், ஒருசாரா ரங்ஙனமாயினு மூபலத்திப் பட்டன வெல்லாமவ்வா றசத்தாமென்றற்குப் பிரமாணமென்னை யென்னு நையாயிகரைநோக்கி யேதுவை வலியுறுத்துத னுதலிற்று.

(இ-ள்.) அசத்தினியல்பை யறியாதமடவோனே யாமிறுக்கு மிறையை மனம்பற்றிக் கேட்பாயாக, சத்தினியல்பை யறிந்தோரா ரு ராய்ந்தாறுயி னறிவினுலறியப்பட்டன வெல்லா மசத்தேயா மென்றவாறு.

அறிபாயென்பது விளியுருபேற்றபெயர். அசத்தினியல்பை யறிந்தாயாயி னிவ்வாறு பிணங்குவாயல்லையென்பார் அசத்தறியாயென்றும், எந்தைதாட்பால் வணங்கித் தலைநின்றுகேட்க வென்பார் கேணீயென்றும், உபலத்திக்குவிடயமானவை யெல்லாமநுபலத்திக்கு விடயமாத லொருதலையென்பார் அறிவறிந்தவெல்லா மசத்தாகுமென்றும், சத்தினியல்புணர்ந்தார்க்கன்றி யசத்தினியல்புணரவாரா தென்பார்மெய்கண்டானென்றும், ஆய்தற்கருமை நோக்கியாயினென்றுங்கூறினர்.

அசத்தலாய் நீரிலெழுத்து நிகழ்கனவும்பேய்த்தேருமோரினவையின்றாமாறெப்பு-எ-து-உ-ம்-எ-னின்; இரட்டுறமொழிந்துகொண்டு சாங்கியனைநோக்கி யுரைத்தபொருளை வலியுறுத்துதனுதலிற்று.

(இ-ள்) அசத்தலாய்-எ-து-அசற்காரியவாதியல்லாத வறிவுடையோனே - அவையின்றாமாறெங்போரின்-எ-து - அங்ஙனந்தோன்றி மறைவனவாய பிரபஞ்சமசத்தாமாற்றிற்குவமையாராயின் - நீரிலெழுத்து நிகழ்கணவும்பேய்த்தேரும்-எ-து-நிகழாநின்ற நீர்மேலெழுத்தும், கனவிற்காட்சியும், பேய்த்தேருமா மென்றவாறு.

எனவே யப்போதுள்ளனவாய நீர்மேலெழுத்து முதலியனவற்றை யங்ஙனே சடிதியின் மறைந்து போதற்சிறப்புப்பற்றி யசத்தென்றலெல்லார்க்கு மொப்பமுடிந்தமையின், அவ்வியல்புடைய பிரபஞ்சத்தையுமவைபோல சத்தென்றலமையுமென்றவாறாயிற்று. அசற்காரியவாதியையசத்தென்றுபசரித்தார். நீரிலெழுத்து முதலியன பொய்யென்பாரை மறுத்தற்கு நிகழ்ந்தென்றனைகொடுத்தார்; அஃதியாண்டுஞ் சென்றியையும். குவ்வுருபு விகாரத்தாற்றொக்கது. இன்றென்னுமொருமை யப்பண்பின்மேனின்றது. நீரினெழுத்துத்தோன்றியபொழுதே மறைந்துபோதற்கும், கனப்பொருண்முடிவு பெறுதலின்றி யிடையேமறைந்து போதற்கும், அருஞ்சுரத்தின் முதுவேனிலினண்பகற் கடுமைபற்றித்தோன்றி ஞாயிற்றின்கிரண முகிற்படலத்தின் மறைந்தவழித் தானுமறைந்துபோவதாகிய பேய்த்தேரொருகாரணங்காட்டி மறைந்துபோதற்கும், உவமையாயின. இவ்வெண்பாவை, “ இவையித்தன்னின் ” என்பதுபோல விங்ஙனமிருதொடராக வைத்துரைத்து மேற்சோளேதுக்களையு மிரட்டுறமொழிந்துகொண்டு, இரண்டதிகரணப்பொருள் சோடலாசிரியர் கருத்தென்பது - வழிநூலாசிரியர். “ அசத்தாஞ்சுட்டி யுணர்பொருளானவெல்லாம் ” எ-ம், “ உலகினையசத்தாமென்பர் ” எ-ம், வெவ்வேறுகூறிய வாற்றானுமுணர்க. இஃதறியா திவ்வெண்பாவை யொருதொடராக வைத்துரைப்பார்கரு அசத்தறியாதானை யசத்தலாயென்றதனுலொரு பயன்படாமையும், ஆயின், ஓரின், என்றிருகாற் கூறுதலும், அசத்தாகும், இன்றும், என்றிருகாற்கூறுதலும், கூறியதுகூறலென்னும் வழுவாதலுமறிக. இனியொருவாற்றானு முணரப்படாத பொருள்சூனியமென்ப தெல்லாச்சமயத்தார்க்கு மொப்பமுடிந்தமையின்,ஆண்டதிகரணத்திற்குரியவையப்பாடு முதலியன நிகழாமையான் அதனை வேறெடுத்துரைத்துமேற்கொள்ள வேண்டாமையானும், அந்தவுணர்வுடையார்க்கதன்கணைய நிகழாமைப்பொருட்டு, வழிநூலாசிரியர், “ உணராதபொருள் சத்தென்னிலொரு பயனில்லை போலும் ” எனவிடுத்தொழிந்தா ரென்றுணர்க.

---

## இரண்டாமதிகரணம்.

---

இனி யிவ்விரண்டுதன்மையுமின்றி வாக்குமனாதீதகோசரமாய் நின்றதுவே சத்தாவுள்ள சிவமென்றுணரற்பாற்று - எ - து-மே-ள்

என்னின், மேலுணர்பொருளியல்புமுணராத பொருளியல்புங் கூறுமுகத்தான் அசத்தினியல்பை வரைசெய்துணர்த்தியவழி யிரண்டு மிவ்வாறாகலா னிவற்றின்வேறாய முதல்வனதியல்பாவது மாயாவாதிகூறும் நிருவசனம்போலுமென்னுங் கடாவை யாசங்கித்து, சூத்திரத்தின் பிற்கூற்றைக் கண்ணழித்துரைத்து, மேற்கோடனுதலிற்று.

(இ-ள்) வெ-டை.

வாக்கெனப்படு நாதமுடிவான பாசஞானத்தை வாக்கென்றும் அவற்றின்வேறாய பசுஞானத்தை மனமென்று முபசாரவழக்காற் கூறினர்.

வாக்குமனாதீதகோசரமாய்நின்ற- எ-து-அவ்விரண்டின் விருத்திகளைக் கடந்ததீதமாயும், ஒற்றுமைப்பட்டுநின்றுணரு மநுபவஞானமாத்திரையிற்கே விளங்கிக் கோசரிப்பதாயும் நின்றவென்றவாறு.

அவ்வாறுநின்ற பொருளிதுவெண வளவைகளானறியவாராமை பற்றி, அதுவேயென மகாவாக்கியத்திற்கூறியதனை யநுவதித்து, சத்தாகிய சிவமாதலைச் செவியறிவுறுத்தார். வாக்குமனாதீதமென்றது தமிழ்நான்முடிபு. மரவடி-மராடியென மரீஇயினாற்போல, மனவதீதம்-மனாதீதமெனமரீஇயிற்று. அதீதகோசரமென்பது வடநான்முடிபு. வாக்குமனாதீதப்பொருளாகலின் உணருருவாந்தன்மையும், கோசரப்பொருளாகலின் உணராதாந் தன்மையுமில்லையென்பது பெறப்படுதலின், இவ்விரண்டுவகையு மின்றியென்றார்.

பிரகாசத்தினுக்குப் பிரகாசிக்கவேண்டுவ தின்மையானும், அப்பிரகாசத்தினுக்குப் பிரகாசமின்மையானும்- எ-து-எது-எனின், இவ்விரண்டுவகையுமில்லாத பொருணிருவசனமாய் நிற்பதென்னாது, வாக்குமனாதீதகோசரமாய் நிற்பதென்றற்குப் பிரமாண மென்னையென்பாரைநோக்கி, மேற்கோளைச் சாதித்தனுதலிற்று.

(இ-ள்) வாக்குமனங்களாலோதியுணரப்படுவதாய நிருவசனப்பொருட்கு முன்னர்க்கூறப்படுஞ் சாதகங்களினின்றறியற்பாலதாக வேண்டாமையானும், ஒருவாற்றானுமறியப்படாத வநிருவசனப்பொருட்குச் சாதகத்தினின்று மறியப்படுமாறின்மையானும், இனி யிவ்விரண்டுதன்மையுமின்றி வாக்குமனாதீதகோசரமாய் நின்ற வதுவே, சத்தாயுள்ளசிவமென் றுணரற்பாற்றென மேற்கொண்டதென்றவாறு.

உணர்தற்பாற்றென்றார் உணர்தலருமைநோக்கி. பிரகாசமப்பிரகாசமென்பன-உபசாரவழக்கு.

வெண்பா.

எண்ணியசத்தன்றசத்தன்றுமென்றலென் ... *
கண்ணியுளதென்றன்மெய்கண்டா - னெண்ணி ... *
யறியவிரண்டாமசத்தாதல்சத்தா ... ... ... *
மறிவறியாமெய்ச்சிவன்றுளாம். ... ... ... (உ)

எண்ணி-ஆம்-எ-து-உ-ம்-எ-னின், பரப்பிரமப்பொருளவிச்சைவயத்தான் ஞாதாவெனவு ஞேயமெனவும் பகுக்கப்பட்டு முன்னர்க் கூறப்படுந் சாத்திரங்களினின் றறியவும்படும்; அவிச்சைநீங்கியவழியப் பகுப்பின்மையாற் சத்தென்றுதல், அசத்தென்றுதல், ஒருவாற்றானு ஞேயமாமாறின்றிக் கேவலஞானமாத்திரையே நிற்பதொன்றாகலான், அதுகோசரமாமென்றல் பொருந்தா தென்பாரைநோக்கி, அதனை வலியுறுத்துதனுதலிற்று.

(இ-ள்.) எண்ணியசத்தன்றசத்தன்று மென்றலென்கண்ணியுளதென்றல்-எ-து-ப்ரமார்த்தமாகிய பரப்பிரமப்பொருள் விவகாரத்திற் கருதப்பட்டசத்துமன்றசத்துமன்றென்னில், அங்ஙனமொருபொருளுண்டென்றல் யாது பிரமாணங்கருதியோ வதனைக் கூறுவாயாக; பிரமாணமுண்டென்னி னதற்கது பிரமேயமெனப்பட்டு ஞேயமாவான் செல்லுமென்றஞ்சிப் பிரமாணமில்லையென்பையாயின்,— மெய்கண்டானெண்ணியறிய விரண்டாமசத்து-எ-து-சத்தினியல்பையுணர்ந்தோ ராய்ந்தறியிற் காட்சிமுதலிய பிரமாணங்கட்கு விடயமாவதூஉம், ஒருவாற்றானும் பிரமாணமல்லாத சூனியமுமாகிய விரண்டுமேற்கூறியவாற்று னசத்தேயாம்-ஆதல் சத்தாமறிவறியாமெய்ச்சிவன்றுளாம்-எ-து-ஆகலாற் சாந்தோக்கியமுதலியவற்றுட் சத்தென்றோதப்படுஞ் சுட்டறிவினாலறியப்படாத மெய்ப்பொருள் சைவவுபநிடதங்களினுஞ் சைவாகமங்களினும் அன்னியமின்றிநின் றுணருமநுபவமாத்திரையிற் கோசரிப்பதென் றோதப்படுஞ் சிவனருளாவதன்றி நீகூறுஞ் சூனியமன்றென்றவாறு.

அறியவென்னுஞ்செயவெனெச்சம் - மழைபெய்யக்குளநிறையுமென்பழிப்போலச் செயினென்னு மெச்சப்பொருட்டாய்நின்றது.

முற்றும்மை விகாரத்தாற்றொக்கது. அசத்தாமெனமாறுக. சத்தாகிய மெய்யெனவினையும்-அடியளங்கான்றுஅய தென்றாற்போல, அறிவறியாமெய்யென்றது-வாளாபெயராய்நின்றது. சிவன்றாளெனச் சிவசத்தியின்மேல்வைத் துயர்த்துக்கூறிய துபசாரவழக்கு. இறைவனார் கமலபாத மென்பதூஉமது.

இதனாற் போந்தபொருள்-சத்துமன்றி, அசத்துமன்றி ஒருபொருளுண்டெனின், அதற்குப் பிரமாணமென்னை, பிரமாணாதீதமாகிய சூனியமெனின், சூனியமுமழிபொருளுமாகிய விரண்டுமசத்தேயென்பது மேற்காட்டினமையாற் பிரமப்பொரு ளசத்தெனப்பட்டுச்சத்தென்னுஞ் சுருதிகளோடு முரணுமாகலின், அவற்றுட் சத்தென்றோதப்படும் பரப்பிரமப்பொருளாவது உண்மைமாத்திரையிற் கோசரிப்பதென யாங்கூறுஞ் சிவமேயன்றி நீகூறுஞ் சூனியமன்றென, மாயாவாதியைமறுத்து, கோசரமென்றசனே வலியுறுத்தியவாறுமென்க. எண்ணியறிய விரண்டாமசத்தென்பதற்குப் பிறசொல்லாம் வருகின்ற வெண்பாவிற்கூறும்பொருள்பட, கூறியதுகூறலாதன்மேலுமோரியைபின்றியுரைப்ப.

வெண்பா.

உணர்பவசத்தாதலொன்றுணராதொன்றை ... *
யுணருநீதானுணராயாயி - னுணருமுனிற் ... ...*
றுனிரண்டாமெய்கண்டான்றன்னுலுணர்தலாற்... *
றுனிரண்டாய்க்காணுன்றமி ... ... ... (ரு)

உணர்-தமி- எ-து-உ-ம்-எ-னின், பிரகாசித்தபொருளையும் வேறோராற்றானறிதுமென வேட்கைசென்றுழி, அவ்வாற்றாற்புதுவதாய்ப் பிரகாசிக்கவேண்டுதலின், பிரகாசத்தினுக்குப் பிரகாசிக்கவேண்டுவதில்லையென்றல் யாண்டுஞ்செல்லாமையின், வாக்குமனாதீதமென்றல் பொருந்தா தென்பானைநோக்கி, அதனே வலியுறுத்துதனுதலிற்று.

(இ-ள்.) உணர்பவசத்து-எ-து-நின்னாலறிவனவாய கருவிகளெல்லா மேற்கூறியவாற்றானசத்தாம்; அசத்தெனவே யசித்தாதலும் பெறப்படும்-ஆகலொன்றுணராதொன்றை-எ-து- ஆகலானவற்றுளொரு கருவியும் ஒன்றாகியமுதற்பொருளையறியமாட்டாது - உணருநீதானுணராய்- எ-து - அவற்றானறிந்துவருகின்ற நீதானுமதனை யறியமாட்

டாய்-ஆயின்-எ-து-நீயேயாய்ந்தறிவாயாகில் - உணருமுனிற்றனிரண்டாம்-எ - து - அவ்வாறுணரப்படும் பொருள்கள்போல வுணர்கின்ற நின்னின் வேறும்-மெய்கண்டான் றன்னாலுணர்தலாற் றனிரண்டாய்க் காணுன்றமி-எ-து-உயிர்க்கறிவு விளங்குமுண்மையறிந்தோன்றன்னறிவச்சிவன்றுளினடங்கியதுவாய்நின்றதனானேயதனையறியு மாகலானே னைய்பொருள்களை யறியுமாறு வேறாய்நின்றறிவானல்ல னத்தனிமுதற்பொருளை யென்றவாறு.

இதனாற்போந்தது சத்தாகியசிவம் பாசஞானத்தானுதல் பசுஞானத்தானுதலறியப்படாது அறியப்படிற் குடமுதலாயினபோல வுயிரின்வேறாயவிச்சையான்வருஞ்சுகதுக்கங்களைப்பயப்பதன்றி யவிச்சையினீங்கிய நிரதிசயவின்பத்தினைப்பயவாதாகலான் அவ்வுண்மையுணர்ந்தோன் ஏனையபோலவசத்தாத லின்றித்தனியாய் நின்றவம்முதற்பொருளையதனு ளொற்றித்து நின்றேகாண்பனெனைனையாயிகர் முதலியோரை மறுத்துவாக்குமனாதீதமாய் நின்றகோசரமா மெனவலியுறுத்திய வாறுமென்க. உணர்பவென்பது- அகரவீற்றஃறிணைப் பன்மைப் பெயர்ச்சொல். ஒன்றுமென்னு முற்றும்மைவிகாரத்தாற்றொக்கது. உன்னினென்னும் இன்னுருபு நீக்கப்பொருட்கண் வந்தது. ஒற்றிரட்டியாமைபுறனடையாற்கொள்க. தான்-அசை.

வெண்பா.

பாவகமேற்றனசத்தாம் பாவனாதீதமெனிற் ... *
பாவகமாமன்றென்னிற்பாழதுவாம் - பாவகத்தைப் *
பாவித்தருளென்னிற் பாவகமாந்தன்னருளாற் ... *
பாவிப்பதுபரமில் பார். ... ... ... ... (ச)

பாவக-பாழ்-எ-து-உ-ம்-எ-னின், தான்கோசரமானலன்றித்தன்னையறிதல் கூடாமையிற்றன்னாலே தன்னையுணருமென்பது தன்னைப்பற்றுதலென்னும் வழுவாமாகலினவ்வாறின்றி வாக்குமனாதீதப்பொருள் யோகநூலிற்கூறுந்தியான பாவனைகளிற் கோசரமாமென்றலேயமைவுடைத்தென யோகமதம் பற்றிக்கூறுவாரைநோக்கி, தன்னாலன்றிக்கோசரமாகாமையை வலியுறுத்துத னுதலிற்று.

(இ-ள்) பாவகமேற்றனசத்தாம்-எ-து-நீ கூறும்பாவனையேனைப் பாவகங்கள்போல மனமுதலியவற்றோடு கூடிநின்று பாவிக்கும் பாவக

மெனின், அறிவினாலறியப்பட்ட சுட்டாகலானப்பொருளசத்தாம்-பாவனாதீதமெனிற் பாவகமாம்-எ-து-கருவிகளை நீங்கிநின்று பாவிப்பதாகவி னப்பாவனையைகடந்ததெனிற் கருவிகணீங்கியவழி யொன்றுமறியுமாறின்றிக் கேவலமா மாகலான், அதுபாவகமாத்திரையேயன்றிப் பயன்படுமாறில்லை - அன்றென்னிற் பாழதுவாம்-எ-து-இவ்விருதிறனுமன்றியநிருவசனமாகப் பாவிக்கப்படுவதெனின், அது சூனியப்பொருளாம் - பாவகத்தைப் பாவித்தற்றென்னிற் பாவகமாம்-எ-து-அவ்வாறன்றிப் பாவனைக்கெய்தாதபொருளை யெய்தியதாகவைத்துப் பாவகஞ்செய்தலெனின், அதுபோலிப்பாவனையாதலாற் பாவனாதீதம்போலப்பாவனை மாத்திரையேயன்றிப் பயன்படுமாறில்லை; அற்றேல், ஒருவாற்றானும் பாவனைக்கெய்தாதபொருள் பாழாமெனின், தன்னருளாற் பாவிப்பதுபரம்-எ-து-அப்பாவகங்களையொழித்துத் தனது திருவருளாற் பாவிக்கப்படுவதாம்பரம்பொருள் - இல்பாழ்-எ-து-ஆகலானீ கூறும்பாவனைக கெய்தாமைபற்றிப் பாழாதலில்லை யென்றவாறு.

தான் - அசை. பாவகத்தைப் பாவித்தலென்பது - கறைமிடறணியலு மணிந்தென்றதுபோலக்கொள்க. மேலைவெண்பாவிற் றன்னென்றது தனது சத்தியேயாகலாற் றன்னைப்பற்றுதலென்னுங் குற்றமாதல் யாண்டையதெனவிடுப்பார் தன்னருளாற் பாவிப்பதென்றார். தன்னருளை யறியுமாறு மதனாற்பாவிக்குமாறு மொன்பதாஞ் சூத்திரத்துட்கூறப்படும். யோகநூலார்கூறும்பாவனை யிந்நான்கனு ளொன்றாகற்பாலதன்றி வேறின்மையின், அந்நான்கினையுங்கூறி மறுத்தார்.

வெண்பா.

அறியவிரண்டல்ல னாங்கறிவுதன்னா ... ... ...*
லறியப்படானறிவினுள்ளா-னறிவுக்குக் ... ... *
காட்டாகிநின்றானைக் கண்ணறியாமெய்யென்னக் ...*
காட்டாதறிவறிந்து கண்டு. ... ... ... ... (ரு)

அறிய - கண்டு-எ-து-உ-ம்-எ-னின், மேற்கூறிப்போந்த பாவனைகட்செய்தாத பொருளைத் தன்னருளாற் பாவித்தல்வேண்டாம், உயிர் பசுத்துவநீங்கியகாலத்துச் சிவனைப்போல முற்றுமுணர்தன் முதலிய வெண்குணங்களு முடையதென்றாகமங்களுட் கூறுதலின், ஆண்டான்மஞானஞ் சிவஞானத்தோ டொப்பதன்றிப் பசுஞானமெனப்ப

டாமையான், அவ்வறிவானறியப்படுங் கோசரப்பொருளென்றலே யமைவுடைத்தென்னுஞ் சிவசமவாதிகளைநோக்கி, தன்னருளாலன்றிக் கோசரமாகாமையை வலியுறுத்துதனுதலிற்று.

(இ-ள்.) அறியவிரண்டல்லன்-எ-து-சிவாகமங்களினத்து விதங்கூறுதலின், உயிர் தன்னறிவானறிதற்குத் தன்னின் வேறல்லனாகலானும் - அறிவினுள்ளானுங் கறிவுதன்னாலறியப்படான்-எ-து-சமமாதலின்றித் தூல சூக்குமமுறையாற் றன்னறிவுக்குள்ளுமாய் நிற்றலின், அவ்விடத்துத் தன்னறிவினாலறியவாரானாகலானும் - அறிவுக்குக்காட்டாகிநின்றானை-எ-து-தன்னறிவுக்கு வியஞ்சகமாய் நின்றறிவிக்கு முயிர்க்குயிராய முதல்வனை - அறிவுகண்டறிந்து காட்டாது-எ-து-ஆன்மஞானமானதுதான் கண்டறிந்து தன்குணியாகிய வுயிர்க்குக் கோசரமாமாறுகாட்டமாட்டாது - கண்ணறியா மெய்யென்ன-எ-து - தன்னின் வேறின்றித் தனக்குண்ணிற்றலிற் றன்னாற்காணப்படாது தனக்குக்காட்டாகி நின்றவுயிரை யறியமாட்டாத கண்ணொளிபோலென்றவாறு.

காட்டு - முதனிலைத் தொழிற்பெயர். அறிவுக்குக் காட்டாகிநின்றானென்னும் பெயரடையானும் ஓதுக்கூறியவாறு. கண்டறிதல் "குழிந்தாழ்ந்தகண்ண" என்றாற்போலவொருபொருட்பன் மொழியாய்ச் சிறப்பின் கண்வந்தது. மெய்யறியாக்கண்போலென வியைத்துரைக்க. கண்முதலிய வற்றைநோக்கியுயிர் சத்துச்சித்தா மென்றவதனை மெய்யென்றார். கண்-ஆகுபெயர். கண்ணறியாமெய்யென்பதற்குக் கண்ணையறியாதவுடம்பு போலென்றுரைப் பாருமுளர். உடம்பிற்கறியுந் தன்மையின்மையானும், உடம்பிற்குக் கண்காட்டாதலு மின்மையானும், அஃதீண்டுவமையாதலுக்கேலாமையி னதுபோலியுரையென்றொழிக.

வெண்பா.

அதுவென்னுமொன்றன் றதுவன்றிவேறே ... ✻
யதுவென்றறியறிவுமுண்டே - யதுவென் ... ... ✻
றறியவிரண்டல்லனுங் கறிவுணிற்ற ... ... ... ✻
லறியுமறிவேசிவமு மாம். ... ... ... ... (௬)

அது-ஆம்-எ-து-உ-ம்-எ-னின், அத்தன்மை யனாகியமுதல்வனைத்தலைப்பட்டவுயிர் அம்முதல்வனோ டொன்றாய்ப்போவதே யாகலின் ஆண்டங்ஙனமறிவ தூஉமறியப்படுவதூஉ மாதல்யாங்ஙனமென்னுஞ்

சிவாத்துவிதசைவர் சுத்தசைவரைநோக்கி, ஒன்றுயவழியும் அறிவது மறியப்படுவது மூண்டென்பதுணர்த்தி, அதனை வலியுறுத்து தனு தலிற்று.

(இ-ள்) அதுவென்னு மொன்றன்று- எ-து-சத்தாகியசிவம்ஞே யப்பொருளாய் விசிட்டமாய் நிற்பதென்பது மக்குமொக்குமாகலான், அச்சிவமின்னதென் றறியவாராத நிருவசனமாய் நிற்பதொரு நிருவி சேடப்பொருளெனக்கொண்ட மாயாவாதத்தைப்போல, அதுவென் று அநிருவசனமாய்க் கூறப்படுவதொரு சூனியமன் றுகலான்-அதுவ ன்றிவேறே யதுவென்றறியறிவுமாங்குண்டே- எ-து-அந்தஞேயமாத் திரையேயன்றியதனின்வேறாக வாக்குமனாதீதமாய் நிற்பதொரு பொ ருளொன்றறிகின்ற ஞாதாவுமாண்டுள்ளதேயாம்- அற்றே லொன்றுதல் பெறப்படாதாலெனின், அதுவென்றறிய விரண்டல்லனறிவுணிற்றல றியுமறிவே சிவமுமாம்-எ-து- உலகத்துப்பொருள்போலது வென்று சுட்டியறியுமாறுமுதல்வன் றன்னின்வேறல்லனாய், அப்பணைந்தவுப் புப்போலத் தன்னறிவின்கண்விரவி வேற்றுமை தோற்றாது நிற்றலா னறிவிறந்தறிகின்ற வவ்வுயிர்சிவமே யாமென்றவாறு.

உம்மை-சிவமாயுஞ் சிவமாகாமைவிளக்கிநின்றது. அதுவென்னு மொன்றன் றுகலானென, ஏதுப்பொருள் படக்கொண்டுரைக்க. 'அறி வுமென்றவும்மை யிறந்ததுதழீஇயது. அல்லனென்பது முற்றெச்சம்; வேறுமுடிபுகோட்லிற் பால்வழுவாகாமையுணர்க. உண்டேயென்னு மேகாரந் தேற்றம். ஏனையிரண்டு மசைநிலை. நிற்றல் - நிற்றலானெ ன்றவாறு.

இவ்வெண்பாக்களைந்தும், முறையே, வாக்குமனா தீதமென்றல் பொருந்துங் கோசரமென்றல் பொருந்தாதென்னு மாயாவாதிகளையு ம், கோசரமென்றல் பொருந்தும் வாக்குமனாதீதமென்றல் பொருந்தா தென்னு நையாயிகர்முதலியோரையும், பாவனைக்குக்கோசரமாமென் னும் பாதஞ்சலனையும், ஆன்மஞானத்திற்கே கோசரமா மென்னுஞ் சமவாதசைவரையும், முத்தியிற்சிவமேயன்றி யுயிரெனவேறின்மையி னுயிர்க்குக் கோசரமாமாறியாண்டையதென்னுஞ் சிவாத்துவிதசை வர்முதலியோரையுமறுத்து வாக்குமனாதீதகோசரமாய் நிற்குமியல்பு வலியுறுத்தி ஒருபொருண்மேல் வந்தவாறுகாண்க. இவ்வாறுநாலாஞ் சூத்திரமுதலியமூன்றினு மேற்பிரமாணத்தாற் கூறிப்போந்த பசுபா

சபதிகட்கிலக்கணங் கூறுமுகத்தான், முறையே, கேவலம், சகலம், சுத்தமென்னு மூன்றவத்தையுங் காட்டப்பட்டன. இம்மூன்றனுட்கேவலம்- மருட்கேவலமும், சகலகேவலமும், பிரளயகேவலமும், விஞ்ஞானகேவலமும், அருட்கேவலமு மென்னுமைவகைப்படும், அவற்றுண்மருட்கேவலமாவது - அநாதிகேவலம்; சகலகேவலமாவது-சங்கரித்தபின்னர்ப் புனருற்பவத்திற் கேதுவாய்ப்படுங்கேவலம்; ஆண்டுச்சூக்குமவைந்தொழிலுஞ்டென மிருகேந்திரத்துட் கூறுதலினநாதிகேவலத் தோடிதனிடைவேற்றுமையாமாறு கண்டுகொள்க; பிரளயகேவலமாவது-மாயையோடிபை பின்றியாண்டுப் படுங்கேவலம்; விஞ்ஞானகேவலமாவது - மாயை கன்மங்களென்னு மிரண்டனோடுமியைபின்றியாண்டுப் படுங்கேவலம்; அருட்கேவலமாவது - தத்துவசுத்திப்பின்னர்ப் படுங்கேவலம்; அதுதுகளறுபோதத்திற் காண்க. இனிச்சகலமும் - சகலத்திற்கேவலம்; சகலத்திற்சகலம்; சகலத்திற்சுத்தமென மூவகைப்பட்டு ஒரோவொன்றைந்துவகைப்படும். அவற்றுட்சகலத்திற்கேவலமைந்தும், "ஒன்றணையாமூலத்தே„என்றதனுட்காண்க; சகலத்திற்சகலமைந்தும் "இலாடத்தே சாக்கிரத்தை" என்றதனுட்காண்க; சகலத்திற்சுத்தமைந்தும், "யோகிற்றருவதோர் சமாதி" எனவழிநூலாசிரியர் தொகுத்தோதியது சித்தாந்த சாராவளியோகபாதத்தின்வகுத்துக் கூறுதலானுண்டுக்காண்க. இனிச்சுத்தமும், சீவன்முத்தி, அதிகாரமுத்தி, போகமுத்தி, இலயமுத்தி, பரமுத்தி யென்றைவகைப்பட்டுச் சாக்கிரமுதலிய பெயர்பெறும். அவற்றைமுன்னர்த்தொகுத்தோதுப. ஆறுஞ்சூத்திரமுடிந்தது.

---

# ஏழாஞ்சூத்திரம்.



யாவையுஞ்சூனியஞ் சத்தெதிராதலிற் ... ...*
சத்தேயறியாதசத்திலதறியா ... ... ... *
திருதிறனறிவுள திரண்டலாவான்மா ... ...*

எ - னின், மேலதற்கோர்புறனடை யுணர்த்துதனுதலிற்று.

எ-து-க-ளா-எ-னின், சூததிரக்கருத் துணர்த்துதனுதலிற்று.

(இ-ள்) தூலாருந்ததிநியாயம்பற்றி மேலே பாறுசூத்திரங்களினுஞ் சிவாகமங்களிற் கூறப்படுமுப்பொருள்களது பொதுவியல்பு பிரமாண முகத்தானு மிலக்கணமுகத்தானு மாராய்ச்சிசெய்துணர்த்திய வாசிரியர், அம்முப்பொருள்களது சிறப்பியல்பெனப்படுமுண்மைசாதன முகத்தானும் பயன்முகத்தானு மாராய்ச்சிசெய்துணர்த்துவான் புகுந்து, முதற்கண், மூன்றுசூத்திரங்களா னவற்றை யறிந்ததனுனுயபயன்பெறுதற்கேதுவாகிய சாதனங்கூறிய தொடங்கினர்; அவற்றுளிச்சூத்திரம்-உணருருவசத்தெனவும், இருதிறனல்லது சிவசத்தெனவும், மேலைச்சூத்திரத்தா னவரைசெய்துணர்த்தியவழி, அங்ஙனமறியும்பொருள்; அவ்விரண்டனுள், ஒன்றேவேறேவென்னு மையப்பாட்டின்கண், அவ்விரண்டனுள் ஒன்றாகற்பாலதென்பார் மதம்பற்றி நிசமுங்கடாவை யாசங்கித்து, சூத்திரத்துக்குப் புறனாகவெடுத்து, ஓமொழிபாகிய சதசத்தினியல்பு வரைசெய்துணர்த்துமுகத்தானே, சாதித்துப் பயன்பெறுதற்குரிய வதிகாரியினியல்பாவ திதுவென்ப துணர்த்துதனுதலிற் றென்றவாறு.

அதிகாரமும் ஒத்தும்வேறுயவழியு மியைபுணர்ந்து கோடற்பொருட்டுக் கருத்துரையவ்வாறு செய்தாரென்பது. இப்புறனடையை வடநூலார் வாக்கியசேடமென்ப. இதனுட்கூறப்படு மூன்றதிகாரணமு மூன்றுபுறனடைபோலுமென மலையாமைப்பொருட்டோர் புறனடையென்றார். முன்னைய விரண்டுமிறுதி யதிகாரணத்தைச் சார்தற்கேதுவா யொருபொருண்மேல்வந்தனவே யாமென்பது கருத்து. ஒன்றனையறிந்தவழி, அதனுனுயபயன் பெறுதற்குரிய முயற்சிசெய்யலுறுவார்க்கு, அதனைச் சாதிக்குமாற்ற றமக்குண்டென்பதூஉம், சாதித்ததனுல்வரும் பயனிதுவென்பதூஉம், அதனைப் பயப்பித்தற்குரிய சாதனமாவதிதுவென்பதூஉம், அதுவருவாயுமுணர்ந்தாலன்றி, அதன்கண் மனவெழுச்சிசெல்லாமையின் ஈண்டோதப்படுஞ் சாதனஞ்செய்து பயன்பெறுதற்குரிமையுடைய வதிகாரியினியல்புணர்த்துவதாய விச்சூத்திர முதற்கண்வைக்கப்பட்டது.

இதன் பிண்டப்பொழிப்பு - மேலைச்சூத்திரத்துட் கூறிப்போந்த விரண்டனுள், வாக்குமனுதீதமாகிய சிவசத்தியின் சந்நிதியில், உணருருவாகிய வசத்தெல்லாம்பாழாகலிற் சத்தாகியசிவம் அசத்தாகிய பிரபஞ்சத்தை யறிதல்செய்யாது, அசத்தாகிய பிரபஞ்சமறிவில்லாத

சடமாகலிற் சத்தாகிய சிவத்தையறிதல்செய்யாது, ஆகலாற் பாரிசே டவளவை யானிருதிறனறிவுளதொன் றுண்டென்பது பெறப்படுதே லின், அதுவேசத்தாதற்றன்மையுமசத்தாதற்றன்மையுமாகியவிரண்டு மன்றிச்சதசத்தாயுள்ள வுயிராமென்றவாறு.

இரண்டனுளொன்றைப்பிரிக்கின்றமைபி னசத்தேயென்னு மே காரம் பிரிநிலைக்கண்வந்தது. அசத்திலதாகலினென்றுணர்க. அசதது ச்சத்தையறியாமைக்குஞ் சத்தெதிர்சூனியமாதலே யேதுவாதலமை யுமாயினும்அசத்தெனப்பட்டகருவிகள் முத்திநிலையிற்சிவகரணமாயா ன்மாவையொட்டிமுதல்வன் சந்நிதியினிற்கப்பெறுமென்பானைநோக் கி, வேறுமோரேதுக்கூறினர், இக்கருத்தேபற்றிச் சத்தின்முன்னில் லாமையானு மதனைக்கொண்டொன் றுணர்தலானுமென விரண்டே துவுமுடன்கூறினர் வழிநூலாசிரியரும். ஏற்புழிக்கோடலான், அறித லென்றது ஈண்டநுபவவறிவின்மேற்று' இனைத்தெனவறிந்தபொரு ளுக்கு வினைப்படுதொகுதிக்கண் வேண்டப்படு முற்றும்மைவிகாரத் தாற்றொக்கது, இதனுள்,யாவையுஞ் சூனியஞ்சத்தெதிராதலிற்சத்தே யறியாதென்றதோரதிகரணம், அசத்திலதறியாதென்றதோரதிகரணம், இருதிறனறிவுளதிரண்டலா வான்மாவென்றதோரதிகரணம்,ஆக மூன் றதிகரணத்ததிச்சூத்திர மென்றுணர்க.

---

## முதலதிகரணம்.

---

ஈண்டுச்சத்தினிடத்த சத்துப்பிரகாசியாதென்றது-எ-து-மே-ள் ள-னின், "தந்திடுஞ்சிவனவன்றன் சந்நிதி தன்னிலன்றே,, எ-ம்,"கூடு மொளிவளர்குடிலை மாயைமேவி,, எ-ம்,"தாரகமாமந் தன்றுணிற்றல்' எ-ம், "விமலனுக்கோர் சத்தியாமென,, எ-ம், 'உலகமே யுருவமாகி" எ-ம், "அத்துவாமூர்த்தியாகி,, எ-ம்,"இருநிலனாய்த் தீயாகிநீருமாகிநி ன்றவாறே'' எ-ம், கூறப்படுமியல்புடைய பிரபஞ்சத்தைச் சத்தெதிர் சூனியமென்றலவசித்தாந்தமாய் முடியும்போலுமெனவும், மண்டி யவுணர்வுயிர்க்காய் மன்னிநின்றறியுமெனவுங்கூறுஞ்சிவாத்துவிதசை வர் மதம்பற்றிநிகழுங்கடாவை யாசங்கித்து, சூத்திரத்தின் முதற்கூற் றிற்போந்த வேதுவைக்கண்ணழித்துரைத்து மேற்கோடனுதலிற்று.

(இ - ள்.) சுட்டுணர்வின்றிநின்றறியுஞ்சிவசத்தின் முன்னர்ச்சுட்டி யறியப்படு மசத்தாய பிரபஞ்சம் விளங்கித் தோன்றாதென்றவாறு.

ஈண்டுச்சூனியமென்றது விளங்காமைப் பொருட்டென்பார்பிரகாசியாதென்றுரைத்தார். இக்கருத்தேபற்றி "முனைத்திடாத சத்துச் சத்தின்முன்" என்றார் வழிநூலாசிரியரும். முனைத்திடாமையாவது - இதுகுடம், இஃதாடையென நம்மனோராற் சுட்டியறியப்படுமாறுபோல, முதல்வனாற்சுட்டியறியப்படுவதாய் வேறுநில்லாமையாம். ஆகவேயீண்டுச் சத்தெதிர்யாவையுஞ்சூனியமென்றதுகொண்ட வசித்தாந்தமாதல் யாண்டையதெனமறுத்துச் சத்தறியாதென்றதனை வலியுறுத்திய வாறுகாண்க.

மெய்யினிடத்துப் பொய்யப்பிரகாசமாய் நிற்றலான்-எ-து-ஏது-எ-னின், முற்றுணர்வுடைய சிவத்துக்கு அசத்தைவிட யிப்பதாயசுட்டுணர்வுமுண்டென்றாற் படுமிழுக்கென்னையென்பானைநோக்கி, மேற்கோளைச்சாதித்தனுதலிற்று.

(இ-ள்.) தன்னியல்பாகிய வியற்கையுணர்வின் முன்னர்ப்பொதுவியல்பாகிய செயற்கைச்சுட்டுணர்வு பிரகாசித்து நில்லாமையானீண்டுச் சத்தினிடத்த சத்துப் பிரகாசியாதென மேற்கொண்டதென்றவாறு.

பிரகாசித்து நிற்றலின்மையாவஃதியற்கையுணர்வோ டொப்பவொருங்கு நில்லாமையெக்காலத்து நிலைபெறுவதாயதன்னியல்பே மெய்யெனவும், இடையேதோன்றி மறைவதாய பொதுவியல்பேபொய்யெனவுங் கூறப்படுவனவாகலான் அவையீண்டைக்கேற் புடையவறிவின்மைமேனின்றன. இஃதறியாதாருரைப்பனவெல்லா மேற்கோளைச்சாதித்தற்குரியவேது வாதல்செல்லாது கூறியதுகூறலாய் முடியுமென்றொழிக.

வெண்பா.

அன்னியமிலாமையரற்கொன்றுணர்வின்று ... *
மன்னியவிலானசத்தைக்காண்குவனே - லன்னியமாய்க்
காணுனவன்முன்கதிர்முன்னிருள்போல ... *
மாணுவசத்தின்மைமற்று. ... ... ... ... (க)

அன்னியம் - மற்று-எ-து-உ-ம்-எ-னின், சுட்டுணர்வின்மையா ன்முதல்வனசத்தையறியானெனின• முற்றுணர்வுடைமைக் கிழுக்கா மென்பாரை நோக்கி' இழுக்கின்மைகூறி, ஏதுவை வலியுறுத்துத னுதலிற்று.

(இ-ள்.) அன்னியமிலாமையரற் கொன்றுணர்வின்ரும் - எ-து- தன்னுள்வியாப்பியமான பசுபாசங்களோடு வேற்றுமையின்றியுடனு ய்நிற்றலையுடைய முதல்வனுக்குச்சுட்டி யறியக்கிடப்ப தொன்றில்லை யாகலான் - அன்னியமிலான சத்தைக்காண் குவனே லன்னியமாய்க் காணுன்-எ-து - அத்தன்மையனுகிய முதல்வனசத்தையறியலுறுவ னுயின், அறிந்தாங்கறிவனன்றி நம்மனோர் போலவேருகச் சுட்டியறி வானல்லன் - கதிர்முன்னிருள்போல அவன்முன் மாணுவசத்தின் மைமற்று-எ-து-ஞாயிற்றின் முன்னிருட்டுப்போல வம்முதல்வனெ திர்நன்மையில்லாத பிரபஞ்சம் விளங்குதில்லாதாகலா னென்றவாறு.

எனவே, அசத்தைவிடயிப்பதாகிய வேகதேசவுணர்வு முற்றுண ர்வைத்தடுப்பதாசலான் அஃதில்லாமை முற்றுணர்விற்கு மேம்பாடா வதன்றி; இழுக்காகாதென வையமகற்றி, ஏதுவைவலியுறுத் தவாறு காண்க. மாணுமை - வியாபகவுணர்விற்குவிடயமாகாமை - இன்மை- ஈண்டு விளங்காமை குறித்துநின்றது. மற்று - அசை. மற்றுக்காண் குவனே லெனமேலேகூட்டி வினைமாற்றின்கண்வந்த தெனினுமமை யும். உணர்வுங்கதிரும் ஆகுபெயர். கதிர்முன்னிருள் - ஈண்டுமுனை யாமை மாத்திரைக்கொருபுடையுவமையாயிற் றென்பது - வழிநூலா சிரியர். "முனைத்திடாத சத்துச்சத்தின் முன்னிருளிரவிமுன்போல்;; என்றவாற்றுனறிக.

---

## இரண்டாமதிகரணம்.

---

இனியசத்தினுக் குணர்வின்றென்றது-எ-து-மே-ள்-எ-ஙின், சத் தசத்தை யறியாதாயினு மசத்தெனப்பட்ட தநுகரண புவனபோகங் களுளொன்ருயகரணம் விளக்குப்போல விகாரமின்றிநிற்குமான்மசந் நிதியில், பெத்தநிலைக்கணசத்தாய விடயங்களையறிந்தாற்போல, முத்

திநிலையில், சிவகரணமாய்நின்று சிவத்தையறியுமென்றலும், கண்ணாடியினிழல்போலவான்மசந்நிதியி னதன்கணறிவுண்டாமென்றலு மமைவுடைத்துப் போலுமென்னும், சிவசங்கிராந்தவாதம்பற்றி நிகழுங் கடாவையாசங்கித்து, சூத்திரத்தினிரண்டாங் கூற்றிற்போந்த வேதுவைக்கண்ணழித்துரைத்து, மேற்கோடனுதலிற்று.

(இ-ள்) வெ-டை.

சூத்திரத்தினிலதென்றது - அறிவிலதென்னும் பொருட்டெனின் பார் உணர்வின்றெனவுரைத்தார். ஈண்டசத்தென்றது - தத்துவப்பிரபஞ்சத்திற் கறிவின்மை சாதிக்கவேண்டாமையின்.

அதுதானிரூபிக்கிவின்றாகலான்-எ-து-ஏது-எ-னின், பதிஞானம் பசுஞானங்களோடொப்பப் பாசஞானமொன்றென வைத்தெண்ணப்படுமுரிமையுடையதனை, அறிவுடைத்தன்றென்றல் பொருந்ாதென்பாரைநோக்கி, மேற்கோளைச் சாதித்தனுதலிற்று.

(இ-ள்.) அவ்வறிவாவது தூலமாய்நோக்கும் வழியவ்வசத்துக்குள்ளதுபோலத்தோன்றினும், ஐயந்திரிபின்றிமாசறு காட்சியானாராயும் வழியதன்கணில்லாதாகலான், இனியசத்தினுக் குணர்வின்றென மேற்கொண்ட தென்றவாறு.

எனவேபாசம் வாயிலாகவுயிரின்கணிகழுஞானமே பாசஞான மென்றுபசரித்துக்கூறப்படு மதனைப்பாசத்திற்குளதாகிய ஞானமெனக்காண்டல், நிரூபியாதவழிப்படு மடமையேபிறிதில்லை யென்றவாறாயிற்று.

வெண்பா.

பேய்த்தேர்நீரொன்றுவரும்பேதைக்குமற்றதனை ... *
பேய்த்தேரசத்தாகும்பெற்றிமையின்- வாய்த்ததனைக்
கண்டுணர்வாரில்வழியிற்காணுமசத்தின்மை ... *
கண்டுணர்வாரில்லதெனக்காண் ... ... (உ)

பேய்த்தேர்-காண்-எ-து-உ-ம்-எ-னின், அதனையுவமை முகத்தான் வலியுறுத்து தனுதலிற்று.

(இ-ள்) பேய்த்தேர்நீரொன்றுவரும் பேதைக்குமற்றணைந்தபேய்த்தேரசத்தாகும் பெற்றிமையின்-எ-து- பாலைநிலத்தின்கட் காணப்படுவதாயபேய்த்தேரை நீரொன்றுகருதி, அதனையுண்ணவருகின்ற நீர்வேட்கையுடைய மடவோனுக்கு, அதனையடுத்தவழித் தன்றாலணையப்பட்ட வப்பேய்த்தேர்நீராதலின்றிப் பொய்யாந்தன்மைபோல-வாய்த்து-எ-து- குரவனறிவுறுக்கு முபதேசமொழிகிடைத்து - அதனைக்கண்டுணர்வாரில்வழியிற் காணுமசத்தின்மை-எ-து - அவ்வசத்தினியல்பை யாராய்ந்தறிவாரின்றி யறியமாட்டாதாருள்வழி, அவர்க்கதன்கணறிவுள்ளதாய்மதிக்கப்படுஞ் சத்தாந்தன்மையே காணப்படும்-கண்டுணர்வாரில்லதெனக்காண்-எ-து - அவ்வுபதேசமொழிகிடைத்து, அவ்வியல்பேயாராய்ந் தறியவல்லார்க்கு, அவ்வசத்தறி வில்லதேயாமென்றறிவாயாக வென்றவாறு.

மற்று, வினைமாற்று. மை,பகுதிப்பொருள் விகுதி. இன்-உவமவுருபு. வாய்த்தென்பது-வாய்ப்பதென்பதன்றிரிவு. வாய்த்தல்- நேர்படுதல். ஆண்டைக்கேற்புடைய வினைமுதல் - அவாய்நிலையான்வந்தது. அசத்தின்மையாவது - சத்தாந்தன்மை. நான்கனுருபு - விகாரத்தாற்றொக்கது. அறிவென்பது - அதிகாரத்தான்வந்தது.

---

## மூன்றுமதிகரணம்

---

இனியிருதிறனறிவுள திரண்டலாவான்மா-எ-து-மேல்-எனின், சிவசத்தின்றன்மையே யுயிர்க்குத் தன்மையாவதன்றிவேறில்லை யாகவிற்சத்தேயசத்தை யறியுமென்னுஞ் சிவாத்துவிதசைவரையும், உயிர்க்குத் தன்மையென்ப தொன்றின்மையி னசத்தேசத்தையறியுமென்னுஞ் சிவசங்கிராந்தவாதசைவரையு மறுத்து, சத்துமசத்துந் தம்முளறியுமாறில்லையென மேற்சாதித்தவழி, இரண்டுமிவ்வாறாயினிவற்றையறியும் பொருள்வே றென்னையென்பானைநோக்கி, பாரிசேடவளவையான், அவ்விரண்டின் வேறாயிருக்குந் தன்மையுண்டென்பது விளக்கி, சதசத்தினியல்பை வரைசெய்துணர்த்துதனுதலிற்று.

(இ-ள்.) வெ-டை.

ஈண்டிரண்டலாவான்மாவிருதிறனறிவுளதென்றது - சதசத்தெதிர் நில்லாதவசத்துஞ்சத்துந் தம்முளொன்றாய் நின்றறியப்படாமையா னிருதிறனறிவுள திரண்டலாவான்மாவேயாந்தம்மு ளொன்றானென் றநுபவிக்கப்படாத ஞாயிற்றையும் விடயத்தையு மநுபவிக்குங்கண் போலுமெனவநுமானங்கூறிக்காண்க. அவையுயிரானு மறியப்படாத வழிப்பயப்பாடின்றிச் சூனியமாய்முடியுமாகலா னுயிரறிதற்றன்மை த்தென்பது தெற்றெனவுணர்க.

இவ்விரண்டினையுமறிவதா யுப்தேசியாய்நின்றவழி விரண்டன் பாலுமுளதாயுள்ளவதுவே யிவ்வான்மாவாமென்றது-எ-து-பொ-ரை எ - னின் - இருதிறனறிவென்னுந் தொகைச்சொல்விரியுங் காற் படும்பொருள் வேறுபாடுவிளக்கு முகத்தானுயிர்கருத் தன்னியல்பு வேறுவேறு கூறுஞ்சமயங்களெல்லா மறுக்கப்படுமா றுணர்த்துத னுதலிற்று.

(இ-ள்.) இவ்விரண்டினையு மறிவதாய்-எ-து- மேற்கூறிப்போந் தசத்தையுமசத்தையு மறியுந்தன்மைத்தாய் - உபதேசியாய்-எ-து- அறிவிக்கவறியுந்தன்மைத்தாய விரண்டின்பாலு நின்றவறிவுளதாய்- அவ்விரண்டின் கண்ணுநிலைபெற்ற வநுபவவறிவுள்ளதா யுள்ளவது வேயவ்வான்மாவாமென்றது - எ - து - இவ்வாறுள்ளபொருள் யாது, அதுவேசத்துமசத்துமல்லாத சதசத்தாகிய வுயிரொன்றவா ரும். இருதிறனறிவுள திரண்டலாவான்மாவெனமேற்கொண்ட தெ ன்றவாறு.

ஆயென்னும் வினையெச்சமூன்றும்உள்ளவென்னும் பெயர்வி னைக்குறிப்போடு முடிந்தன. இருதிறனறிவென்னுந் தொகைச்சொல் ஈண்டுமூன்றுபொருளின் மயங்கிற்றென்னுங் கருத்தானிவ்வாறுமொ ழிந்தார். அவற்றுள், இருதிறனையுமறியு மறிவென்னு மிரண்டாவது மயங்கிய வாறும்வேற்றுமைத்தொகைப்பொருள்பற்றி, அவ்விரண்டி னையுமறிவதாயெனவும், இருதிறனால் விளங்கியவறிவென்னு மூன்று ம் வேற்றுமைத் தொகைப்பொருள்பற்றி, உபதேசியாயெனவும், இரு திறனிலுள்ளவறிவென்னுமேழாம் வேற்றுமைத்தொகைப் பொருள் பற்றி, நின்றவறிவிரண்டன்பாலு முள்ளதாயெனவும், உரைக்கப்பட் டன. இவ்விரண்டினையு மறிவதாயுள்ளவது வென்பதனால், இரண்டு

மிவ்வாறுயினிவற்றையறியும்பொருள் வேறென்னையென்னுங்கடாவு க்குவிடைகூறி, அவ்விருவர்மதங்களையு மவற்றோடொருதன்மைய வானசமயங்களையு மறுத்தவாறு. உபதேசியாயுள்ளவது வென்றத னால், உயிரறிவிக்கவேண்டாது தானேயறியுமியல்பிற் றென்னுஞ்சம வாதசைவர்மதம், ஈசுரவவிகாரிமதம், ஐக்கவாதசைவர் மதங்களையு மவற்றோடொரு தன்மையவானசமயங்களையுமறுத்தவாறு; இரண்ட ன்பாலு முளதாயுள்ளவதுவென்றதனால், ஆன்மாவினறிவு சத்தோடு கூடுமாறில்லையென்னும் பாடாணவாதசைவர், பேதவாதசைவர்முத லியோர் மதங்களையும், சத்தோடுகூடியவழி யொன்றுய்ப்போதலே யன்றியதன்பாலுளதாமாறில்லையென்னுஞ் சுத்தசைவர்மதத்தையும், அவற்றோடொருதன்மையவான சமயங்களையுமறுத்தவாறு; இவ்வி ரண்டினையுமறிவதாயெனவே, அவ்வறியுந் தன்மையிவ்விரண்டின்ற ன்மைபோலன்றி யிருளொளியலாக்கண்டன்மைபோல வேறுயதோர் தன்மையென்பதூஉம், உபதேசியாயெனவே, அஃதாகாயத்தின்குண மாயவோசையினியல்புபோலத் தன்னைவிளக்குவதாகிய வியஞ்சக முள்வழிவிளங்குவதோர் தன்மையென்பதூஉம், இரண்டன்பாலுமு ளதாயெனவே, அத்தன்மைபடிகம்போலச் சார்ந்ததன்வண்ணமாய மூந்துந்தன்மையென்பதூஉம் பெறப்பட்டன.

வெண்பா.

அருவுருவுந்தானறிதலாயிழையாயான்மா ... *
வருவுருவுமன்றுகுமுண்மை - யருவுருவாய்த் ... *
தோன்றியுடனில்லாதுதோன்றுதுமில்லாது ... *
தோன்றன்மலர்மணம்போற்றெக்கு. ... ... (ங)

அருவுரு - தொக்கு-எ-து - உ - ம் - எ - னின், அம்மூன்ற னுள் முன்னையதனை வலியுறுத்தி யிரண்டலாமையை விளக்குதனு தலிற்று.

(இ-ள்.) ஆயிழையாயான்மாவருவுருவுந்தா னறிதலருவுருவும ன்றுகும்-எ-து-நுணுகிய நூல்களையாராய்வதாகிய வுயிரோசத்தசத் தென்னு மிரண்டினையு மறிவதாகலானஃதவ்விரண்டு மின்றியவற்றி ன்வேறும் - அற்றேல்அவ்விரண்டினையு மறியுமுயிர்க்குத் தன்னுண்

மையறியப்படுமோ படாதோவெனக் கடாயினர்க்கு, படுமெனின், த ன்னோடுளப்பட மூன்றனையுமறிவ தென்னுதவ்விரண்டினையு மறிவ தாயென்றல் பொருந்தாது. படாதெனின், அறியப்படாத பொருள் சூனியமெனப்பட்டு வழுவாமாலெனின், உண்மையருவுருவாய்த்தோ ன்றியுடனில்லாது தோன்றுத லில்லாதுதோன்றன் மலர்மணம்போற் றேக்கு-எ-து-அவ்வான் மாவிலுண்மைத்தன்மை யவ்விரண்டும்போல விளங்கித்தோன்றியவற்றோடொப்பநிற்பதுமன்று, விளங்காதுசூனி யமாய்நிற்பதுமன்றாய், மலரின்கண் வாசமவ்விரு வகையுமன்றியதன் கணடங்கித்தோன்றுமாறுபோலச் சத்திலுமசத்திலுஞ் சார்ந்ததன் வண்ணமாயடங்கித்தோன்றுவதோரியல்பா மாகலான், அஃதவை போலத் தனித்தறியப்படுவ தொன்றின்றியவ்விரண்டினையுமறியுமுக த்தானறியப்படுவதா மென்றவாறு.

ஆகலானஃதவைபோலத் தனித்தறியப்படுவ தொன்றின்றியவ் விரண்டினையுமறியுமுகத்தா னறியப்படுவதாமென்பது குறிப்பெச்சம். சுட்டுணர்விற்கு விடயமாகாமைபற்றிச் சத்தையருவென்றும், அதற் குவிடயமாதல்பற்றி யசத்தையுருவென்றுங்கூறினர். "உணருருவசத் து" என்புழி, உருவென்றதுமதுநோக்கி. செவ்வெண்டொகை விகாரத் தாற்றொக்கது. தான் - அசை. அறிதலானன்றாகுமெனவிசையும். இ ழை-நூலாகலானீண்டுச்சாத்திரத்தையுணர்த்திற்று. ஆய்தல்-நுணுகு தல். "ஓய்தலாய்தனிழற்றல் சாஅ, யாவயினுன்குமுள்ளதனுணுக் கம்" என்றார் தொல்காப்பியனாரும். ஆயிழையாயெனப்பொருளினு ணுக்கம் நூன்மேலேற்றப்பட்டது. இரண்டாவது விரித்துரைக்க. உ யிர்க்கறியுந் தன்மையுண்டாகலானன்றேவேதாகமமுதலிய நூல்களுள வாயினவென வதனை வலியுறுத்துவார் ஆயிழையாயான்மாவென வத னையுடம்பொடுபுணர்த்தோதினர்.இக்கருத்தேபற்றி, "பலகலையுலகினி லவுதலானும்" என்றார் புடைநூலாசிரியரும். இவ்வாறன்றி யாயிழை யாயென மகடூஉமுன்னிலையாக்குவார்க்கிவ்வுதாரணமேலதனைவலியுறு த்துதற்கெழுந்ததன்மேலுங் கூறியதுகூறலென்னும் வழுவாய்முடியு மென்றொழிக. தேற்றேகாரம் - விகாரத்தாற்றொக்கது அருவுருவா யென்புழி ஆக்கச்சொல்-உவமப்பொருள் குறித்துநின்றது; "ஆள்வா ரிலிமாடாவேனோ" என்றாற்போல. தொக்குத்தோன்றல மலர்மணம் போலெனக்கூட்டுக.

வெண்பா.

மயக்கமதுற்றுமருந்திற்றெளிந்தும் ... ... ...*
பெயர்த்துணர்நீசத்தாகாய்பேசி-லசத்துமலே ... *
நீயறிந்துசெய்வினைகணீயன்றிவேறசத்துத் ... ...*
தானறிந்துதுய்யாமைதான் ... ... ... ...(ச)

மயக்கம்-தான்-எ-து-உ...ம்-எ-னின், அங்ஙனமறியுமுயிர் சிவசத்தோடொப்பச் சித்தாகுமென்பாரை நோக்கி யுபதேசியாயென்றதனைவலியுறுத்துதனுதலிற்று.

(இ-ள்.) மயக்கமதுற்று மருந்திற்றெளிந்தும்-எ-து-நின்னறிவை விளக்குதற்குரிய வியஞ்சக மில்வழி யொருவிடயத்தை யின்னதென்றறியமாட்டாது மயக்கத்தையுற்றும், பசிநோய்க்கு அன்னம்போல அம்மயக்கநோய்க்கு மருந்தாய் வியஞ்சகமுள்வழி யம்மயக்கநீங்கியதனையின்னதென்று நிச்சயித்தும் - பெயர்த்துணர் நீ சத்தாகாய் பேசில்-எ-து-இங்ஙனமாறிமாறி யுணர்ந்துவருகின்ற நீ சொல்லுமிடத்துச் சிவத்தோடொப்ப வறியுஞ் சத்தியுடையாயல்லே - அற்றேல் அசத்தனுவென்போலுமெனின்; நீயறிந்து செய்வினைகணீயன்றி யசத்துத் தானறிந்து துய்யாமை தானசத்துமலே-எ-து - வியஞ்சகமுள்வழியுநீ முன்னறிந்து செய்தவினைகளை யிப்பொழுது நீயேயறிந் தநுபவிக்கவல்லையன்றி நின்னின்வேறாய பாசமறிந்தநுபவிக்க மாட்டாமையானதனோடொப்ப வசத்தனு வாயுமல்லே - வேறு-எ-து-சத்தகுணமுடைய வாகாயம்போல வியஞ்சகமுள்வழியறியு மாற்றலுடைமையு மஃதில்வழி யவ்வாற்றலின்மையுமாகிய விரண்டுமுடைய நீ யவ்விரண்டற்கும் வேறாய்ச் சித்தசித்தாந் தன்மையுடையை யென்றவாறு.

மருந்திற்றெளிந்தெனவே, மயங்குதலஃதில் வழியென்பதுபெற்றாம். வியஞ்சகமில்வழித் தலைப்படுவதூஉம், அஃதுள் வழிநீங்கி நிற்பதூஉமாகிய மயக்கம், உண்டியில் வழித்தலைப்படுவதூஉ மஃதுள்வழிநீங்கி நிற்பதூஉமாகிய வியல்புடைய பசியோடொத்தலின் அதனைப்பசிநோயாகவும், தீர்த்தலொப்புமைபற்றி வியஞ்சகத்தைப் பசிதீர்க்குமருந்தாகவு முருவகஞ்செய்தார். இஃதேகதேசவுருவகம். மருந்தெனப் பொதுப்பட வுருவகஞ்செய்தாராயினு மறித்து மறித்துவேண்

டப்படி மாறிண்டைக் கேற்புடையது பசிநோய்தீர்க்கு மருந்தேயாக வி னவ்வாறுரைக்கப்பட்டது. அது - பகுதிப்பொருள் விகுதி. உம்மையெண்ணின் கண்வந்தது. அசத்துமென்னு மும்மையிறந்துததழீ இயிற்று. தானென்பதுமுன்னையதெழுவா யுருபுபடநின்றது பின்னையதசைநிலை. துவ்வாமை துய்யாமையென மரீஇயிற்று. சத்தியுடைய பொருள் சத்தம். அஃதில் பொருளசத்தமாகலி னவ்வடமொழிகளிண்டம் முக்கெட்டுக் குற்றியலுகரவீறாய் நின்றன; "நாகணையான்" "பெற்றொன்றுயர்த்த பெருமான்" "பேதுசெய்து வாதுசெய்யத் திருவுளமே" என்புழிப்போல. அசித்துமலையென்பது பாடமாயின், மேற்சத்தாயென்றதனை யிசையெச்சமாகக்கொண்டு, சத்தாந்தன்மையுடையாயல்லை யதன்மேலொருசத்தாமாறியாங்ஙனமென் றுரைத்திமைத்துக்கொள்க. இவ்வாறன்றி யீண்டுச் சத்தாகா யசத்துமலையென்பவற்றை மேலருவுருவுமன்றாகுமென்றதன் பொருள்படக்கொண்டு ரைப்பாருமுளர். அவராண்டே யமைந்து கிடந்தபொருளை மறித்துங் கூறவேண்டாமையும், பெயர்த்துணர் நீயெனவும், அறிந்துதுய்யாமையெனவும், அறிவுடைமை யறிவின்மைபற்றிக் கூறும்பொருள் அவையாதல் செல்லாமையுநோக்கிலர்.

வெண்பா.

மெய்ஞ்ஞானந்தன்னில்விளையாதசத்தாத ... ... *
லஞ்ஞானமுள்ளமணைதல்காண் - மெய்ஞ்ஞானந் *
தானேயுளதன்றேதண்கடனீருப்புப்போற் ... *
றானேயுளமுளவாத்தான். ... ... ... ... (௫)

மெய்ஞ்ஞானம்-தான்-எ-து-உ-ம்-எ-னின், அம்மயக்கமவ்வுயிரோடியைபுடைய முதல்வனுக்கு முண்டுபோலுமெனவும் அதுதானுயிர்க்கெக்காலத்து வந்ததெனவுங் கடாவைவிடுக்கு முகத்தானிரண்டன் பாலுமுளதாமாறுவலியுறுத்துத னுதலிற்று.

(இ-ள்.) அஞ்ஞானம்-எ-து-மேற்கூறிப்போந்த மயக்கமாவது-மெய்ஞ்ஞானந் தன்னிலசத்தாதல் விளையாது-எ-து-ஒருபெற்றித்தாயவறிவெனப் படுஞ்சிவத்தினெதிர் கதிர்முன்னிருள்போலநிலையுறுதலில்லதாகலி னுண்மையதாதலின்றி - மெய்ஞ்ஞானந்தானே யுளதன்றே-எ-து- அச்சிவமென்றுள்ளதன்றே - தானேயுள முளவாத்தான்

எ-து-தான்பொருந்துதற் குரிமையுடைய வுயிர்களுள்ளனவாக-உள்ளமணைதல்-எ-து- அவ்வுயிர்களைப்பற்றி நிற்றல் -தண்கடனீருப்புப்போற்காண்- எ-து - தண்ணியகடலின் கண்ணுளதாதலின்றிக்கடலிடத்துளதாகியநீரைப்பற்றி நிற்குமுப்புப்போல வென்றறிவாயாக வென்றவாறு.

விளையாதென்னும் வினையெச்சமறைஅணைதலென்னுந் தொழிற்பெயரோடுமுடிந்தது. தானென்பது கட்டுரைக்கண்வந்தது. தானேயுளமுளவாத்தான்என்புழி, தானென்பது முன்னையதெழுவாயும்பின்னையதசைநிலையுமாம். ஏயுளமென்னும்வினைத்தொகை "அறிவறிந்த மக்கட்பேறு" போலநின்றது. ஏய்தற்குரிமையாவது மேற்காட்டினும். தண்கடனீருப்புப் போலென்றதனான் முப்பொருள்களும் வியாபகவியாப்பியங்களாய் நிற்குமாறும் பெறப்பட்டது. இரண்டன்கண்ணுமுயிர்க்கியைபுடைமைகூறவே யிரண்டன்பாலுமுளதாதல்வலியுறுத்தவாறுகாண்க. ஈண்டிருதிறனையு மறிவுளதெனவே, இருதிறனுகி யசத்துமசத்துமெனப்பட்டன வெல்லாம்பிரமேயம், அவற்றையறியுஞ் சதசததாகியவுயிர் பிரமாதா, அவ்வுயிரினறிவாகிய சிற்சத்தி பிரமாணம்,அவ்வறிவுநிகழ்ச்சியே பிரமிதியென்பதூஉம், இருதிறனால் விளங்குமறிவுளதெனவே, அவ்விரண்டனுள், அசத்தானறிவுவிளங்கும்வழி, தனக்குவேறாய்நின்றுவிளக்குவனவாய, காட்சி, அநுமானம், உரையெனப்படுமசத்தாகிய பாசஞானமூன்றும், சத்தானறிவுவிளங்கும்வழி, அன்னியமின்றித் தனக்காதாரமாயுடனின்று விளங்குஞ்சிவஞானமுந் தனக்குவியஞ்சகங்களாதலான், அதுபற்றியவையும் பிரமாணமென்றுபசரித்துக் கூறப்படுமென்பதூஉம், இருதிறனினுமறிவுளதெனவே, ஈரிடத்துங்கேடின்றி யசத்தான்விளங்கியசத்தையறிவுழியசத்தின்பாலுஞ் சத்தான்விளங்கிச் சத்தையறிவுழிச் சத்தின்பாலுமதுவதுவாயழுந்து மென்பதூஉம் பெறுதும். இவ்வாறன்றி வியஞ்சகங்களையே பிரமாணமென்னுந் தார்க்கிகர்முதலியோர் மதங்கள் பொருந்தாமையும், அவ்வியஞ்சகங்களா னிகழும் பிரமிதிவேறுபாடும், அவற்றதியல்புமீண்டு விரிப்பிற்பெருகும்; பௌட்கரமுதலிய சிவாகமங்களுட்கண்டுகொள்க. ஏழாஞ்சூத்திரமுடிந்தது.

---

# எட்டாஞ்சூத்திரம்.



ஐம்புலவேடரினயர்ந்தனைவளர்ந்தெனத் ... *
தம்முதல்குருவுமாய்த்தவத்தினினுணர்த்தவிட்
டன்னியமின்மையினரன்கழல்செலுமே ... *

எ-து-எ-னின், சிவஞானத்தினையுணரு முறைமையினையுணர்த்துதனுதலிற்று.

எ-து-க-ணா-எ-னின், சூத்திரக்கருத்துணர்த்துத னுதலிற்று.

(இ-ள்) அவ்வான்மாவினறிவாவது மேலிருதிறனென்றதனுள், அசத்தான் விளங்கியசத்தின்பாலுளதா யசத்தினையறிந்து நின்றவாறும், சத்தான்விளங்கிச் சத்தின்பாலுளதாய்ச் சத்தினையறிந்துநிற்குமாறுந்தெரிசிக்கு முறைமையினையுணர்த்து முகத்தாற்சாதித்தற்குரியவதிகாரந்தனக்குண்டென, மேலைச்சூத்திரத்தானறிந்த வான்மாவுக்குச்சாதித்ததனாற் பெறப்படும்பயனும்,அதற்குச்சிறந்த சாதனமாவதும் அதுவருவாயுமிவையென்ப துணர்த்துதலிவ்வெட்டாஞ் சூத்திரத்தின்கருத்தென்றவாறு.

இதனானேசூத்திரவியைபு மினிதுவிளங்கும்.

இச்சூத்திரத்தின் பிண்டப்பொழிப்பு- உயிர்தான்முன்னே, செய்துகொள்ளப்பட்ட புண்ணியவிசேடத்தாற் றனக்கந்தரியாமியாயிதுகாறுமுண்ணின்றுணர்த்திவந்த, பரம்பொருளிப்பொழுது குருவடிவமுங் கொண்டெழுந்தருளிவந்து, சிவதீக்கைசெய்து, மன்னவகுமாரனாகிய நீ,ஐம்பொறிகளாகிய வேட்ருட்பட்டு, வளர்ந்து,நின் பெருந்தகைமையையறியாது, மயங்கி, இடர்ப்பட்டாய், நின்பெருந்தகைமையாவதுஇவ்வியல்பிற்றென்றறிவுறுப்ப, அறிந்தமாத்திரையே, அவ்வேடரைவிட்டுநீங்கி, அன்னியமின்றியன்னியமாந் தன்மையினிலைபெற்று, அம்முதல்வன்றிருவடிகளை யணையுமென்றவாறு.

உயிரென்பது மேலைச்சூத்திரத்தினின்றும் வருவித்துரைக்கப்பட்டது, தவத்தினிற்குருவுமாய் வளர்ந்தயர்ந்தனையென வுணர்த்தவிட்டுச்செல்லுமெனவியையும். புலன் ஆகுபெயர். வளர்ந்தயர்ந்தனையென்பது - ஈந்துபுகழ்பெற்றானென்புழிப்போலக்காரணகாரியப் பொருட்டாய்நின்றது. தம்முதலென்றதுவேறுமுடிபாகலிற் பால்வழுவன்மையுணர்க. குருவுமென்றவும்மை யுயிர்க்குயிராய் நின்றுணர்த்தியதூஉமன்றியெனவிறந்தது தழீஇயிற்று; சிறப்புமாம். அன்னியமின்மை அத்துவிதம்; அஃதாவது - சேறலைப்பயப்பித்ததா யாண்டுளதாகிய வியைபு. அரனென்பது - சுட்டிப்பெயர்படநின்றது. வெண்கொற்றக்குடையு நவமணிமுடியுஞ்சிங்காசனமுமன்னவர்க்கேயுரிய சிறப்படையாளமாம், அதுபோலப்பிரபஞ்ச மெல்லாவற்றிற்கு மூலகாரணமாமியல்பாகிய வொருபெருவெண்கொற்றக்குடையும், எவற்றையுமொருங்கேயோரியல்பானறியும் பேரறிவாகிய வொருபெருஞ்சுடர்முடியும், அங்கங்சேயுயிர்க்குயிராய் நின்றெவற்றினையுஞ்செலுத்து மியல்பாகிய வொருபெருஞ் சிங்காதனமும், பிறரொருவர்க்கின்றித் தனக்கேயுரிமையாகச்சிறந்தமைபற்றி, பசுக்களுக்குப் பாசங்களையரித்தலான் அரனென்னுந்திருப்பெயருடைய முதல்வனைமன்னவனாகவும், அம்முதல்வனது பேரானந்தப்பெருஞ்செல்வ முழுதுந்தனதேயாகக் கொண்டநுபவிக்குஞ் சுதந்திரமுடைமையுஞ் சித்தெனப்படுஞ் சாதியொருமையும்பற்றியான்மாவை மன்னவகுமாரனாகவும், அவ்வான்மாவையறிவுப்பெருஞ் செல்வமுழுவதையு மாறலைத்துக்கொண்டு சிறுமையுறுத்தலும் விதிவிலக்கையிழப்பித்திழி தொழிலினிற்பித்தலுமாகியவியல்புபற்றி, ஐம்பொறிகளை வேடராகவுமுருவகஞ்செய்தார். இஃதேகதேசவுருவகம்." ஐம்புலவேடரினயர்ந்தனை வளர்ந்தென,, எனவே, ஐம்புலவேடரின் வளர்ந்தயர்தலு மறுவாதமுகத்தாற் பெற்றாம். இதனுள், "தவத்தினினுணர்த்த" என்றதோரதிகரணம்? "தம்முதல் குருவுமாய்" என்றதோரதிகரணம்? "ஐம்புலவேடரினயர்ந்தனைவளர்ந்தென" என்றதோரதிகரணம்; "விட்டன்னிய மின்மையினரன்கழல் செலுமே" என்றதோரதிகரணம்; ஆகநான்கதிகரணத்ததிச் சூத்திரமென்றுணர்க.

## முதலதிகரணம்.

ஈண்டிவ்வான்மாக்களுக்கு முற்செய்ததவத்தால் ஞானநிகழுமென்றது-எ-து-மே-ள்-எ-னின், மேற்கூறிப்போந்த சாதகராற்செய்யப்படுஞ்சாதனமும், அதுவருவாயும், வேறுவேறாகக்கூறுஞ் சமயத்தாரைநோக்கி, சூத்திரத்தின்முதற்கூற்றைக் கண்ணழித்துரைத்து, மேற்கோட்னுதலிற்று.

(இ-ள்.) வெ-டை.

மேற்கூறிப்போந்த வியல்புடையவான்மாககளுக் கென்பார்இவ்வான்மாக்களுக்கென்றார். படிமுறையானன்றியிவ்வொரு பிறவியிற்செய்தகவந்தானேயமைபாதென்ப துணர்த்துதற்கு முற்செய்தவமென விசேடித்தார். ஈண்டுஞானமென்றது- சூரவனுணர்த்தியவாறு சிவஞானங்கண்ணாகக்கொண்டு அறிவதாகிய சாதனவறிவின்மேற்று. நிகழ்தல் - ஐயந்திரிபின்றி விளங்குதல்.

மேற்சரியைகிரியா யோகங்களைச்செய்துழி நன்னெறியாகிய ஞானத்தைக்காட்டி யல்லதுமோட்சத்தைக் கொடாவாகலான்-எ-து-ஏது-எ-னின், தவங்களேசாதனமாதலமையும் ஞானமெற்றுக்கென்பாரைநோக்கி, மேற்கோளைச் சாதித்தனுதலிற்று.

(இ-ள்) வெ-டை.

ஈண்டுத்தவமெனப்பட்டன பிறவல்லவென்பார் சரியைகிரியா யோகங்களைஎனக் கிளந்துரைத்தார். கிரியாயோகங்க ளென்னும்உம்மைத்தொகை வடநூன்முடிபு. கிரியாயோக மிரண்டற்குந் தீக்கையொன்றென்பதுதோன்ற அவ்விரண்டனையுந்தொகுத்தோதி, சரியையைத்தமிழுக்குரியவீற்றான் வேறுவைத்தார். ஆளுடையபிள்ளையார் முதலாயினார்க்குத் தவமின்றியுஞானநிகழ்ந்தவா றென்னையென்னுங் கடாவைவிடுத்தற்கு மேற்செய்துழியென வீண்டும்வலியுறுத்தார். மேலாகியவுண்மைச் சரியைகிரியாயோகங்களை யெனினுமமையும்.

காட்டிக்கொடுக்கு மெனற்பாலதனை யெதிர்மறைமுகத்தாற் கூறினார் ஞானத்தையின்றி யமையாமையுணர்த்துதற்கு. சரியைகிரியாயோகங்களைச்செய்துழியென்றது உபலக்கணமாகலிற் றீக்கைபெற்றுழியது ஞானத்தைக்காட்டி யல்லதுமோட்சத்தைக் கொடாதெனக்கொள்க. அவையெல்லாம்ஞானத்தைக் காட்டியல்லதுமோட்சத்தைக்கொடாமையை வலியுறுத்துவார் நன்னெறியாகிய ஞானத்தையென விசேடித்தார். நன்மையெனப்படுவனவெல்லாவற்றினுஞ்சிறந்தநன்மையாவதுவீடுபேறென்பது. அதனைத்தலைப்படுவன வனைத்துந்தன்கண்ணேவந்துகூடநின்ற பெருநெறியாகலானுமஃதுநன்னெறி யெனப்பட்டது. நன்னெறி, சன்மார்க்கம் என்பனவொருபொருட்கிளவி.

வெண்பா.

தவஞ்செய்தாரென்றுந்தவலோகஞ்சார்ந்து ... *
பவஞ்செய்துபற்றறுப்பாராகத் - தவஞ்செய்த ...*
நற்சார்பில்வந்துதித்துஞானத்தைநண்ணுதலைக் ... *
கற்றூர்சூழ்சொல்லுமாங்கண்டு. ... ... ... (௧)

தவம்-கண்டு-எ-து-உ-ம்-எ-னின், மேற்சரியைகிரியா யோகங்களைச் செய்தார்வற்றான் ஞானத்தைக்காணுமுறைமை யெவ்வாறென்பாரைநோக்கி யஃதாமாறுணர்த்தி யேதுவைவலியுறுத்துத னுதலிற்று.

(இ-ள்.) தவஞ்செய்தார்-எ-து- சரியைமுதலியவற்றைச் செய்தார்கள்-என்றுந்தவலோகஞ்சார்ந்து-எ-து- அவ்வத்தவப்பயன்களைப் பயப்பிக்குஞ் சாலோகாதிபதங்களை யொருதலையாக நண்ணியாண்டுளவாகியவின்பங்களையநுபவித்து - பற்றுப்பவஞ்செய் தறுப்பாராக- எ-து-முன்னுடம்பிற்கு நாளடுத்த வினைகாட்டுங்கதிநிமித்தம் பற்றியெழுந்தவவாவினைமீள நிலத்தின்கட்பிறந் தநுபவித்துநீக்கிக்கோடற்பொருட்டு - தவஞ்செய்தநற்சார்பில்வந்துதித்து ஞானத்தைநண்ணுதலை-எ-து-மீளத்தவஞ் செய்தற்குரிய வுயர்ந்தகுலத்தின்கண் வந்து தோன்றித்தவக்குறையா னவ்விடயப்பற்று முறுகாவண்ணமறுத்துத் தத்துவஞானத்தைத் தலைப்படுவோராதலை - கற்றூர்சூழ்கண்டுசொல்

னுமாம்-எ-து-வீட்டுநூல்களைக் கற்றாதுசூழ்ச்சியர்நூற் கருத்துணர்ந்துசொல்லுமென்றவாறு.

தவந்தானுசப்பிறிதொன்று தானுக விவ்வுலகததுடம்பொடுநின் றீட்டியவினையெல்லாம் அவ்வுலகத்திற்செலுத்தித் தம்போகங்களைப் பயந்தேவிடுமாகலா னவற்றையொருநாளும் பிறழமாட்டாரென்பார் என்றுந் தவலோகஞ் சார்ந்தென்றார். ஆகவென்னுஞ் செயவெனெச்சம் உண்ணவந்தானென்புழிப்போலத்தற்பொருட்டாய்நின்றது. பற்றறுத்தற்பொருட்டுவந்துதித்தெனவே யாண்டுப்பற்றுச் செல்லாதவழி யவ்வுலகத்துநின்றுங்கே ஞானத்தை நண்ணுவரென்பதூஉம் பெறுதும். கற்றாது சொல்லுதற்றொழில் சூழ்ச்சிமேலேற்றப்பட்டது. ஆம் - அசை. நற்சார்பில்வந்துதித்து ஞானத்தைநண்ணுதலென்ற அருத்தாபத்தியா னிழிகுலத்தோர்தத்துவஞானத்துக் குரியரல்லரென்பது பெறப்பட்டது.

வெண்பா.

பசித்துண்டுபின்னும்பசிப்பானையொக்கு ... ...*
மிசைத்துவருவினையிலின்ப - மிசைத்த ... ... *
விருவினையொப்பிலிறப்பிறவத்தான் ... ... ...*
மருவுவனுஞானத்தைவந்து .. ... ... ... (௨)

பசித்து-வந்து-எ-து-உ-ம்-எ-னின், சரியைமுதலிய தவங்களே தத்துவஞானத்தைக்காட்டுமென யாப்புறுத்தோதியதென்னை வேதத்துட்கூறிய வேள்விமுதலாயினவுந் தத்துவஞானத்தைக் காட்டுமென்றலமையுமென, பட்டாசாரியன்மதம்பற்றிக் கூறுவானைநோக்கியே துவை வலியுறுத்துதனுதலிற்று.

(இ-ள்) இசைத்துவருவினையிலின்பம்-எ-து - ஒரு நல்வினைசெய்வான்றொடங்கி யறநூலே யாய்வாரதுணர்வின்கண் விடயமாய்வரும் பொழுதே தம்மாற்பெறப்படுங் காமியப்பயன்களை யுடன்கொண்டே வருகின்றனவாய வேள்விமுதலிய வறங்களின்பயனாகிய வின்பம்-பசித்துண்டுபின்னும் பசிப்பானையொக்கும்-எ-து- முன்னர்ப்பசித்துண்டு பின்னும்பசிப்பானுக் கவ்வுண்டி யான்வருமின்பத்தை யொக்கு

மாகலான்-இசைத்தவிருவினை யிறப்பிறவத்தானொப்பில்-எ-து- ஒருவனுக்கு ஞானத்தைத்தடுத்துப் பந்தமுறுத்துதற்கட் பொன்விலங்கு மிருப்புவிலங்கும்போலத் தம்முட்சமப்படுத்துணர்வனவாகிய வறம் பாவமிரண்டுந் தம்மைப்போலதுபவமாத்திரையாற் கெடுதலின்றி மேன்மேன்முறுகி வளர்வனவாய சரியைமுதலிய தவங்களானே நேராகவொத்தால்-வந்துஞானத்தைமருவுவனும் - எ-து-அத்தவமுதிர்ச்சியுடைமையான் முன்னர்க்கூறப்படு ஞானகுருவைத்தேடிவந்துஞானத்தைத் தலைப்படுவனென்றவாறு.

வேள்விமுதலாயினவெல்லா மழிதன்மாலையவாயகாமியங்களைப் பயப்பனவன்றித் தத்துவஞானத்தைப் பயவாதென்றற் கவற்றைவிதித்தநூல்களே சான்றென்பார் இசைத்துவருவினையென்றும், அவை ஞானத்தைப் பயவாமைமாத்திரையேயன்றித் தீவினைபோல வதுநிகழவொட்டாது தடைசெய்துநிற்றலு முடைமையினவற்றதுகழிவே யீண்டைக்குக்காரணமாவதென்பார் இசைத்தவிருவினை யொப்பிலென்றுங்கூறினர் ஒப்பில் என்னும் வினையெச்சம் மருவுவனென்னும் பிறவினைமுதல்வினைகொண்டது. தேற்றேகாரம் விகாரத்தாற்றொக்கது. ஆம்-அசை. வருதல் - இடவழுவமைதி. பசிப்பானென்றது-ஆகுபெயர். இசைத்துவருவினையென நூலின்றொழில் வினைமேலேற்றப்பட்டது. மிசைத்தவிருவினையெனப் பாடமோதி யிருவினைகளுண் மிக்கவிருவினையாகிய பிரமக்கொலை பரிமேதவேள்விபோல்வன தம்முளொருங்கே பயன்றருவனவாயொத்த காலத்தென்றுரைப்பாருமுளர். அஃதீண்டைக்குப் பயன்படாமையுஞ் சித்தாந்தத்துக்கேலாமையுமறிக. இசைத்தவிருவினையி லின்பம்பசித்துண்டு பின்னும் பசிப்பானையொக்குமெனவே யிறப்பிறவத்தான் மருவப்படுஞானம் பசித்துண்டு பின்னும் பசித்தலில்லாதகடவுளர்க் கவ்வமிழ்தவுண்டியானுயபயனையொக்குமென்பதூஉம்பெறப்பட்டது. படவே, அவ்வமிழ்தவுண்டிநரை திரைமூப்பின்றிநிலைபெறுதலாகிய பெரும்பயனைத் தருதன்மாத்திரையேயன்றிப் பசிதீர்தலாகிய வவாந்தரப்பயனையுந் தருமாறுபோல விறப்பிறவமுந் தத்துவஞானத்தைப் பயத்தன்மாத்திரையேயன்றித் தத்தம்பதமுத்தியாகிய வவாந்தரப்பயனைப் பயத்தலு மமைவுடைத் தாமாறுகண்டுகொள்க.

## இரண்டாமதிகரணம்.

---

இனி யிவ்வான்மாக்களுக்குத் தமதுமுதருனே குருவுமாயுணர்த்துமென்றது-எ-து-மே-ள்-எ-னின், மேற்கூறியவாற்று னிகழுஞானத்தையுணர்த்துவார் கலைஞானங்களை யுணர்த்துவார்போல நம்மனோரிலொருவராதலமையுமெனச் சாங்கியர் நையாயிகர் முதலியோர் மதம்பற்றி நிகழுங்கடாவையாசங்கித்துச் சூத்திரத்தினிரண்டாங்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடனுதலிற்று.

(இ-ள்) மேற்கூறியவாற்றாற் சரியைமுதலிய மூன்றுமுற்றியபின்னரிம்முற்றுதலானே மலபரிபாகஞ் சத்திநிபாதம்நிகழ்ந்து தத்துவஞானத்தின் அவாவுதலையுடைய வுயிர்கட்கிதுகாறுந் தமக்குமுதலாயுண்ணின்றுணர்த்திவந்த பரம்பொருளே யப்பருவமறிந்து குருமூர்த்தமாயெழுந்தருளிவந்து அதனை யறிவுறுக்குமென்றவாறு.

எனவே யேனையோர்க்கது கூடாதென்றவாறாயிற்று. இக்கருத்தேபற்றி "அகத்துறுநோய்க்குள்ளினானன்றி யதனைச்-சகத்தவருங் காண்பரோதான்" என்றார் புடைநூலாசிரியரும். ஏகாரந்தேற்றம்.

அவனன்னியமின்றிச் சைதன்னியசொரூபியாய் நிற்றலான் எ-து-ஏது-எ-னின், மாயாவொருவன் மாயாவுருவினையுயான், ஏயுமெனி லெம்மனோரிலொருவனும் முடியுமாகலிற்றமது முதல்குருமூர்த்தியாதாரமாகத் தெரித்துநின்றுணர்த்துமென்றலே யமைவுடைத்தெனப் பொதுவகையான் அதிட்டானபக்கங்கூறுவாரைநோக்கிச் சிறப்புவகையா னுவேசபக்கமாமாறுணர்த்தி மேற்கோளைச் சாதித்தனுதலிற்று.

(இ-ள்) அம்முதல்வன் பாலினெய்போலமறைந்து வேறாய்நிற்றலன்றிச் சுத்தான்மசைதன்னியமே தனக்குச்சொரூபமாகக்கொண்டு தயிரினெய்போல வாண்டுவிளங்கிநிற்றலா னிவ்வான்மாக்களுக்குத் தமதுமுதருனே குருவுமாயுணர்த்துமெனமேற்கொண்டதென்றவாறு.

பாலினெய்போலவேறாய்மறைந்துநின்று செலுத்தப்படுவனவற்றினும் பொதுவாய்ச்செல்வதாகிய வதிட்டான பக்கங்கொள்வாருக்

கேனைச்சமயகுரவராவான் சேறலின் அஃதீண்டைக்கமைவுடைத்த ன்றென்பதாம். சைதன்னியமென்றார் மாசுதீர்ந்ததென்ப துணாத் துதற்கு.

வெண்பா.

மெய்ஞ்ஞானந்தானேவிளையும்விஞ்ஞானகலர்க் ...
கஞ்ஞானவச்சகலர்க்கக்குருவாய்-மெய்ஞ்ஞானம்...*
பின்னுணர்த்துமன்றிப்பிரளயாகலருக்கு ... ... *
முன்னுணர்த்துந்தான்குருவாய்முன் ... ... (௩)

மெய்ஞ்ஞானம்-முன் - எ-து - உ-ம்-எ-னின், ஓரோவிடங்களிற் குருவாய்வந்துணர்த்துதலன்றியும் ஞானநிகழுமாறென்னை யென்பா ணைநோக்கி யதனைவரைசெய்துணர்த்தி வலியுறுத்துதனுதலிற்று.

(இ-ள்.) விஞ்ஞானகலர்க்குத்தானே மெய்ஞ்ஞானம்விளையும்- எ-து-அம்முதல்வன் மூவகையான்மாக்களுள் விஞ்ஞானகலராயினார் க்குத் தன்மையினின்றவாறே தத்துவஞானத்தைவிளைப்பன்-அன்றிப் பிரளயாகலர்க்குத் தான்குருவாய்முன்னுணர்த்தும்-எ-து-அவ்வாறன் றிப் பிரளயாகலராயினார்க்கு நாற்றோளு முக்கண்ணுங் கறைமிடறுமுத லிய வுறுப்பிற்றாய் முத்தொழினடாத்திநின்ற தன்னியற்கைவடிவே குருவடிவாகக்காட்டி முன்னாகநின்று தத்துவஞானத்தை யுபதேசித் துணர்த்துவன்-அஞ்ஞானவச்சகலர்க்கக்குருவாய்ப்பின் மெய்ஞ்ஞான முணர்த்தும்-எ-து-அவிச்சையையுடைய சகலராயினார்க்கு அவர்வடி வுபோலும் வடிவுடையகுருவாகி யவ்வடிவின்பினாக மறைந்துநி ன்று தத்துவஞானத்தையுணர்த்துவன்-முன் - எ-து-அவ்வேறுபாட் டையறிவாயாக வென்றவாறு.

முன்னென்றதனைமுன்னைப் பொருளென்றுரைத்து எழுவாயா கக்கோடலுமொன்று.

விளையுமென்பது அரசனெடுத்தவாலயமென் புழிப்போலவில் விகுதிதொக்குநின்றது. இவ்வாறன்றி யெளிதினெட்படுதனோக்கி யரி

சிதானே யட்டதென்றாற்போல, எளிதின்விளக்கப்படுதனோக்கிமெய்ஞ்ஞானந்தானே விளையுமென்றானெனினுமமையும் "உண்ணின்றருளி" என்றார்புடை நூலாசிரியரும். ஈண்டஞ்ஞானமென்றது அவிச்சையையென்பது சகலர்க்கேயடையா யோதியவாற்றானறிக. அச்சகலரென்றது தவஞ்செய்காரென மேலெடுத்துக்கொள்ளப்பட்ட சகலரென்றவாறு. அக்குருவென்றது மேற்கோளிற்கூறிப்போந்த குருவென்றவாறு. தானேவிளையும் முன்னுணர்த்தும் பின்னுணர்த்தும் எனவே, விஞ்ஞானகலர்க்குத் தன்மையினும், பிரளயாகலர்க்கு முன்னிலையினும் சகலர்க்குப்படர்க்கையினு நின்றுணர்த்துமென் றுரைசெய்தவாறுகாண்க. இவற்றுண்முன்னையவிரண்டும், நிராதாரமெனவும், பின்னையதுசாதாரமெனவும், கூறப்படும்.

வெண்பா.

அறிவிக்கவன்றியறியாவுளங்கள் ... ... ... *
செறியுமாமுன்பின்குறைக - ணெறியிற் ... *
குறையுடையசொற்கொள்ளார்கொள்பவத்தில்வீடென்
குறைவில்சகன்சூழ்கொள்பவர்க்கு. ... ... (ச)

அறிவிக்க- கொள்பவர்க்கு-எ-து-உ-ம்-எ-ஙின், விஞ்ஞானகலர் முதலியமூவர்க்குமோரியல்பி னுணர்த்தாது, அவ்வாறுதன்மையினு முன்னிலையினும் பின்னிலையினு முணர்த்துதலெற்றுக் கென்பாரை நோக்கி, காரணங்கூறி அதனைவலியுறுத்துத னுதலிற்று.

(இ-ள்) ஊங்கணெறியி னறிவிக்கவன்றியறியா-எ-து- உயிர்களெல்லாந் தமக்குரியபடிவழியின்வைத்து முதல்வனறிவிக்கவறியு மியல்பினவன்றி யொன்றுபோலறிவிக்கவறியு மியல்பினவல்லவாகலான்-குறைவில்சகன்சூழ் கொள்பவர்க்கு-எ - து - அறிவாற்குறைபாடில்லாத சகக்கடவுள துபதேசமொழியைக்கொண் டுணருமியல்பினராகியபிரளயாகலர்சகலர்க்கு - குறைகண்முன்பின் செறியுமாம்-எ-து-அவ்வறிவித்தாலறிதலாகிய குறைகண்முன்னிலையினும் பின்னிலையினு நிகழ்வனவாம் - குறையுடையசொற்கொள்ளார் கொள்பவத்தில்வீடென்-எ-து- குறைவில்சகனாகிய குரவனுடைய வுபதேசமொழிகொண்டுணரவேண்டாதாராகிய விஞ்ஞானகலர்க்குமுதல்வனாற் கொள்

ளப்பட்டதன்னுண்மை மாத்திரையின் வீடுபயக்கு முணர்வுண்டென் றறிவாயாக வென்றவாறு.

குறை - இன்றியமையாப்பொருள். அது" வினைக்குறைதீர்ந்தா ரிற்றீர்ந்தன்றுலகு,, என்பதனுட் பரிமேலழகருரையானு முணர்க. பவம் - சம்பவம் - உண்மை - என்பனவொருபொருட்கிளவி. வீடு பயக்குமுணர்வை வீடென்றுஞ்சூழ்ச்சி பயக்குமுபதேசமொழியைச் சூழென்றுங்காரணகாரியமாக வுபசரிக்கப்பட்டன.

கொள்பவர்கொள்ளாரென்பனவுமவை. கொள்ளார்க்கென்னு நான்கனுருபு விகாரத்தாற்றொக்கது; ஐந்தவித்தானாற்றல்" "என்புழிப் போல. ஆம்வீடெனவினையும். வீடாமெனப்பாட மோதுவாருமுளர். மேலைவெண்பாவின் முன்னுணர்த்தும் பின்னுணர்த்துந்தானே வினையு மெனக்கூறியவற்றையீண்டு நெறியினறிவிக்கவன்றி யறியாவாகலான துமுன்செறியும் பின்செறியும் பவத்தினுமெனக் காரணங்கூட்டி வலியுறுத்தினர். இதற்குப்பிறவெல்லாந்தத்தமக்கு வேண்டியவாறே மேலைவெண்பாவோடியை பறவுரைத்தார். அலலதூஉம்," அறிவிக்க வன்றியறியாமை,, உபதேசியாவென வான்மாவினியல்புகூறும் வழிப் பெறப்பட்டதாகலி னதனையீண்டும்புனருத்தியாற் கூறவேண்டாமை யின்மேலது வலியுறுத்தற்கேற்புடைய வறிவிக்கவறிதற்கட்படும் விசேடமாத்திரையே யீண்டெடுத்தோதினர் என்றுணர்க.படிவழியின் வைத்தறி விக்கவன்றியறியாமை, "பந்தமும்வீடுந் தெரியருட் பனுவற் படிவழிசென்றுசென்றேறி,, என்பதனானுமறிக.

வெண்பா.

இல்லாமுலைப்பாலுங்கண்ணீருமேக்கிளைபா ... ௸
னல்லாயுளவாமானீர்நிழல்போ - லில்லா ... ௸
வருவாகிநின்றானையாரறிவார்தானே ... ... ௸
யுருவாகித்தோன்றானேலுற்று. ... ... ... (௫)

இல்லா-உற்று-எ-து-உ-ம்-எ-னின், அம்முத்திறத்து வீண்டைக் கெடுத்துக்கொண்ட வஞ்ஞானவச்சகலர்க்கக் குருவாதலேனையபோ லன்மையின், உபசாரமேயன்றி யேனையபோலுண்மையாதல் செல் லாதென்பாரைநோக்கி, உண்மையாதலையுவமை முகத்தான்வலியுறு த்துதனுதலிற்று.

(இ-ள்) நல்லாய்-எ-து- அறிவானன்மையையுடைய மாணுக்க னே – ஏந்திழைபாலில்லா முலைப்பாலுங்கண்ணீரு முளவாமால்-எ-து ஏந்தியவிழைகளையுடையாட்குக் குழவிமாட்டுளதாகி வருவதாகியவ ன்பினைப்பிறரறியு மாறுவெளிப்படுத்து மவ்வன்பினுருவாகிய முலைப் பாலுங்கண்ணீருமவண் மாட்டுக்குழவியைக்காணு முன்னில்லவாய்ப் பின்னுளவாமதுபோல – நீர்நிழல்போலில்லா வருவாகிநின்றுனையா ரறிவார்தானேயுருவாகி யுற்றுத்தோன்றுனேல்-எ-து- நீரின்கண்ணி ழல்போலுயிர்கண் மாட்டுப்புலப்படுதலில்லாத வருவமாய்நின்றமுத ல்வனை யார்தாமறிவாரவனே குருவடிவாய்வந்து தோன்றிநின்றுணர் த்தானாயினென்றவாறு.

ஒருவருமில்லையென்பதாம். இஃதெடுத்துக்காட்டுவமை. இன்றி யமையாமை யுணர்த்துவார் தோன்றுனேலாரறிவாரென வெதிர்மறை முகத்தாற்கூறினர். பொருளுக்கோதியதனையுவமையினுங் கூட்டியே ற்குமாறுணர்க. முலைப்பாலுங்கண்ணீருமன்பை விளக்குமென்பது. "சுரந்ததிருமுலைக்கே துய்யதிருஞானஞ்-சுரந்துண்டார்பிள்ளையெனச் சொல்லச் – சுரந்த – தனமுடையாடென் பாண்டிமாதேவி தாழ்ந்த- மனமுடையாளன்பிருந்தவாறு" என்பதனானும், "அன்பிற்குமுண் டோவடைக்குந்தாழார்வலர், புன்கணீர்பூசறரும்" என்பதனானுமறிக. அவ்விரண்டுமன்பின் வடிவேபிறவல்லவென்பது அன்புநிகழ்தற்குரிய காரணமுள்வழிவெளிப்பட்டு அஃதில்வழிவெளிப்படாத வொற்றுமை நோக்கிக்கண்டுகொள்க. இவ்வொற்றுமையுணர்த்துவார் இல்லவாயு ள்வாமென்றார். இல்லவென்பது முற்றெச்சக்குறிப்பு. ஆல்-அசை, நீரகத்தியங்குமுயிர்கட்கிடங் கொடுத்தலுண்மையானீரின்கண் வெளி யுண்டென்பதூஉம், உண்டாகவே, ஆண்டுநீருக்கு னிழலுண்டென்ப தூஉம்பெறப்பட்டன. அந்நிழல்வேறுநில்லாது நீரொடுவிரவிநிற்றலி னீர்போற்புலப்படாதாயிற்று; அதுபோலச்சிவ சைதன்னியமும்யா னென்னுமுணர்விற்குவிடயமாய்ப் புலப்படுமான்மசைதன்னியத்தோ டுவிரவிப்புலப்படாது நிற்பதொன்றென்பார் நீர்நிழல்போலில்லாவரு வாகிநின்றுனையென்றார்.

## மூன்றாமதிகரணம்.

---

இனியிவ்வான்மாக்கள் ஐயுணர்வுகளான்மயங்கித்தம்மையுணரா தென்றது-எ-து-மே-ள்-எ-னின், விடயஞானத்தை விளக்குமைம் பொறிகளேதத்துவ ஞானத்தைவிளக்குதற்குமமையும்; தம்முதலகுரு வுமாதல்வேண்டாவென, சிவசங்கிராந்தவாதசைவர் மதம்பற்றிநிகழு ங்கடாவையாசங்கித்து, சூத்திரத்தின்மூன்றாங்கூற்றைக் கண்ணழித் துரைத்து, மேற்கோட்னுதலிற்று.

இவ்வாறுரையாக்கால் இனியென்பதனு லுணர்த்தப்படுமேலைய திகரணத்தோடுளதாகிய வியைபுபெறப்படாமை யறிக.

(இ-ள்.) வெ-ளிடை.

உணர்வு-ஆகுபெயர்.

அவைதாம்பளிங்கிலிட்டவன்னம் போற்காட்டிற்றைக்காட்டிநிற் றலான்-எ-து-ஏது-எ-னின், அறிவைவிளக்குங்கருவியான் மயக்கநிக ழுமாறியாங்ஙனமென்பாரைநோக்கி, மேற்கோளைச்சாதித்தனுதலிற்று.

(இ-ள்) படிகத்தின்வைத்த பல்வேறுவகைப்பட்ட நிறங்கள்ப டிகவொளியைக்கீழ்ப்படுத்துத் தத்தம்மியல்பினையே விளக்கிநிற்கு மாறுபோல, அவ்வைம்பொறிகடாம் ஆன்மசொரூபத்தைக் கீழ்ப்படு த்துத்தம்மாற் காட்டப்பட்ட தத்தம்விடயமாத்திரையே யவ்வான்மா வுக்குக்காட்டிநிற்பனவாகலான் இனியிவ்வான்மாக்கள் ஐயுணர்வுகளா ன்மயங்கித்தம்மையுணராதென மேற்கொண்டதென்றவாறு.

விடயங்களுள்ளும் அவ்வவவிடயமாத்திரையே யவ்வவவிந்திரிய ங்காட்டவல்லுமென்பார் காட்டிற்றையெனவொன்றறி சொல்லாற் கூறினார்.

வெண்பா.

பன்னிறமேகாட்டும்படிகம்போலிந்திரியந் ... *
தன்னிறமேகாட்டுந்தகைநினைந்து - பன்னிறத்துப் *
பொய்ப்புலனைவேறுணர்ந்துபொய்பொய்யாமெய்கண்டான்
மெய்ப்பொருட்குத்தைவமாம்வேறு. ... ...(௬)

பன்னி-வேறு-எ-து-உ-ம்-எ-னின், அங்ஙனங் காட்டிற்றையே காட்டிநிற்குமாயின், அவ்விந்திரியங்களுள் வழிக்கம்முதலகுருவுமா யுணர்த்தினுமுணர்தல் செல்லாதுபோலுமென்பாரை நோக்கி, உணர் தற்குபாயங்கூறி, அதனைவலியுறுத்துத னுதலிற்று.

(இ-ள்.)பன்னிறமேகாட்டும் படிகம்போ லிந்திரியம் தன்னிறமே காட்டுந்தகை நினைந்து-எ-து-தன்னாற் சாரப்பட்ட பன்னிறங்களினிய ல்பே தன்மாட்டுக்காட்டி நிற்கும் பொதுவியல்புடைய படிகம்போல, தன்னாற் சாரப்பட்ட விந்திரியங்களி னியல்பையே சார்ந்ததன் வண் ணமாய்த் தன்மாட்டு விளக்கி நிற்குந் தனது பொதுவியல்பை முன் னர்ச் சிந்தித்தறிந்துகொண்டு, பின்பு- பன்னிறத்துப் பொய்ப்புலனை வேறுணர்ந்து-எ-து - அந்நிறங்கள் படிகத்துக்கு வேறென்றறியுமாறு போலவும் பலவகை யியல்புடைய பொதுவியல்பைச்செய்யும் பொ றிகளைத் தன்னின் வேறெனத்தெளிந்து - பொய்யொய்யா மெய்கண் டால்-எ-து-அவற்றானுயவப் பொதுவியல்பு பொய்யாயொழியுமாறு தனது சிறப்பியல்பை யுணர்ந்தானாயின் - வேறுமெய்ப் பொருட் குத்தைவமாம்-எ-து-அவ்வசத்தாகிய பொறிகளுக்கு வேறாகிய சிவச த்தினதியல்பு தன்மாட்டு விளங்கச்செய்யு மாகலினச் சிவசத்துக்கடி மையாம்-எ-று.

ஈண்டுப்பொய்-மெய்-எனப்பட்டன அப்பொருளவாதல் மேலே காட்டினும். தைவமென்பது- தேவனதுடைமையென்னும் பொருட் டாய வடமொழிப்பகுபதம்.இதனானே,கருவிகளுள் வழிக்காட்டிற்றை க்காட்டிநிற்றலினறிதல்செல்லாது அவைநீங்கியவழிக்கேவலமாய் முடி யுமாகலிற் றன்னுண்மை யறியுமாறியாங்ஙனமென்னுங் கடாவை யாச ங்கித்து, அவையுள் வழியே தன்னுண்மையறிதற் குபாயங்கூறி, அது பற்றியவைகாட்டிற்றைக்காட்டி நிற்றற் கிழுக்கில்லையென வலியுறுத்த வாறுமென்க. மெய்ப்பொருட்குத் தைவமா மென்றதனால், வருகின் ற வதிகரணத்திற்குத் தோற்றுவாய் செய்தவாறு.

---

## நான்காமதிகரணம்.

---

இனி யிவ்வான்மாத்தன்னை யிந்திரியத்தின் வேறுவான்காணவே தமது முதல் சிபாதத்தை யணையுமென்றது-எ-து-மே-ள்-எ-னின்,

பொய்ப்புலனை வேறுணர்ந்து பொய்பொய்யா மெய்கண்டார்க் கது வேயமையும், கருவிகணீங்கியவழிச் செயக்கடவதொருமுயற்சி கூடாமையின் ஆண்டு மெய்ப்பொருட்குத் தைவமாதல் பெறப்படாதெ ன்னும் பேதவாதசைவர் முதலியோர் கூறுங்கடாவை யாசங்கித்து, சூத்திரத்தி னிலாங்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோட னுதலிற்று.

(இ-ள்) வெ-டை.

இந்திரியத்தின் வேறாயவழிக் கேவலத்தை யணைதலு முண்மையின், அதனை நீக்குதற்பொருட்டு, வேறாகாவென்றொழியாது, வேறுவான் காணவென்றார். காண்டலே யதற்கமையுமென்றலின், ஏகாரந் தேற்றத்தின் கண்வந்தது.

ஊசல் கயிறற்றாற்றாய் தரையே யாந்துணையான்-எ-து-ஏது-எ-னின், அவ்வாறு காண்டலே சீபாதத்தை யணைதற்குச் சாலுமென்ப தியாங்ஙனமென்பாரை நோக்கி, உவமையின் வைத்துக்காட்டி, மேற் கோளைச் சாதித்தனுதலிற்று.

(இ-ள்.) ஒருவனேறி யிருந்தாடுதற் காதாரமான வூசல் கயிறற்ற தாயின், அவனுக் குற்றுழியுதவுந் தாய்போல, ஆண்டாதாரமாவது நிலனேயன்றிப் பிறிதில்லை யென்னு மொப்புமையான், இனி யிவ்வான் மாத் தன்னை யிந்திரியத்தின் வேறுவான் காணவே, தமது முதல் சீபாதத்தை யணையுமென மேற்கொண்ட தென்றவாறு.

வியாபகப் பொருட்குக் காட்சி விசேடமே நீக்கமாகலின் அறுதலுதற் குவமையாயிற்று.

வெண்பா.

சிறைசெய்யாநின்ற செழும்புனலினுள்ளஞ் ... *
சிறைசெய்புலனுணர்விற் றீர்ந்து-சிறைவிட் ... ...*
டலைகடலிற்சென்றடங்கு மாறுபோன்மீளா ... *
துலைவிலரன்பாதத்தை யுற்று. ... ... ... (எ)

சிறை - உற்று-எ-து-உ-ம்-எ-னின், கருவிகணீங்கினவழி வேறுநில்லாது சிவத்தைத் தலைப்படுமுயிர்க்குங்கருவிகணீங்கிக் கேவலத்தை

த்தலைப்பட்ட வுயிர்க்குப்போல மீட்சியுண்டு போலுமென்பாரை நோக்கி, அஃதின்றுமாறுமேலதனை வலியுறுத்துத னுதலிற்று.

(இ-ள்.) சிறைசெய்ப நின்ற செழும்புனலினுள்ளம்-எ-து- ஒருவனணையை யுயர்த்துக் கட்டித் தடைசெய்ய வாண்டுத்தடையுண்டு தேங்கிநின்ற வாற்றுநீர்போல, கருவிகளாகிய பாசஞானந் தனது வியாபகத்தைத் தடைசெய்ய வதன்கணேக தேசமாய்த் தடையுண்டுநின்ற வுயிர் - சிறைவிட் டலைகடலிற் சென்றடங்கு மாறுபோல்-எ-து-அவ்வணை முறிந்து தடைதீர்ந்த வழியிடை யிடின்றிக்கடலின் கண்முடுகிச் சென்றங்கேயா யதனுடன் சென்றடங்கி மறித்து வாராத வாற்றுநீர் போல - சிறைசெய் புலனுணர்விற்றீர்ந்து-எ-து-கருவிகளாகிய பாசஞானத் தடையினின்று நீங்கியவழி - உலைவிலரன் பாதத்தை யுற்று மீளாது-எ-து-தனக்குக் கேடில்லாத சிவபிரானது திருவடியைத் தலைக்கூடி யத்திருவடி நிறைவேயா யதன்கணடங்கிப் பின்பு மீளுதல்செய்யாதென்றவாறு.

"சிறைசெய்யநின்ற செழும்புனலினுள்ளம்" என்றது தொகையுவமம். இன் உவமவுருபு. தேக்கத்தின் மிகுதியுணர்த்துவார் செழும்புனலென்றார். மலசத்திக்குக் கேடின்மையின், அதனைத் தலைப்பட்ட வுயிர்க்குக் கருவிகளின்மீட்சி கூடும், சிவசத்திக்கு அஃதின்மையின், அதனைத்தலைப்பட்டவுயி ரவ்வாறு மீளுதற்கோரியை யில்லையென்பார், உலைவிலரன் பாதமென விசேடித்தார். அடங்குமென்னு முவமவினை பொருளினும், மீளாதென்னும் பொருள் வினை - உவமையினுஞ் சென்றியைந்தன.

வெண்பா.

எவ்வுருவுந்தானென்னி னெய்துவாரில்லைதா ... *
னிவ்வுருவின்வேறே லிறையல்ல-வெவ்வுருவுங் ... *
கண்போலவயவங்கள் காணுவக்கண்ணில்லார் ... *
கண்பேறேகாணக் கழல். ... ... ... ... (அ)

எவ்வுரு - கழல்-எ-து-உ-ம்-எ-னின், மீளாதென்று விடுத்தல் வேண்டாம், எல்லாஞ் சிவமேயாகக் கண்டார்க்கு மீண்டாலென்

மீளாக்காலென், என்னுஞ் சிவாத்துவித சைவரைநோக்கி, அதுவிடை யாதற் சேலாமைகூறி மறுத்து, மீளாமையை வலியுறுத்துத னுதலிற்று.

(இ-ள்.) எவ்வுயிருந் தானென்னி னெய்துவாரில்லைதாள்-எ-து- உயிருணர்வேயன்றிப் புலனுணர்வுஞ் சிவமேயாமாயின், விசேடமின்மையால், புலன்வழியொழுகுஞ் சகலநிலையைக் கைவிட்டுத் திருவடியைக் கூடவேண்டாமையி னொருவருமதனை யெய்துவாரில்லையாய் முடிந்து, பாசத்தைப் பசுக்கள் விட்டுப் பதிதனையடைய முத்தியென்னும் வேதாகமங்கள் போலியாய் முடியும் - இவ்வுருவின் வேறேலிறையல்லன்-எ-து-அதுபற்றி முதல்வன் புலனுணர்வோ டியைபின்றியதனின் வேறாய் நிற்பனென்னின், அப்புலனுணர்விற் கவனாலாகற்பாலதொன்றின் மையினவனுணைக்கிறைவனல்லனெனப்பட்டுமுதன்மைக் கிழுக்காய் முடியும், மற்றென்னையோ வதனியல்பென்னின், எவ்வுருவும்-எ-து-உயிருணர்வுபோலப் புலனுணர்வுங் கலப்பினாற்சிவமேயாயினு மிரண்டுந் தம்முளொப்பனவல்ல - கண்போலவயவங்கள் காணு-எ-து-உயிராம் பொறிகளானு மொப்பநிற்பினும், அவற்றுண் மெய் வாய் மூக்குச் செவி நான்கும், கண்ணிந்திரிய மொளியா னவ்வான்ம போதத்தோடு விரவிச்சேய்மைக் கண்ணதாகிய விடயத்தையும் வியாபித்தறியு மாறுபோல வியாபித்தறிய மாட்டாவாய்த் தம்மாட்டுவந்த விடயங்களை நின்றாங்கு நின்றியைந்தறிதற் றன்மையவேயாம் - அக்கழல் கண்ணில்லார் கண்பேறேகாண்-எ-து-அக்கண்ணினது வெற்றிப்பாட்டைக் கணொளி யிழந்தாரது கண்பேற்றின் கட்கண்டறிவாயாக வென்றவாறு.

கண்ணும் அவயவங்களும் ஆகுபெயர். கண்பேறேயென வேழாவது தொகுத்தேகாரம் விரித்தார். கழலணிவார்க்குளதாகிய வெற்றிப்பாட்டைக் கழலென்றுபசரித்தார். கழல் - சாலணிமணிவடம். ஈண்டு வெற்றி யாவதேனைநான்கிந்திரியங்களையு நோக்கி மேம்படுதல். கண்போலவயவங்கள் காணு வக்கண்ணில்லார் கண்பேறே. காணக்கழலென்பது- முதல்வனிரண்டினு மொப்பவிரவி நிற்பினு முயிருணர்வுபோலப் புலனுணர்வு வியாபக விளக்கமாதலின்றி யேகதேச விளக்கமாம்; உயிருணர்விற்குளதாகியவம் மேம்பாடவ்வியாபகவுணர்வையிழந்த பசு

த்துவமுடையார் மாட்டறியப்படாதாயினுமவரது பசுத்துவநீக்கிய சிவப்பேற்றின்க ணறியப்படுமென்பதுதோன்ற நின்றமையின், இஃதொட்டென்னுமலங்காரம். சிவமாயவழியும் புலனுணர்வேகதேச விளக்கமாவதின்றி யுயிருணர்வுபோல வியாபக விளக்கமாதலில்லையெனவேயதன்கண் மீளுதலிழுக்கென்பது பெறப்பட்டது. இதற்கும் பிறசொல்லா மியைபின்றியுரைத்தார்.

வெண்பா.

ஐம்பொறியினல்லையெனுமந்த்தரசிவனை ... ... *
யைம்பொறியைவிட்டங்கணைசகல - னைம்பொறியி *
னீங்கானீர்ப்பாசிபோனீங்குமலகன்மம்வரி ... *
னீங்கானைநீங்குநினைந்து. ... ... ... ... (கூ)

ஐம்பொறி - நினைந்து-எ-து-உ-ம்-எ-னின், சிறைவிட்டவழியலை கடலிற் சென்றடங்குதலேயன்றி, யாற்றுலைகடற்கேபாய்ந்த நீரவ்யாற்றான் மறித்தலுமுண்மையின், அதுபோலவரன் பாதத்தையுற்றவுயிருக்கொரோவழி மீட்சியுமுண்டென்பது பெறப்படுதலான், அவ்வழிமீளாமை செல்லாதென்பாரைநோக்கி, அம்மீட்சிக்குக் காரணமிதுவென்பதூஉம், அதனைநீக்குதற்குபாயமுங் கூறிவலியுறுத்துதனுதலிற்று.

(இ-ள்,) ஐம்பொறியினல்லையெனு மந்தரா-எ-து-ஐம்பொறிகள்போலவேக தேசவிளக்கமுடையாயல்லை யென்றறிவுறுக்கப்படுஞ் சித்தாந்த மகாவாக்கியத்தைப்பெற்றுடைய மாணவகனே - அங்கைம்பொறியைவிட்டுச் சிவனையணை சகலனைம்பொறியினீங்கான் - எ-து-சிறைவிட்டலை கடலிற்சென்றடங்கு மாறுபோலென மேற்கூறியவாறேயைம்பொறிகளானுய புலனுணர்விற்றீர்ந்து சிவன்றிருவடியையுற்றசகலன் ஐம்பொறிகளான் மீளவதனைநீங்குவானல்லன் - நீர்ப்பாசிபோனீங்குமலகன்மம்வரி னீங்கானைநீங்குநினைந்து-எ-து- கல்லெறியும்வழிநீங்கியதுவிடும் வழிப்பரக்குநீர்ப்பாசிபோல, முதல்வன்றிருவடியையுற்றவழிநீங்கு வனவாகியமலமாயை கன்மங்களொரோவழி வாசனைவயத்தான் மீளவரின், தன்னைவிட்டுநீங்காத முதல்வனைமுன்னர்க்கூறப்படு முபாயங்களினின்று சிந்தித்தவற்றை நீக்கிக்கொள்ளுமென்றவாறு.

வரினென்றதனால் வருதலொருதலையன்று வாசனையுள்வழியே யென்பதுபெற்றாம். நீங்கியென்பது பாடமாயினீங்கினவாகியமலகன் மமெனப்பெயராக வைத்துரைக்க. சித்தாந்தத்தை அந்தமென்றது தலைக்குறை. தாம்அதன்கண்ணதாய்ச்சிறந்த வொருவார்த்தை. அங்குமேற்கூறியபடி. ஐம்பொறியைவிட் டணைதற்குரியானிவனென்பது ணர்த்துவார் சகலனென்றார். நீக்குமென்னுமகரஞ் சந்திநோக்கிக் கெட்டது. நீங்கெனவேபாடங்கொண்டு, அணையெனவேறுபிரித்து முன்னிலையேவலாக்கி, அதற்சேற்பநீங்காயெனப் பாடந்திரித்துரைப் பாருமுளர். மேற்கூறியமீளாமையை வலியுறுத்துவார் "ஐம்பொறியி னல்லையெனுமந்தர சிவனையைம்பொறியை விட்டணங்கணைசகலனைம் பொறியினீங்கான்," என்றும்,"ஓரோவழியுளதாமாயினதற்குக் காரண மிஃதென்பார் நீர்ப்பாசிபோனீங்கு மலகன்மம் வரினென்றும், அது நீங்குதற்குபாயங்கூறுவார் நீங்கானைநினைந்து நீங்குமென்றுங்கூறினா ர். மலகன்மமெனவே, இனம்பற்றிமாயையுங் கொள்ளப்பட்டது''மங் கலமென்பமனை மாட்சிமற்றதன்ன் கலனன்மக்கட்பேறு," என்றாற் போல, நீங்கானைநீங்குநினைந்தென்றதனால், வருகின்றசூத்திரத்துக்கு த்தோற்றுவாய் செய்ததுமாயிற்று. இம்மூன்றுதாரணங்களுமுறையே திருவடிஞானத்தைப்பெற்ற வுயிர்புலனுணர்வின் மீட்லில்லையெனவும், மீட்டெழுக்காமெனவும், ஓரோவழிப்பயிற் சிவயத்தான்மீளவருமாயின் மீளாதவாறுசெய்து கொள்ளற்பாற்றெனவுங்கூறி, தாய்தனையேயா மென்னுமேகாரப்பொருளை வலியுறுத்தியொரு பொருண்மேல்வந்த வாறுகாண்க. எட்டாஞ் சூத்திரமுடிந்தது.

---

# ஒன்பதாஞ்சூத்திரம்.

ஊனக்கண்பாச முணராப்பதியை ... ... *
ஞானக்கண்ணினிற் சிந்தைநாடி ... ... ...*
யுராத்துனைத்தேர்த்தெனப் பாசமொருவத்தண்
ணிழலாம்பதிவிதி யெண்ணுமஞ்செழுத்தே...*

எ-து-எ-னின், ஆன்மசுத்திபண்ணுமா றுணர்த்துதனுதலிற்று.

எ-து-க-ரை-எ-னின், சூத்திரக்கருத்துணர்த்துதனுதலிற்று.

(இ-ள்) தம்முதல்குருவுமா யுணர்த்தக்கேட்டதனை, சிந்தைசெய் துணருமாறுணர்த்துமுகத்தான், ஐம்புலவேடரின் வளர்ந்தவாலாணவம நீக்கி, உயிர்தன்னைத் தூய்மைப்படுத்துவானுணர்த்துதல் இவ்வொன் பதாஞ்சூத்திரத்தின் கருத்தென்றவாறு.

சூத்திரவியைபு மிதனானே யினிதுவிளங்கும். சிவப்பிரகாசத் துத் தான்பணியைநீத்தலென் ருேதப்படு மான்மசுத்தியாவது-இறை பணிநிற்கவென வருகின்ற சூத்திரத்திற்பெறற்பாலதாகலானும், அழு க்குநீக்கமே யறுவைக்குச்சுத்தியாமாறுபோலப் பாசக்ஷயமே யுயிர்க் குச் சுத்தியாவதன்றி வேறன்மையானும், பாசக்ஷயம்பண்ணு முன்னா ரச்சுத்தியாதல் கூடாமையானும், வருகின்ற சூத்திரத்தின் கருத்தாய் நின்ற, ஆன்மசுத்திபண்ணுமாற்றை, பதியைநாடி யென்புழித்தண்ணி மூலாம் பதியெனவுஞ் சிவதரிசனம்பண்ணுமாறே யுணர்த்துதற்கெ ழுந்த விச்சூத்திரத்தின் கருத்தாகவைத் துரைத்ததென்னையோவென மலையற்க; சிவதரிசனத்தினிகழ்வ தான்மசுத்தியென்னுமுடனிகழ்ச்சி யுணர்த்துதற்கும், தம்முள்வேறுபாடு சிறுபான்மையுடையனவாய விவ்விருசூத்திரமு மொருபொருண்மேலனவென்ப துணர்த்துதற்கு, மிவ்வாறுரைத்தாராகலின், அஃதாங்ஙனமாக, ஆன்மாத்தன்னை யிந்தி ரியத்தின் வேருவான்காணவே, தமது மூதல்சீபாதத்தை யணையுமெ ன்றலின், அக்காட்சியேயதற்கமையுஞ் சுத்தியெற்றுக்கெனின், அஃ தொக்கும், நிருவிகற்பமாய்க்காண்டலும், இரட்டுறக்காண்டலும், தெ ளியக்காண்டலுமெனக் காட்சிமூவகைப்படும்; இம்மூன்று மதிபிரி பக்குவமுடையார்க்குக் கேட்டமாத்திரையே யொருங்கு நிகழுமாயி னும், ஏனையோர்க்குக் கேட்டல், சிந்தித்தல், தெளிதல்,என்னுஞ்சோ பானமுறையினன்றி நிகழாமையின், அவரைநோக்கி, சிவரூபத்தினி கழு மான்மதரிசனத்தின்பின்னாகச் சிவதரிசனத்தினிகழு மான்மசுத் தியுமொருதலையான் வேண்டப்படுமென் றுணர்ந்துகொள்க. "நேச மொடுந்திருவடிக்கீ ணீங்காதேதூங்கு நினைவுடையோர் நின்றிடுவர் நிலையதுவேயாக, வாசையொடுமங்குமிங்குமாகி யலமருவோரரும் பாசமறுக்கும் வகையருளின் வழியுரைப்பாம்" என வழிநூலாசிரிய ரு மிக்கருத்தேபற்றி யோதினர்.

இச்சூத்திரத்தின் பிண்டப்பொழிப்பு - குறையுணர்வாகிய பசுவறிவானுணரப்படாத முதல்வனை, அவனது திருவடிஞானத்தாற் றன்னறிவின்கண்ணே யாராய்ந்தறிக, அத்திருவடிஞானத்தா னிலமுதலாதமீறாகிய பாசக்கூட்டம் நின்றழிதலில்லாது பரந்துதிரிதற் கண்ணதிவேகமுடைய பேய்த்தேரினியல்பிற்றாய்க் கழிவதென்றறிந்து நீங்கவே, பிறவித்துயராகிய வெப்பத்துக்குக் குளிர்ந்தநிழலாய் வெளிப்பட்டுவிளங்கும்; அவ்வாறு பாசத்தையொருவி, ஞானத்தைப்பெற்று,ஞேயத்தைக்கண்ட காட்சிசலியாமைப்பொருட்டு, அப்பொருள் பயக்குந் திருவஞ்செழுத்து விதிப்படியறிந்து கணிக்கப்படுமென்றவாறு.

ஊனமென்பதப் பொருட்டாதல்" ஊனமேற் கிரியைவித்தை" என்பதனானறிக. "நன்றுமன்னிதுநாடாய்கூறி" என்றாற்போல, நாடியெனபது - இகரவீற்றுமுன்னிலையேவல். உராத்துனே - ஏழாம்வேற்றுமைத்தொகை. உராவென்பது - முதனிலைத்தொழிற்பெயர்." பறவாக்குளவி" பாயாவேங்கை, என்றாற்போல. ஒருவரானூரப்படாத வேகத்தையுடையதேரெனச் செயப்படுபொருட்கண் வந்தபெயரெச்சமறைபாகக்கொண்டுறைதது,"திருத்தார்நன்றென்றேன்றியேன்" என்றாற்போல, உராவென்பது - குறுக்கல்விகாரமென்பாருமுளர். பின்வந்தபிறிதுஆகுபெயர். இதனுள் "ஊனக்கண்பாச முணராப்பதியைஞானக்கண்ணினிற் சிந்தைநாடி" என்றதோரதிகரணம்; உராத்துனேத்தேர்த்தெனப் பாசமொருவத்தண்ணிழலாம்பதி" என்றதோரதிகரணம், விதியெண்ணு மஞ்செழுத்தே" என்றதோ ரதிகரணம்; ஆகமூன்றதிகரணத்ததிச் சூத்திரமென்றுணர்க.

---

## முதலதிகரணம்.

---

ஈண்டும்முதலே ஞானக்கண்ணினாலே காண்கவென்றது-எ-து-மே-ள்-எ-னின்,மேலைச்சூத்திரத்தோதியவாற்றான் முதல்வன்பாசவறிவானட்ப் படுவானல்லனாயினும். பசுவறிவானட்ப்படுவனென்றற்கிழுக்கென்னையென, சிவசமவாதசைவர்மதம்பற்றி நிகழுங்கடாவையாசங்கித்து, சூத்திரத்தின்முற்கூற்றைக் கண்ணழித்துரைத்து, மேற்கோட்னுதலிற்று.

(இ-ள்) வெ-டை.

ஏகாரம்-தேற்றம்.

அவன்வாக்குமனாதீதகோசரமாய்நிற்றலான்-எ-து-ஏது-எ-னின், ஏனைஞானங்களானறியப்படாது சிவஞானத்தானறியப்படு மென்றற்குப்பிரமாணமென்னை யென்பாரைநோக்கி, மேற்கோளைச்சாதித்தனுதலிற்று.

இதன்பொருள்-வாக்குமனாதீதகோசரமாய் நின்றவதுவேயென் புழியுரைத்தாம். ஆண்டிப்பொதுவகையாற் புறப்பட்டதனையீண்டேதுவாகவைத்து, வாக்குமனாதீதமாயுங் கோசரமாதல் பிறிதொன்றாற் பெறப்படாதென்னு மருத்தாபத்தியால், ஞானக்கண்ணாற்காணபபடு மென்பது தாமேபோதருமென மேற்கோளைச்சாதித்தார்.

வெண்பா.

நாடியோவென்போநரம்புசீக்கோழையோ ... *
தேடியெனையறியேன்றேர்ந்தவவை - நாடியான் ...*
றன்னாலேதன்னையுங்கண்டுதமைக்காணு ... ... *
ரென்னுமெனவறிவாரின்று. ... ... ... ... (க)

நாடி-இன்று-எ-து-உ-ம்-எ-னின், கோசரமாதல் பிறிதொன்றாற் பெறப்படாதென்றதென்னை, பசுத்துவநீங்கிய வழிச்சுட்டிறந்தறிவதாகியவுயிருணர்வு திருவடிஞானத்தோ டொப்பதாகலினதன்கட் கோசரமாதலமைவுடைத்துப் போலுமென்பாரைநோக்கி, அவ்வுணர்வுவிளங்குமாறுணர்த்து முகத்தான்அவரை மறுத்தேதுப்பொருளை வலியுறுத் துதனுதலிற்று.

(இ-ள்.) நாடியோவென்போ நரம்புசீக்கோழையோ. தேடியெனையறியேன்றேர்ந்தவவைநாடி - எ - து - நாடிமுதலியவற்றுள்யான் யார் என்னைத்தேடியுமறிகின்றிலே னென்றிவ்வாறு தேர்கின்றதேர்ச்சியறிவின்கண்ணேயிதனைத் தெளிவிப்பதோரறிவு வேறுண்டெனவாராய்ந்து நோக்கி - அரன்றன்னாலே தன்னையுங்கண்டு தமைககாணார்- எ-து-அவ்வாறுநாடுங்கால் விளங்கித்தோன்றுவதாகிய முதல்வனது திருவடிஞானத்தான் முதல்வனையுமுணர்ந்து முதல்வனின் வியாப்பி

யமாய்நின்று அங்ஙனமறியும் பொருளாகிய தங்களையு முணர்தலைச் செய்யார் - என்றுமெனவறிவாரின்று-எ-து - மற்றெவ்வியல்பினவொன்று தம்மையறியவல்லுவரிம் மூத்திக்காலத் தென்றவாறு.

நாடியென்றது இடைபிங்கலை முதலியவற்றை-நரம்பெனவே யடங்குமெனுந் தலைமைபற்றி வேறுகூறினார். சீ-புண்ணீர். கோழை-ஐ ஓகாரந்-தெரிநிலை. ஒன்றென்பது-சொல்லெச்சம் அவை- ஆகுபெயர். ஒற்றுமைபற்றி ஆன்மஞானத்தை யரனென்றுபசரித்தார். உம்மை-எதிரதுதழீஇயிற்று. எவனென்னும் வினாவினைக்குறிப்புப்பெயர் ஈண்டாகுபெயரா யென்னெனமரீஇயிற்று. ஆம்-அசை. நாடியோவென்போ நரம்புசீக்கோழையோவென்ற வுபலக்கணத்தால், ஏனைத்தத்துவதாத்துவிகங்களினு மவ்வாறுதெரிதல் கொள்ளப்படும். இது தம்மையறியுமா றுணர்த்துமுகத்தானே, தலைவனையறிந்தபின் னறியப்படுவதாகிய தம்மறிவுகொண்டு தலைவனையறியுமாறி யாண்டையதெனமறுத்து வலியுறுத்தவாறுகாண்க.

வெண்பா.

காட்டியகண்ணே தனைக்காணுகண்ணுக்குக் ... ...*
காட்டாயவுள்ளத்தைக்கண்காணு - காட்டிய ... *
வுள்ளந்தனைக்காணு வுள்ளத்தின்கண்ணாப ... ...*
கள்வன்றனுள்ளத்திற்காண் ... ... ... ...(உ)

காட்டிய-காண் - எ-து-உ-ம்-எ-னின், எதிர்முகத்தொருபொருளைக் கண்டகண்ணே, மறித்துநோக்கியவழி, வெளிப்புறத்துப்பொருளையுங் காணவல்லும், அதுபோல அங்ஙனந் தோர்ந்தறிதலைச்செய்தவுயிரோதெளிந்தறிதலையுஞ் செய்யவல்லுமென வமையுமென்பாரை நோக்கி, அதனது மாட்டாமையைவிளக்கி, அரன்றன்னலேகாண்டலை வலியுறுத்துதனுதலிற்று.

(இ-ள்.) காட்டியகண்ணேதனைக்காணு - எ-து- உயிராற்காட்டப்பட் டொருவிடயத்தைக்காண்கின்ற கண்ணானது தன்னியல்பைக் காணமாட்டாது-கண்ணுக்குக்காட்டாய வுள்ளத்தைக்கண்காணு- எ-து-தனக்கவ்விடயத்தைக்காணபித்து முதலாய்நிற்குமுயிரையு மதுகாணமாட்டாது-காட்டியவுள்ளந்தனைக்காணு-எ-து - அதுபோல முதல்வ

ளுல்மறைந்துநின் றுணர்த்தப்பட் டொன்றனைத் தோர்ந்துணர்கின்ற வுயிரவ்வாறே தன்னியல்பையு மறியமாட்டாது தன்னை யுணர்த்தி நிற்கு முதல்வனையுமறியமாட்டாது - உள்ளத்தின்கண்ணுய கள்வன் ருன்-எ-து-அத்தோர்ச்சியறிவின் கண்ணுருடனுய் நிற்குங்கள்வன் அம்முதல்வனுகலானே-உள்ளத்திற்காண்-எ-து-அவனை யவ்வறிவின்கண் வைத்துநாடித் தெளிவாயாகவென்றவாறு.

இது சொற்பொருட்பின்வருநிலை. ஏகாரமசைநிலை. "முறைகாக்குமுட்டாச்செயின்"என்றாற்போலக் காணுமென்னுந் துவ்விறுவிகாரத்தாற்றொக்கது. பின்வந்தவுள்ள மீண்டுத்தோர்ச்சி யறிவின்மேற்று. உள்ளத்தின்கண்ணுமென்னுஞ் சிறப்பும்மை விகாரத்தாற்றொக்கது தோன்றாது நிற்றல்பற்றிக் கள்வனென்றார். கள்வனென்றது - கண்ணுக்குயிர் மறைந்துநின்றே காட்டுவதாகலான், அது தன்னையு முயிரையுமறியமாட்டாவாயிற்று. அதுபோல,முதல்வனிதுகாறு மறைந்து நின்றே யுணர்த்துதலி னுயிர்தன்னையு முதல்வனையு மறியமாட்டாதாயிற்றென்பது படநின்ற குறிப்புமொழி. உள்ளத்திற்காணவல்லார்க்கு அக்கள்ளந்தீர்தலிற் றம்மையுமுதல்வனையுங் காண்டல்கூடுமென்பதாம். "கள்ளமொடில்லமுடையார் கலந்திடில் வெள்ளவெளியாமென்றுந்தீபற" என்றது மிக்கருத்தேநோக்கி. கண்ணுக்குக்காட்டாய வுள்ளத்தைக் கண்காணுமெவன வுவமைக்கோதியவாறு பொருளினும் வருவித்துரைத்துக்கொள்க. இஃதெடுத்துக்காட்டுவமை.

---

## இரண்டாமதிகரணம்

---

இனியசத்தாயுள்ளவன்ன பேதங்களையசத்தெனறு காணவுளதாய்நிற்பதுஞான சொரூபமென்றுணரற் பாற்று-எ-து-மே-ள்-எ-னின், அம்முதலைஞானக்கண்ணாலே காண்கவென்றுணர்த்தியவழி, அந்தஞானக்கண்ணைப் பெறுமாறியாங்ஙனமென நிகழுமவாய்நிலையை நீக்குதற்பொருட்டு மேலதற்கோர் புறனடையா யெழுந்தவிச் சூத்திரத்தினிரண்டாங் கூற்றைக் கண்ணழித் துரைத்து மேற்கோட்ணுதலிற்று.

(இ-ள்.) வெ-டை.

பாசமொருவத்தண்ணிழலாம் பதியென்புழிப்பாசமென்றது காரியப்பிரபஞ்சத்தையென்பார் அசத்தாயுள்ளவென்றும், சொற்பல்காமைப்பொருட் டேதுப்பொருளை யுருவகமுகத்தா னுடம்பொடுபுணர்த்துக்காட்டுவார் பிரபஞ்சத்தையென்றது வன்னபேதங்களையென்றும், வியாபகப்பொருளுக் கொருவுதலாவ துணர்ச்சிவிசேடமேயாமென்பார் அசத்தென்றொழியவென்றது காணவென்றும், தண்ணிழலாய்நிற்றல் பதிதன்றென்பார் உளதாய்நிற்பதென்றும், பதியென்றதாகுபெயராற் பதிஞானத்தின் மேனின்றதென்பார் ஞானசொரூபமென்றும், இஃதநுபவத்தினன்றிச் சொல்லளவைக்கு னறியவாராதென்பார் உணரற்பாற்றென்று முரைத்தார்.

இஃதேகதேசவுருவகம். இதனுட்பெறப்படு மேதுப்பொருளையேனையவற்றுட்போல மேற்கோளின் வேறுவைத்துக்காணுமாறு; இனியசத்தாயுள்ள பிரபஞ்சத்தை யசத்தென்று காணவுளதாய்நிற்பது ஞானசொரூபமென்றது-வேற்றியல்பாகிய வன்னபேதங்களை வேற்றியல்பென்று கண்டொழிப்பி னுளதாய்நிற்பது படிகசொரூபமாந் துணையான் எனவரும்.

(இ-ள்) படிகசொரூபத்தைக்காட்டாது மறைத்துநின்ற வேற்றுநிறங்களை அவைநிலையுதலில்லனவாகிய வேற்றுநிறங்களெனக்கண்டு நிற்பினவ்வழி நிலையுதலுடைத்தாய் விளங்கிநிற்பது பளிங்கினதுசொரூபமாமென்னு மொப்புமையான், நிலையுதலுடைய தற்சொரூபத்தைக்காட்டாது மறைத்துநிற்கும் நிலையுதலிலவாயுள்ள பிரபஞ்சத்தை யிவைநிலையுதலுடையனவல்லவென்று விவேகித்தறியின் அங்ஙனநிராலம்பமேயாய் விளக்கித் தோன்றுவது ஞானசொரூபமென மேற்கொண்டதென்றவாறு. வன்னபேதமாவது- சித்திரமெனக்கொண்டு சீவர்மேல்வைத்துணர்தலுமொன்று. அசத்தாயுள்ள பிரபஞ்சத்தையசத்தென்று காண்டலாவது - ஆசிரியனறிவுறுத்தவுபதேசப்பொருளினுணர்த்துநின்று, "அட்டகுணமெட்டுச் சித்திக்கோகனகன்முதல்வாழ்வுகுலவு பதமெல்லாம் வெறுத்து, நெறியறுவகைமேலொடுகிழடங்கக்காரண ரூபத்தினில்லாமையால் வெறும்பொய்யெனநினைந்திருத்தல்.

வெண்பா.

நிர்க்குணனாய்நின்மலனாய்நித்தியானந்தனாய்த் ... *
தற்பரமாய்நின்றதனிமுதல்வ - னற்புதம்போ ...*
லானாவறிவாயளவிறந்துதோன்றானே ... ... *
வானேமுதல்களையின்வந்து... ... ... ... (௩)

நிர்க்கு-வந்துஎ-து-உ-ம்-எ-னின், அசத்தையசத்தென்று கண்டொருவிய வழித்தோன்றுவது சூனியமேயன்றிப் பிறிதில்லைபோலு மென்பாரைநோக்கி, ஞானசொரூபத்தினியல்புகூறி யதனை வலியுறுத் துதனுதலிற்று.

(இ-ள்) நிர்க்குணனாய்- எ-து-அசுத்தப்பிரபஞ்சம்போல முக்கு ணரூபமாயளவிட்டறியப்படுவானுமல்லனாய்- நின்மலனாய்-எ-து-முக் குணங்களைக்கடந்த மிச்சிரப்பிரபஞ்சம்போல மலகன்மகாரியரூபமா யறியப்படுவானுமல்லனாய்-நித்தியானந்தனாய் - எ-து-மலகன்மங்களை யுங்கடந்த சுத்தப்பிரபஞ்சம்போல வநித்தியானந்தரூபனா யறியப்ப டுவானுமல்லனாய் - தற்பரமாய் - எ - து - இம்மூன்றனோடுங்கூடிய பொதுவியல்புபற்றியவ்வாறுணரப்படு முயிர்போலன்றியதற்குமேலா ய்-நின்றதனிமுதல்வன்-எ-து-இவ்வாறு நிற்றலானென்றனியல்புபற்றி யறியப்படாத தனிமுதலாகியவிறைவன்-வானேமுதல்களையின்-எ-து- ஆகாசமுதலிய வசத்தையசத்தென்று கண்டொருவியவழி-அளவிற ந்து அற்புதம்போல்வந்து-எ-து-பயின்றறிந்துவருந் தனதுசுட்டறிவி னளவினைக்கடத்தலா னின்னதென்றறியவாராத சூனியப்பொருள் போலத்தோன்றி-ஆனாவறிவாய்த்தோன்றானே - எ-து-பின்னர்ச்சுட்டி றந்தறியுந் தன்னறிவின்கணீங்காது நிலைபெறுவதாய்ச் சோதிக்குட் சோதியாய்விளங்கித் தோன்றான்கொல்லோவென்றவாறு.

தற்பரம்-தனக்குப்பரமெனவிரியும். தன்னென்றதுயிரை. அற் புதமீண்டுச் சூனியத்தின்மேற்று. முதற்கட்சூனியமாய்த் தோன்றி னுஞ் சூனியமன்றென்பார் அற்புதம்போல் வந்தென்றார். ஆனாமை- நீங்காமை. ஓகாரம்-எதிர்மறை. ஏகாரம்-அசைநிலை. வானேமுத லெனவே, தோற்றமுறைபற்றி வான்முதலாகிய வேனைத்தத்துவங் களுமடங்கும். நிர்க்குணனாய்நின்மலனாய் நித்தியானந்தனாய்த் தற்ப ரமாயென்புழியாக்கச் சொல்லுண்மை குறித்துநின்றது வடமொழிம

தம். அறிவாகியென்புழி யாக்கம்வேறுபாடு குறித்துநின்றது. ஒற்றுமைபற்றி முதல்வனது ஞானத்தைமுதல்வனென் றுபசரித்தார்.

வெண்பா.

சுட்டியுணர்வதனைச்சுட்டியசத்தென்னச் ... ...*
சட்டவினியுள்ளதுசத்தேகாண் - சுட்டி ... ... *
யுணர்ந்தநீசத்தல்லையுண்மையைத்தைவம் ... ...*
புணர்ந்ததனாற்பொய்விட்டுப்போம் ... ... ..(௪)

சுட்டி-போம்-எ-து-உ-ம்-எ-னின், வானேமுதல்களைந்தவழி அங்ஙனந்தோன்றுவதும் வேறொன்றெனக்கோடும் ஞானசொரூபமென்றற்குப் பிரமாணமென்னை யென்பாரைநோக்கி, அதனை வலியுறுத்துதனுதலிற்று.

(இ-ள்.) சுட்டியுணர்வதனைச் சுட்டியசத்தென்ன-எ-து-ஏகதேசவுணர்வாற் சுட்டியுணரப்படுவதாயபிரபஞ்சத்தை மேற்கூறியவாறே யொரோவொன்றாகச் சுட்டியசத்தென்று கண்டுகழித்துக்கொண்டு சென்றவழி - இனிச்சட்டவுள்ளது சத்தேகாண்-எ-து-முடிவின்கட்செம்மையேகோசரமாவதியா தஃதவ்வசத்தின்வேறாகியசத்தேயாமதனையறிவாயாக-அற்றேலசத்தின்வேறா யங்ஙனந்தோன்றுஞ் சத்தாவது பிறிதியாதெனவமையுமெனில்,- சுட்டியுணர்ந்தநீசத்தல்லை - எ - து- இதுகாறுமசத்தோடுகூடிச் சுட்டியறிந்துவந்த நீயசத்தின்வேறா யங்ஙனந்தோன்றுஞ் சத்தாவாயல்லை-அற்றேலிச்சுட்டுணர்வெனக்கு நீங்குவதின்றுபோலுமெனின்,- உண்மையைத்தைவம்புணர்ந்து - எ-து- அசத்தின்வயப்பட்டுநின்று சுட்டியறிந்துவந்த நீயதனையொழிந் தங்ஙனந்தோன்றிய சத்தின்வயத்தினையா யதனைப்புணர்ந்தால் - அதனாற் பொய்விட்டுப்போம்-எ-து-அப்புணர்ச்சியானே சுட்டுணர்வாகிய வப்பொதுவியல்பு நின்னைவிட்டு நீங்குமென்றவாறு.

என்னவென்றதுபசாரவழக்கு. சட்டவென்பது செப்பமுணர்த்திநிற்பதோ ரகரவீற்றிடைச்சொல். அதுசட்டமெனவிழிவழக்கின் மகரவீறாய்மரீஇயிற்று. அசத்தைப்பிரித்தமையி னேகாரம் பிரிநிலைக்கண்வந்தது. உண்மைசத்துஎன்பன வொருபொருட்கிளவி. தைவமாயென வாக்கச்சொல் வருவித்துரைக்க. புணர்ந்தாலென்பது புணர்ந்தெனத் திரிந்தது. உண்மைக்குத்தைவமாதல் புணரினெனவுரு

மயக்கமாகக்கொண் டொழிப்பினுமமையும். பற்றறக்கழிந்தொழியுமெ ன்பார் விடுமென்றுரிவிட்டுப் போமென்றார்.

வெண்பா.

கண்டதையன்றன் றெனவிட்டுக்கண்டசத்தா ...
யண்டனையான்மாவினுய்ந் துணரப்-பண்டணைந்த...
வூனத்தைத்தான்விடுமா றுத்தமனிற்றெண்கருட
சானத்திற்றீர்விடம்போற்றான். ... ... ... (ரு)

கண்ட - தான் - எ - து - உ - ம் - எ - னின், அசத்தை யசத்தென்று க ண்டொழியுமாறும், ஒழிந்த வழியுண்மையைத் தைவம்புணருமாறும், புணர்ந்தவழியதனாற் பொய்விட்டுப்போமாறும், யாங்ஙனமென்பாரை நோக்கி, அவற்றைத் தெரித்துணர்த்தியதனைவலியுறுத்துதனுதலிற்று.

(இ-ள்,) கண்டதை யன்றன்றெனக்கண்ட சத்தாய்விட்டு-எ-து- சுட்டியுணரப்பட்ட பிரபஞ்சத்தை யிதுசத்தன் றிதுசத்தன்றென்றுரை ரோ வொன்றாகவைத்து நோக்கி யசத்தென்றொழித்து - ஆன்மாவின ண்டனையாய்ந்து-எ-து-அவ்வாறுகண்டொழிந்த தன்னறிவின்கண்ணே சுட்டுணர்வின்றி நின்ற கடவுளை யாராய்ந்து-உணர-எ-து-சோகமெண ப்பாவிப்பனாயின் - உத்தமனிற்பண்டணைந்த வூனத்தைத் தான்விடு மாறு-எ-து-அப்பாவகத்தா னத்துவிதமாய் விளங்கித் தோன்றுமுதல் வனுலநாதியாய்க் கூடிநின்ற பொதுவியல்பைத் தானவிட்டு நீங்குமா று - ஒண்கருடசானத்திற் றீர்விடம்போற்றான்-எ-து-ஒள்ளியகருடத் தியானத்தில்விளங்கித் தோன்றுங் கருடனு லப்பாவகன் விடத்தைத் தீர்த்துக்கொள்ளு மாறுபோலா மென்றவாறு.

தானென்பது முன்னையதெழுவாய்-பின்னையதசை. சானம்-பா கதச்சிதைவு. கருடத்தியான மாவதியாதெனிற் கூறுதும்; ஆதிபௌ திகம், ஆதிதைவிகம், ஆதியான்மிகம், எனக்கருடன் மூவகைப்படும். பொருடோறு மிவ்வாறு கண்டுகொள்க. அவற்று ளுலகத்திற் காண ப்படுங் கருடனாதி பௌதிககருடன், அதற்கதிதெய்வமான மந்திரமா தி தெய்விககருடன், அம்மந்திரமிடமாகநின்று மாந்திரிகனுக்குப் பய ன்கொடுப்பதாகியசிவசத்தி ஆதியான்மிக கருடனெனப்படும்; அம்மூ ன்றனுளீண்டுக் கருடனென்றது - கருடனுக் கதிதெய்வமாய் மாந்திரி

கனுள்ளத்தினதுபோல் வைத்துத் தியானஞ்செய்து கணிக்கப்படு மந்திரரூபமாகிய வாதிதெய்வீக கருடனை. அதனைப்பாவித்தலாவது- நாடோறும் பயின்றுவந்த பயிற்சி விசேடத்தா லம்மந்திரரூபமே தானு னவனன்னிய பாவனைசெய்து தன்னறிவதன் வயத்ததாம் படியுறைத்து நிற்றல், அவ்வாறுநின்ற மந்திரக் கண்கொண்டு பார்ப்பவேயஃதவ் விட வேகத்தைமாற்றுத லொருதலையாகலி னப்பாவனை யீண்டைக்கு வமையாயிற்று. புள்விலங்கு மரமுதலிய வற்றுக்கெல்லா மதிதெய்வ மந்திரமுளவென்பதூஉம், மந்திரங்களைக் கணிப்பான் படிகம்போல மந்திரசொரூபியாவ னென்பதூஉம், சர்வஞானோத்தர முதலியவற்று ட்காண்க. இதனானே கருடபாவனை யசத்தியமென்பார் மதம்போலியாயவாறுமுணர்க. அல்லதூஉம், பாவனைபோலியாய வழியதுபயன் றருமாறி யாண்டையதென்றொழிக.

---

## மூன்றுமதிகரணம்.

---

இனி யிவ்விடத்து ஸ்ரீபஞ்சாக்கரத்தை விதிப்படி யுச்சரிக்க வென்றது-எ-து-மே-ல்-எ-னின், ஆன்மாவைச் சுத்திபண்ணுதற்குப் பாசமொருவியவழித் தண்ணிழலாய்ப் பிரகாசித்த ஞானசொரூபமொன்றே யமையுமாகலி னிவ்விடத்தி லினிச்செய்யக் கடவதொன்றில்லை யென்பாரை நோக்கி, சூத்திரத்தின் மூன்றுங்கூற்றைக் கண்ணழித்துரைத்து, மேற்கோடனுதலிற்று.

(இ-ள்) பாசமொருவியாண்டுத் தண்ணிழலாய்ப் பிரகாசித்த ஞானக்கண்ணாற் பதியிற் சிந்தைநாடிய பின்னரவ்விடத்துத்திரு வஞ்செழுத்தையும் விதிப்படி கணிக்கவென மேற்கொண்ட தென்றவாறு,

இறந்தது தழீஇய வெச்சவும்மை விகாரத்தாற்றொக்கது. அற்றாகவினன்றே பின்னும் "ஓசைதரு மஞ்செழுத்தை விதிப்படி யுச்சரிக்க" என்றார் வழிநூலாசிரியருமென்க. ஈண்டு ஸ்ரீபஞ்சாக்கரத்தை யென்றது முத்தி பஞ்சாக்கரத்தை. திருவஞ்செழுத்தாற் சாதிக்கப்படும் பொருளு மதுவேயாகலான் வேறுவகுத்துக் கூறவேண்டாமையின் விதிப்படியென மாட்டெறிந்தொழிந்தார். இவ்வாசிரியர் மாட்

டெரிந்ததூஉ முணராதார் சாதித்து நிற்குமுறைவேறே ஓதுமுறை வேறே, எனச் சித்தாந்த வழக்கொடு முரணிக்கூறுவர். நிற்குமுறையு மோதுமுறையுந் தம்முளியைபில்வழியஃதகற்குச் சாதனமாமாறியா ண்டையதென்றொழிக. மானதம்,மந்தம்,உரை' எனக்கணிக்குமாறுமூ வகைப்படும், அவற்றுட் சுத்தமானத மெனப்படு மறிவாற் கணித்த லே யீண்டுச்சரித்தலென்பார் சூக்கிரத்து ளுச்சரிக்கவென்னு தெண் ணுகவென்றார். வடமொழிச் சூத்திரத்துத் தியானிக்கவென்றதூஉம து - இன்னு மிதன்கட்படு மியல்பெலலாம் உண்மைவிளக்கம். சிவப் பிரகாசம், திருவருட்பயன், கொடிப்பாட்டு நெஞ்சுவிடுதூது, முதலி யவற்றுட்காண்க. ஈண்டுவிரிப்பிற் பெருகும்.

இனி யிவ்வான்மாக்களுக்கு ஞானம் பிரகாசித்து மஞ்ஞானத்தை வேம்புதின்ற புழுப்போல நோக்கிற்றை நோக்கி நிற்குமாதலினது நீக் குதற்கெனக்கொள்க-எ-து-ஏது-எ-னின், அந்தரங்கவழிபாடாகலினசி ந்திதனுய் நின்றபதியைச் சிந்திதனுய்க்கண்டுவழிபடுமாற்றைச்சாரவை த்தோதற் பாலதாயே யிதனைச் சித்தசாதனமாயீண்டுவிதித்தலெற்றுக் கென்யாரைநோக்கி, மேற்கோளைச்சாதித்த னுதலிற்று.

(இ-ள்.) வேம்புதின்ற புழுவதனை யொருவிக்கரும்பைத் தலைப்ப ட்ட தன்சுவைதெரிந்துழியும் பயிற்சி வயத்தானோக்கிற்றை நோக்கி நி ற்குமாறுபோல, அசத்தாயுள்ள வன்னபேதங்களை யசத்தென்று க ண்டவுயிர்களுக்கதனுன் ஞானசொரூபம் விளங்கி ஞேயங்காட்சிப்பட் டவிடத்தும் அவைபயிற்சி வயத்தாற் பண்டைச் சிற்றுணர்வை நோ க்கி நிற்குமாகலி னவ்வாறதனை நீக்குதற்பொருட் டீண்டைக்கு வேண் டப்படுதலானினி ஸ்ரீபஞ்சாக்கரத்தை விதிப்படி யிவ்விடத்துச்சரிக்க வெனமேற் கொண்டதெனக்கொள்க வென்றவாறு.

இவ்விடத் தென்றதனு லணைந்தோர் தன்மையைச் சாரவைத்து மேற்கோடற்குரிய ஸ்ரீபஞ்சாக்கரத்தை யெனவருவித்துரைத்துக்கொ ள்க. எனக்கொள்கவென் றுடம்படுப்பித்ததும் அதுபற்றி.இக்கருத்து நோக்கி யன்றே புடைநூலாசிரியர் அஞ்செழுத்தருணிலையை யான் மலாபத்தின்பின்னுக அணைந்தோர் தன்மையைச் சாரவைத்தோதிய தூஉமெனக்கொள்க. வானேக்கி வாழுங்கோனேக்கி வாழுமென்றாற் போல வீண்டுநோக்கென்றது மனவெழுச்சி விசேடத்தை. பிரகாசித்

தவழியென்பது பிரகாசித்தெனத் திரிந்தது. ஈண்டுஞானமென்றது அசத்தை யசத்தென்றுகண்டவழி விளங்குவதெனப்பட்ட ஞானசொரூபத்தை; அஞ்ஞானமென்றது அதற்கு மறுதலையாகிய சுட்டுணர்வையெனவுணர்க. அது நீக்குதற்கெனக் கொள்கவெனவே, சித்தசாதன மன்றென்பது வருவிக்கப்பட்டது.

வெண்பா.

அஞ்செழுத்தா லுள்ள மரனுடைமைகண்டரனை ...*
யஞ்செழுத்தாலர்ச்சித் திதயத்தி-லஞ்செழுத்தாற் *
குண்டலியிற்செய்தோமங் கோதண்டஞ்சானிக்கி...*
லண்டனுஞ்சேட னமக்கு. ... ... ... .. (௬)

அஞ்செழுத்து-அங்கு-எ-து-உ-ம்-எ-னின், இஃதவ்வாசனையை நீக்குதற்குச் சாதகமாமாறியாங்ஙன மென்பாரைநோக்கி, அஃதாமாறுகூறி, ஏதுவை வலியுறுத்துதனுதலிற்று.

(இ-ள்.) உள்ளமரனுடைமை யஞ்செழுத்தாற்கண்டு-எ-து-உயிர் சிவனுக்குடைமையாதலை யஞ்செழுத்தையுச்சரிக்குமுறையில்வைத்துநோக்கி-இதயத்திலரனை யஞ்செழுத்தாலர்ச்சித்து- எ-து-தன்னுடம்பகத்தே யிதயமுந்தி புருவநடுவென்னு மூன்றனையுமுறையே பூசைத்தானம், ஓமத்தானம், தியானத்தானமாகக்கருதிக்கொண்டு, புறம்பே ஞானபூசைசெய்யுமுறைப்படி, இதயபங்கயத்தி லவ்வஞ்செழுத்தாலமைந்த திருமேனியில் 'அம்முதல்வனை, கொல்லாமை,ஐம்பொறியடக்கல், பொறை, அருள், அறிவு, வாய்மை, தவம், அன்பு, என்னும் அட்டபுட்பங்கொண் டம்மநுவாலர்ச்சனைசெய்து-அஞ்செழுத்தாற் குண்டலியிலோமஞ்செய்து-எ-து-அத்திருமந்திரத்தானே குண்டலித்தானமான புந்தியில் ஞானவனலையெழுப்பி யதன்கண் விந்துத்தானக்கமிழ்தமாகிய நெய்யைச்சுழுமுனை நாடியிடைநாடியாகிய சுருக்குச்சுருவங்களாலோமித்து- கோதண்டஞ்சானிக்கில்-எ-து-விந்துத்தானமாகிய புருவநடுவிற் சிகரயகரவகரங்கண் மூன்றுமுறையே தற்பதப்பொருளுந் துவம்பதப்பொருளு மசிபதப்பொருளுமா முறைமைநோக்கி யதனாற் சிவோகம்பாவனை செய்வனாயின்-அங்கண்டனுஞ்சேடனும்-எ-து-அப்பாவனைக்கண்விளங்கித் தோன்றுவன் அப்பாவகனவனுக்குச் செடசெடிபாவகத்தா லடிமையாவனென்றவாறு.

ஒழித்தலுங்கியானித்தலும் பூசைக்கங்கமெனவறிக. ஞானசொரூபம் விளங்கிபவழியும் பரிற்சிவயத்தானேகதேசப்பட்டுப் புறத்திற்செல்லநோக்குவதாயதன்னறிவை யங்ஙனமாகாதவாறுமடக்கி யகத்தேயொருகுய்யின்கணிறுத்தி நிட்டைகூடும்படி யஞ்செழுத்தோதுமுறையில் வைத்துக்கண்டு சிந்திக்கச்சிந்திக்க வஃதந்நோக்கத்தைப் பற்றறக்கெடுத்து ஞானசொரூபத்தை யினிதுவிளக்கிப் பூரணநிலையிற்கொண்டு செலுத்துமாகலி னிஃதீண்டைக்குச் சிறந்தசாதகமாயிற்றென்பது.

வெண்பா.

இந்துவிற்பானுவிராகுவைக்கண்டாங்குச் ... ...*
சிந்தையிற்காணிற்சிவன்கண்ணு - முந்தவே ... *
காட்டாகித்தோன்றிக்கனல்சேரிரும்பென்ன... ...*
வாட்டாணுமோதஞ்செழுத்து ... ... ... (எ)

இந்து-எழுத்து - எ-து-உ-ம்-எ-னின், அங்ஙனமொருகுயின் வந்தன்றி முதல்வனைக்காண்டல் செல்லாதவாறும் அவ்வாறு கண்டவழி முதல்வன்றன்மாட்டு விளங்கித்தோன்றுமாறும், தோன்றியவழித்தா னம்முதல்வனுக் கடிமையாமாறு முவமையில்வைத்துணர்த்தி, அதனை வலியுறுத்துதனுதலிற்று.

(இ-ள்.) இராகுவை யிந்துவிற்பானுவிற் கண்டாங்கு- எ-து-அந்தரத்தியங்கு நவக்கோள்களு ளேனையபோலக் காணப்படாத விராகுக்கேதுக்களை யுபராகத்திற் சந்திராதித்தர் மாட்டுக்கண்டாற்போல-சிந்தையிற்காணில்-எ-து-முப்பொருள்களுள் யானிதனை யறிந்தேனறிகின்றிலேனென்னு முணர்விற்குவிடயமாகிய பசுபாசங்களேபோலப்ப வேறுணரப்படாதமுதல்வனைத் தன்னிதயபங்கயத்தி னஞ்செழுத்தின் முறையின்வைத்துக் காணுமாயின்-முந்தவேகாட்டாகிச் சிவன்றோன்றிக்கண்ணும்-எ-து-கோலைநட்டுக் கயிற்றிலுற்சுற்றிக்கடையவே காட்டத்தினின்று அங்கிதோன்று மாறுபோலவம்முதல்வனுண்டுத் தோன்றி யறிவுக்கறிவாய் விளங்கிநிற்பன்-தானுங்கனல்சேரிரும்பென்ன ஆளாம்-எ-து-அப்பொழுதுதானு மெரிசேர்ந்த விரும்புபோலத்தனது சுதந்திரத்தைவிட் டம்முதல்வனுக்கடிமையாம் - ஓதஞ்செழுத்து-எ-து - ஆகலா னத்திருவஞ்செழுத்தை விதிப்படியோதுவாயாகவென்றவாறு.

கேதுச்சா யாக்கிரகமாகலின் வேறுகூறாராயினார். கண்ணறிவு தோன்றியாமெனவிளையும் தோன்றுதலீண்டுக் கடைதன்மேற்று. காட்டாகி வடமொழிச்சிதைவு. இன்-உவமவுருபு, ஈண்டுமோதஞ் செழுத்தென்றது வலியுறுத்தியவாறு.

வெண்பா.

மண்முதனுளமலர்வித்தைகலாரூப ... ... ...*
மெண்ணியவீசர்சதாசிவமு - நண்ணிற் ... ... *
கலையுருவாநாதமாஞ்சத்தியதன்கண்ணு ... ...*
நிலையிலாமச்சிவன்றானோர் ... ... ... ...(அ)

மண்முதல்-னோ-எ-து-உ-ம் - எ-னின், தத்துவமுப்பத்தாறுக்கு மேற்பட்ட முதல்வனை யிதயபங்கயத்திற் கண்டர்ச்சிக்குமாறி யாங்ஙனமென்பாரைநோக்கி, அவ்விதயபங்கயத்தினியல்புணர்த்தி, அதனை வலியுறுத்துதனுதலிற்று.

(இ-ள்.) நண்ணில்-எ-து-அவ்விதயபங்கயத்தினியல்பை யறியப் புகின்- மண்முதனுளம்-எ-து- நிலமுதலியவிருபத்து நான்குதத்துவ முமுங்கியினின்றுந்தோன்றி யெண்விரலளவாயுள்ள நாளவடிவாம்-வித்தைமலர்-எ-து - வித்தியாதத்துவங்களேழுஞ் சுத்தவித்தையுமென்னு மெட்டுத்தத்துவமு மெட்டிதழ்வடிவாம்-எண்ணியவீசர் சதாசிவமுங் கலாரூபம்-எ-து-அத்தத்துவங்களுக்கு மேலாகக் கருதப்பட்ட வீசுரஞ் சதாசிவமென்னு மிரண்டுதத்துவமு மறுபத்துநான்கெனப் படுங் கேசரவடிவமாம் - சத்திகலையுருவாம் - எ - து-சத்திதத்துவம் அக்கேசரங்களுக்குள்ளாகிய பொகுட்டுவடிவாம் - நாதமதன்கண்ணும்-எ-து-சிவதத்துவம் அப்பொகுட்டிற் காணப்படுமைம்பத்தொருபீஜவடிவாம் - அதிலச் சிவன்றாணிலையாம்-எ-து-ஆகலானவ்வியல்பிற்றாகிய விகயபங்கயத்தின் முப்பத்தாறு தத்துவமு மாசனமாக வுடையவச்சிவனது சத்திநிலைபெறும் - னோ-எ-து-அதனையறிந்து திருவஞ்செழுத்தா லர்ச்சிப்பாயாக வென்றவாறு.

இதனானே யண்டபிண்ட மவைசமமாதலாற் புறத்துக்காணப்படு முப்பத்தாறு தத்துவமும் அகத்தினிற் சூக்குமமா யுண்டென்பதுகாட்டி, முதல்வனுக்கிங்கிலையே யங்கிலையெனத் தெளிவித்தவாறு. வித்தையென்ப திரட்டுற மொழிதலா னவ்வாறுரைக்கப்பட்டது. சிவஞா

னசித்தியில், "மூட்டுமோகினி சுத்தவித்தை மலமொட்டாய்" என்புழிமோகினியென்றதூஉம், ஆகுபெயரான தன்காரியமாயகலாதிகளின் மேனின்றது. இவ்வாறன்றி நிலமுதலிய முப்பத்தொரு தத்துவமெனப்படும் எட்டுக்கொத்தும், எண்விரனுள வடிவும், அசுத்தமாயாதத்துவமும், நாளத்துக்கு மலருக்கு நடுக்கண்டமாகிய கிரந்திவடிவும், அதற்குமேற் சுத்தவித்தையின் வாமைமுதலிய வெட்டுமெட்டிதழ் வடிவமென்றுரைப்பாரும், முப்பத்தொன்றுக்குமே லசுத்தமாயை கிரந்தியின்சதனம், சுத்தமாயை யூர்த்துவச்சதனம், அதற்குமேலீசுர தத்துவத்திலனந்தன் முதலியவெட்டுமெட்டிதழ்வடிவம், சதாசிவதத்துவமொன்றுங் கேசரவடிவமெனக் கொண்டதற்கியையக் கொண்டு கூட்டியுரைப்பாரும்; கலாரூபமென்றது பஞ்சகலைகளை யெனவும் அஃதியாண்டுங் கூட்டியுரைக்கப்படுமெனவுங்கொண்டு, மண்முதனுளமலமொன்பதற்கு, மண்ணுநிவிர்த்திகலாரூப நாளமுமண்ணேமுதலாகவுடையவிருபத்து மூன்றுதத்துவமாகிய பிரதிட்டாகலாரூபமலருமாமெனவும், வித்தையெண்ணிய வீசர்சதாசிவமும் கலையுருவாமென்பதற்கு, வித்தியாதத்துவமாகிய வித்தியாகலாரூபங்கலையெனப்படுங்கேசரமும், சுத்தவித்தையோடுகூடி யெண்ணப்பட்ட வீசுரதத்துவமுஞ் சதாசிவதத்துவமுமாகிய சாந்தியாதீத கலாரூபம்பொகுட்டின்கண்ணுகியபீஜமுமாமெனவு முரைப்பாருமுளர். இவையெல்லாம் அவ்வவவாகமபேதம் பற்றிக்கொள்ளப்படும் கலையறுபத்துநான்காகலான் அறுபத்துநான்காகிய கேசரங்களுக்குத்தொகை பற்றிக்கூறப்படுமாருபெயராயிற்று. ஈசர் ஆகுபெயர், கலையுரு - கலைக்குள்ளுரு வெனவுள்ளுருபு விரித்துரைக்க. அதில்என்புழி அன்சாரியை விகாரத்தாற்றொக்கது. இதுநாளமுதலாகமே னோக்கித்தோன்று முலகத்துக்சமலம்போலாது கண்முதலாகக் கீழ்நோக்கித்தோன்றிய தோர்திப்பியகமலமெனக்கொள்க. சிவன்றுளதினிலையாமெனவே, சிவன்சத்திக்குமேலாய் நிற்பனென்பதூஉம் பெறப்படும். ஒன்பதாஞ்சூத்திர முடிந்தது.

---

# பத்தாஞ்சூத்திரம்.

அவனேதானேயாகியவந்நெறி ... ... *
யேகனாகியிறைபணிநிற்க ... ... ... *
மலமாயைதன்னொடுவல்வினையின்றே... ... *

எ-னின், பாசக்ஷயம் பண்ணு மாறுணர்த்துத லுதலிற்று.

எ-து-கரு-எ-னின், சூத்திரக் கருத்துணர்த்துத லுதலிற்று.

(இ-ள்) மேலேழாஞ் சூத்திரமுதலிய மூன்றானுமுறையே சாதிக்கும்பொருளியல்பும், சாதித்துப்பெறப்படும் பொருளியல்பும், சாதிக்குமாறுமுணர்த்தி, இனியச்சாதகத்தானாய பயனியல்புவகுத்துக்கூறுவானெடுத்துக்கொண்டார்; அப்பயனாவது பாசவீடுஞ்சிவப்பேறும் எனவிருவகைப்படும்; அவ்விரண்டனுள்; சுட்டுணர்வினாகிய வேகதேச நோக்கத்தைத் திருவஞ்செழுத்தினதுச் சரிப்பாற்பற்றறத் துடைத்த வழிப்பெறப்படுவதாய் மேலைச்சூத்திரத்தினெடுத்துக் கொண்ட வான்மசுத்திப்பயனாகிய பாசவிமோசனத்தைச்செய்து கொள்ளுமாறும், மேற்சிந்தனைசெய்த பொருளைத்தெளியுமாறு முணர்த்துமுகத்தா னுணர்த்துதலிப் பத்தாஞ்சூத்திரத்தின் கருத்தென்றவாறு.

இதனானே சூத்திரவியையுமினிது விளங்கும்.

இச்சூத்திரத்தின் பிண்டப்பொழிப்பு - ஞானக்கண்ணாற் காணப்பட்ட வம்முதல்வன்றானுடனாய் நின்றறியவும், வேறுகாணப்படுமாறின்றி, அவ்வனொடொற்றுமைப்பட்டவ் விறைபணியின் வழுவாதுநிற்பின், மலமாயையென்னு மிரண்டனொடுவலியகன்மமலமு மில்லையாயொழியுமென்றவாறு.

அவனேதானே யென்னுமேகார மிரண்டனுள்; முன்னையது பிரிநிலைக்கண்ணும் பின்னையதுதேற்றத்தின் கண்ணும்வந்தன. நெறியும்வடிவுருவும் மலமாயையொடு கூடியவினையென்றாராகலின் இன்றேயென்றார். உவமைக்கோதியது பொருளினும், பொருளுக்கோதியதுவமையினுஞ் சென்றியைந்தன. ஈண்டொற்றுமைப் படுதலாவது

குடமுடைந்தவழிக் குடாகாயமு மாகாயமும்போலவொருபொருளா யொற்றுமைப்படுதலோ, அன்றிக்குற்றியை மகனென்பதுபோலத் திரிவுக் காட்சியானொற்றுமைப்படுதலோ, அன்றிமண்ணே குடமென் பதுபோலவொன்று திரிந்தொன்றா யொற்றுமைப்படுதலோ. அன்றி வெள்ளையுந் தாமரையும்போலக் குணகுணித்தன்மையா லொற்று மைப்படுதலோ, அல்லதுதீயுமிரும்பும் போலவொன்றி னொன்று விரவுதலா லொற்றுமைப்படுதலோ, அன்றிப்பாலுநீரும்போலப்பிரிக் கப்படாதசையோகத்தா லொற்றுமைப்படுதலோ, அன்றிக்கருடனு மாந்திரிகனும்போலப் பாவனைமாத்திரையா னொற்றுமைப்படுதலோ, அல்லதுகாய்ந்தவிரும்பினீர்போல வொன்றினொன்றிலயமா யொற்று மைப்படுதலோ, அல்லதுபேயும் பேய்பிடியுண்டவனும்போலவாவே சத்தாலொற்றுமைப்படுதலோ, அல்லதிந்தனத்தினெரிபோல விளங் காமையா லொற்றுமைப்படுதலோ, அல்லதுஞாயிற்றி னொளியின்வி ளக்கொளிபோலச் சத்திகெட்டுநிற்றலா லொற்றுமைப் படுதலோ, அன்றித்தலைவனுந் தலைவியும்போல வின்பநுகர்ச்சி மாத்திரையா லொற்றுமைப்படுதலோ, அன்றிநட்டோரிருவர்போல நட்புமிகுதி யாலொற்றுமைப்படுதலோ, அன்றி ஆவுமாமாவும்போல வொப்பு மைமாத்திரையா லொற்றுமைப்படுதலோ, என்றவ்வவசமய வாதிக ள்மதம்பற்றிநிகழுமின்னோ ரன்னவையப் பாடுகளையெல்லா நீக்குதற் பொருட்டு" அவனேதானேயாகிய வந்நெறி,, எனவுவமையெடுத்துக் காட்டியோதினர். ஈண்டுக்கூறியவேற்றுமைக் கட்படுமியை பாவதெ ன்னையெனின், அதுவருகின்ற சூத்திரத்திற்பெறப்படும். இதனுள் "அ வனேதானேயாகிய வந்நெறியேகனாகி" என்றதோரதிகரணம; "இறை பணிநிற்கமலமாயை தன்னொடு வல்வினையின்றே,, என்றதோரதிகர ணம்; ஆக விரண்டதிகரணத்ததிச் சூத்திரமென்றுணர்க.

---

## முதலதிகரணம்.

---

ஈண்டுப்பரமேச் சுரனிவ்வான் மாவாய்நின்ற முறைமையாலவ னிடத்தேகனாகிநிற்க வென்றது-எ-து-மே-ள்-எ-னின், ஞானம்பிர காசித்து முதற்பொருளைக் காண்டன்மாத்திரையே வீடுபேற்றிற்கமையு மெனச் சிவசமவாதசைவர் முதலியோர்மதம்பற்றி நிகழுங்கடாவை

யாசங்கித்து, சூத்திரத்தின் முதற்கூற்றைக்கண்ணழித்துரைத்து,மேற்கோட்னுதலிற்று.

(இ-ள்) வெ-டை.

அவ்வாறு நிற்கவேயானென தென்னுஞ் செருக்கற்றவனதுசிபாதத்தை யணையுமாகலான் - எ-து-ஏது-எ-னின், அஃதெற்றுக்கென்பாரைநோக்கி மேற்கோளைச் சாதித்தனுதலிற்று.

(இ-ள்.) அங்ஙனமொற்றுமைப்பட்டு நின்றாலே யானுமெனது மெனப்பகுத்து நிற்குமயக்க வுணர்வுக்கேதுவாய மலநீங்கி, அம்முதல்வனது திருவடியாகிய சிவானந்தத்தைப் பெறுமாகலான், அச்செருக்கறுதிக்குக் காரணமாதல் பற்றி ஈண்டுப்பரமேச்சுர னிவ்வான்மாவாய்நின்ற முறைமையாலவனிடத்தேகமாகி நிற்கவெனமேற்கொண்டதென்றவாறு.

அவ்வாறுநில்லாத வழிமலமறாது; அஃதறாத வழிச்சீபாதத்தை யணைதல் பெறப்படாதென்பார் நிற்கவேயெனத் தேற்றேகாரத்தாற் கூறினார். யானெனப்படுவது ஞாதுரு, எனதெனப்படுவன ஞான ஞேயங்கள். ஆறாவது பண்பின்கிழமையு முணர்ச்சிக்கிழமையும்பற்றி வந்தது. ஒருமை தனித்தனி சென்றியையும். செருக்கு-ஆகுபெயர். அற்றணையுமென்றது மழைபெய்து குளநிறையுமென்றாற்போலக் காரணகாரியப் பொருள்பற்றிவந்த செயவெனெச்சத்திரிவு.

வெண்பா.

நானவனென்றெண்ணினர்க்கு நாடுளமுண்டாத *
றானெனவொன்றின்றியே தானதுவாய்-நானெனவொன்
றில்லெனறுதானேயெனுமவரைத்தன்னடிவைத் ...*
தில்லென்றுதானிறை. ... ... ... ... (௧)

நானவன்-இறை- எ-து-உ-ம்-எ-னின், அங்ஙனம் பகுத்துநின்றுணருமுணர்வை மயக்கவுணர்வென்றதென்னை யென்பாரைநோக்கி ஏதுவை வலியுறுத்துதனுதலிற்று.

(இ - ள்) நானவனென்றெண்ணினர்க்கு நாடுமுளமுண்டாதலு னென வொன்றின்றியே தானதுவாய்-எ-து-நானென்றுமவனென்றும் ஞாதுருஞேயங்களைப் பகுத்துணர்ந்து நிற்பார்களும் யானேயெனநிற் பார்க்கும்போல அவ்வாறெண்ணுகின்ற வுயிருணர்வுமுனைத்துத்தோ ன்றுமாகலான், அவ்வழித்தானென்றொரு முதல்காணப்படுமாறின்றித் தானவ்வுணர்வேயாய்-நானென வொன்றில்லை யாறு தானேயெனு மவ னைத் தன்னடிவைத்திலனென்று தானுமிறை - எ - து-இனியானென் றொரு முதல்காணப்படுமா றில்லையென்றுணர்ந்து முழுவதுந் தானே யெனக்காணுந் தெளிவுடையானாத தனது திருவடிவியாபகத்து ளட ங்கிநிற்கச்செய் தவ்வாறேயாவன் முதல்வனென்றவாறு.

ஆய்-ஆமெனவினையும். ஆயாமென்புழிச் செய்தெனெச்சம்-நள் ளார்க்குநஞ்சொத்து நட்டார்ககமிழ்தொக்கு மிவனென்றாற்போலத் தன்வினையாத லுணரநின்றது. நாடுமுளமுள்வழித்தானிலனாகலும், அஃதில்வழிதகானுளனாதலும் யாங்ஙனம்பெறுதுமெனிற்காட்டுதும்; தூலவொளியாகிய கண்ணொளியுஞ் சூக்குமவொளியாகிய விளக்கொ ளியு மத்துவிதமாய்க் கலந்துநிற்கு நிலையுற்றுநோக்க வல்லார்க்குப் பிரித்தறியவாராமையின், கண்ணொளியாய்க்காணுங்காற் காணுந்தன் மையே முனைத்துத்தோன்றுமாகலின், அவ்விளக்கொளி யிருந்துமில் லைத்தானே, அன்றி விளக்கொளியாய்க்காணுங்காற் காட்டுந்தன்மை யே முனைத்துத்தோன்றுமாகலின் அவ்வழிக் கண்ணொளியிருந்து மில் லைத்தானே; இனிக் கண்ணொளியும் விளக்கொளியுமெனப் பகுத்துக் காணப்புகினுங் காணுந்தன்மையே முற்படத்தோன்றுதலின், அவ் வழி விளக்கொளிபுலனாய்க் காட்சிப்படுவதல்லது தெளிவுபுலனாய்க் காட்சிப்படுமாறில்லை, அதுபோலத் தூலவறிவாகியவுயிருஞ் சூக்கும வறிவாகியசிவமு மத்துவிதமாய்க் கலந்துநிற்குநிலையும் பிரித்தறிய வாராமையின், ஆண்டுமிவ்வாறே கண்டுகொள்க. எண்ணினர்க்கு மென விறந்ததுதழீஇய வெச்சவும்மை சந்திநோக்கி மசரங்கெட்டு நின்றது. இக்கருத்தேபற்றியன்றே "கண்ணொளிவிளக்கின் சோதி கலந்திடுங்கருத்தொன்றன்றே" எனவும், "காண்பானுங்காட்டுவதுங் காண்பதுவு நீத்துண்மை-காண்பார்கணன்முத்திகாணார்கள் - காண்பா னுங்-காட்டுவதுங்காண்பதுவுந் தண்கடம்பைச்சம்பந்தன், வாட்டுநெ றிவாரார்தவர்" எனவும் கூறினர் புடைநூலாசிரியரும். அற்றேலிவ் விரண்டனுள் யாதுதிரிவுக்காட்சி யாதுதெளிவுக்காட்சியெனில், கண

ணொளியொடுகூடியவழியு மிதுவிளக்கொளி யிதுஞாயிற்றினொளி யிது திங்களினொளியென வவ்வப்பெற்றியவேயாய்க் காணப்படும் விளக்கொளிமுதலியவற்றின்காட்சி தெளிவுகாட்சியெனவும், அவ்வொளிகளோடுகூடியவழி யவ்வாறொரு பெற்றித்தாய்க்காணப்படாத கண்ணொளியைவேறுகாண்ட பிரிவுகாட்சியெனவுங் கண்கூடாகவிளங்கக்கிடத்தலி னிவ்வாறே பொருளினும்வைத் துணர்ந்துகொள்க. இவ்வாறன்றி, விளக்கொளிமுன்னர்க்கண்ணொளிசத்தி மடங்கிப்போதலின் அதுவிளக்கொளியைப்போலக் காட்சிப்புலனாகாதாயிற்றென்னாமோவெனின், என்னும்· என்னை, கண்ணொளிசத்திமடங்கிற்றாயின் விளக்கொளி காட்சிப்புலனாதல் பிறிதொன்றாற் பெறப்படாமையின்; அற்றேல், மின்மினித்துணையாயினுந் தானேவிளங்கு மியல்பில்லாதகண்ணுக்கொளிக்குண முண்டென்பதற்குப் பிரமாணமென்னையெனின், அறியாதுகடாயினாய், ஆகாயத்தின்கண்ணதாகியசத்தகுணம் வியஞ்சகத்தானன்றித் தினைத்துணையானும் தானெனவிளங்குமா றின்மையின், அதுபற்றி யெதிரொலிவடிவாயவோசையை யாகாயத்தின்குணமன்று வியஞ்சகப்பொருளின் குணமாமென்பார் யாருமில்லை, அதுபோலக் கண்ணின்கண்ணதாகியவொளியும் வியஞ்சகமுள்வழி விளங்கி யல்லுழிவிளங்காமைமாத்திரையே பிறிதில்லையாகலான், அதனைக் கண்ணின்குணமன்றென்றலறி வில்லார்கூற்றேயாமெனவும், அக்கண்ணொளியாவது தன்னைவிளக்குதற்குரிய வியஞ்சகப்பொரு ளேகதேசமாயி னேகதேசமாய்விளங்கியும், வியாபகமாய் விளங்கியுநிற்பதோரியல்பிற்றெனவுமுணர்க. அஃதாங்ஙனமாக; "கண்ணொளிவிளக்கின் சோதிகலந்திடும" என்றற்குப் பிரமாணமென்னை, ஒருவிடயத்தின்வீழ்ந்த பலகண்ணொளிகட்குத் தம்மு ளியைபில்லாதவாறுபோல, ஒருவயிற்பட்ட கண்ணொளி விளக்கொளிகட்குத் தம்மு ளியைபில்லையென்றலே பொருத்தமுடைத்துப்போலுமெனின், அஃதறியாதார் கூற்றேயாமென்றொழிக. என்னை, ஒருவிடயத்தின்வீழ்ந்த கண்ணொளிகடம்முளொன்றனையொன்று காணுமாறுமில்லைக் காட்டுமாறுமில்லையாகலா னவைதம்முட்கலத்தற்கோ ரியைபின்றென்பதொக்கும். அவ்வாறன்றி, கண்விளக்கினைக்காண்டலும் விளக்குக்கண்ணுக்குக்காட்டலுமாகிய வியைபுண்மையானும், இவ்வியைபு தம்முட்பெறப்படாத கண்ணொளிமுதலாயினவீண்டைக்குவமையாதல்செல்லாமையானும், இந்திரியங்கடத்தம் விடயத்தோடியைபன்றிச் சந்நிதிமாத்திரையா

னவற்றையறிதல் செல்லாதென்பதாகமங்களுக்கெல்லாந் துணிபாக லானும் அத்தன்மையவாய கண்ணொளிவிளக்கொளிகட்குத் தம்முட் கலப்பில்லையென்றல் காண்டல்விரோதமாகலி னிவ்வாறுவமைக்கோதி யனவெல்லாம் பொருட்கண்ணுமாமாறுணர்ந் துய்த்துணாத்துக்கொள் க. அற்றேல், ஈண்டெடுத்துக்காட்டிய கண்கடம்முளொன்றனையொன்று காணுமாயின்மைபோல வுயிர்களுந் தம்முளொன்றனையொன் றறியு மாறில்லைபோலுமெனின், அறியாதுகூறினாய், கண்கடம்முளொன்றொ னென்று காணப்படுமாறில்லையென்றது விளக்கும்விடயமுங் காண ப்படுமாறுபோல வேறியைந்து தனிப்பொருளாய்க் காணப்படுமாறி ல்லையென்ற துணையேயன்றிப் பிறிதின்மையின், விளக்கொளியைக் கண்காணுங்காலதுவதுவாய்நின்று காணும்பெற்றித் தாய்த்தன்னையும் விளக்கொளிவண்ணமாய்க் காண்டலுண்டென்பது கண்கூடாகவறியக் கிடத்தலின், ஏனைக்கண்களையு மவ்வாறுகாண்டலமையுமாகலின், அது போலத்தம்முட் டனித்தியையில்லாத வுயிர்களுஞ் சிவத்தோடியை ந்துநின்று தம்மையும் பிறவுயிர்களையு மவ்வாறுணர்தலமையுமென் பது "நாடியரன்றன்னாலே தன்னையுங்கண்டு தமைக்காணுமொன்னுமெ னவறிவார்" எ-ம், "தன்னாலேதன்னையறிந்தாற் றன்னையுந்தானேகாணுந் தானதுவாகிநின்று" எ-ம், "அதிலறிவடங்கி மன்னிடவியாபியாய வா ன்பயன்றோன்றும்" எ-ம், "என்னையுங்கண்டேன் பிறரையுங்கண்டே, னின்னிலையனைத்தையுங்கண்டேனென்னை, நின்னைக்காணுமாந்தர் தம் மையுங்காணுந் தன்மையோரே" எ-ம் பிறாண்டுமிவ்வாறோது மநுபவ முடையதேசிகர் திருவாக்குக்களானு முணர்ந்துகொள்க.

---

## இரண்டாமதிகரணம்.

---

இனியம்முதல்பணிவழாதுநிற்கவென்றது எ-து-மே-ன்-எ-னின் உடம்பு நிற்குங்காறுமது கொண்டவினைப்பயனு மதனையநுபவித்தற் குத் துணைக்காரணமா யுடனிற்குமுயற்சியு மொருவாற்றானு நீக்க லாகாமையின், அவையவ்வழியேகனுகி நிற்றற்குத்தடையாதலைக் கட் க்கு மாறில்லைபோலுமெனச் சுத்தசைவரீறாயினார் மதம்பற்றிநிகழுங் கடாவை யாசங்கித்து, சூத்திரத்தி னிரண்டாங்கூற்றைக் கண்ணழித்து ணாத்து மேற்கோடனுதலிற்று.

(இ-ள்.) வெ-டை.

நிற்றலாவது சலிபாமனிலே பெறுதலென்பார் வழுவாதென்றுரைத்தார். ஈண்டிறைபணி யென்றதியாதெனின், அஃதாசிரியர்தாமுன்னர்த் தெரித்துரைக்கின்றமையி னினிதுவிளங்கும்.

அவனருளா லல்லதொன்றையுஞ் செய்யாதுகவேயஞ்ஞானகன்மம்பிரவேசியாவாகலான் - எ - து-ஏது-எ-னின், ஏகனாகிநிற்றலேயமையுமிறைபணி நிற்றலெற்றுக்கென்பாரை நோக்கி, மேற்கோளைச்சாதித்தனுதலிற்று.

(இ-ள்.) தன்செய்திக்கு முதல்வன்செய்தி யின்றியமையாதவான்மாச்செய்வன வெல்லாமவனருளின் வழிநின்றுசெய்யுமாயின் மாயேயமுங்கன்மமும் ஏகனாகிநிற்றற்குத்தடையாய் வந்துதாக்காவாகலான், அவைதாக்காமைப்பொருட்டுச் செய்யப்படு முபாயமாதல்பற்றி, இனி யிறை பணிவழாது நிற்கவென மேற்கொண்டதென்றவாறு.

அஞ்ஞானகன்மம் உம்மைத்தொகை. மலமுண்டாதன்மேற்பெறப்பட்டமையினீண் டஞ்ஞானமென்றது மாயையின் காரியமாகிய மயக்கத்தையென்பது பெற்றும். உடம்புநசிக்குமளவும் அவைமாய்வின்மையின், அறுமென்னுது பிரவேசியாவெனஞர்.

வெண்பா.

நாமல்லவிந்திரியம்நம்வழியினல்லவழி ... ... *
நாமல்லநாமுமரனுடைமை - யாமென்னி ... ...*
னெத்தனுவினின்றுமிறைபணியார்க்கில்லைவினை... *
முற்செய்வினையுந்தருவான்முன் ... ... ... (உ)

நாமல்ல-முன்-எ-து-உ-ம்-எ-னின்' உடம்பொடுநிற்பார் நுகர்தற்குவேண்டப்படும் பிராரத்தவினையும், அதுபற்றி யேறுமாகாமியவினையும், ஒருதலையானுண்மையின், இறைபணிநிற்றல்பற்றி யவைபிரவேசியாவென்றலமை வுடைத்தன்றுபோலு மென்பாரைநோக்கி,ஏதுவைவலியுறுத்துதனுதலிற்று.

(இ-ள்,) நாமல்லவிந்திரியம் - எ-து-வினைகளைநுகர்தற்கு மீட்டுதற்குங் கருவியாகிய விந்திரியங்கள் மாயேயமாவனவன்றி நாமாவன

வுமல்ல-நம்வழியினல்ல-எ-து- அவைதொழிற்படுதலு முதல்வன்வய த்தானன்றி நம்வயத்தானல்ல - வழிநாமல்ல-எ-து- வினைநிகழ்ச்சிக்கு வாயிலாகியவிடயாதிகளும் அவ்விந்திரியங்கள்போல மாயேயமாவன வன்றி யாமாவனவல்ல-நாமுமரனுடைமை-எ-து-அவற்றோடியைந்து நின்று வினைகளையீட்டுதற்கு நுகர்தற்கும் வினைமுதலாகிய யாமும் ஞானச்செய்திகளை முதல்வன்விளக்கிய வழிவிளங்கி யல்லுழிவிளங் குமாறின்மையா னம்முதல்வன் வயத்தராவேமல்லது சுதந்திரராவே மல்லேம்-ஆமென்னில் - எ-து - என்றிங்ஙனம் பசுபாசங்களதியல் பையுள்ளவாறுணர்ந்து செய்வனவெல்லா மவனருளின்வழிநின்று செய்யுஞ்செயலாய்க் கண்டுகொண்டிருப்பராயின் - இறைபணியார்க் கெத்தநுவினின்றும் வினையில்லை - எ - து - இவ்வடிமைத்திறமு டையார் எவ்வுடம்பினின் றெவ்வினைகளைச்செய்யினு மவர்க்கவை பந்தமாதலில்லை-முற்செய்வினையுந்தருவான்முன்-எ-து - ஆகாமி யவினையை யவிஞுபாவமா யுடன்கொண்டுவருவதாகிய பிராரத்தவி னையுந் தன்னைக்கூட்டுவிக்குமுதல்வன் சந்நிதியினுடலூழாய்க் கழியு மென்றவாறு.

நம்வழியினல்லவென்பது வழியென்பதனோடு கூட்டியுரைத்துக் கொள்ளப்படும். மசுனன்று குற்றியென்றாற்போல- அன்மைச்சொற் றழுவும் பொருண்மேனின்றது, "அன்மைக்கிளவி வேறிடத்தானும்" என்பதோத்தாகலின். நின்றும்- உம்மைசிறப்பு. ஏனையும்மைகளிற ந்ததுதழீஇயின. சஞ்சிதவினை தீககைசெய்தமாத்திரையே யெரிசேர் ந்தவித்துப்போலக் கெட்டொழிதலி னீண்டுமுற்செய்வினையென்றது ஏற்புழிக்கோடலாற் பிராரத்தவினைமேற்றாயிற்று. தருதல் - இடவழு வமைதி. ஒழியுமென்பது - சொல்லெச்சம். உடம்பினுளாயென்ப தவாய்நிலையான் வந்தது.

வெண்பா.

சார்ந்தாரைக்காத்தறலைவர்கடனாதல் ... ... ...
சார்ந்தாரைக்காத்துஞ்சலமிலனாய்ச் - சார்ந்தடியார்
தாந்தானாய்ச்செய்துபிறர்தங்கள்வினைதான்கொடுத்தல்
ஆய்ந்தார்முன்செய்வினையுமாங்கு ... ... ...(௩)

சார்ந்தார்-ஆங்கு- எ-து-உ-ம்-எ-னின், இறைபணியார்க்குளவாகிய முற்செய்வினை யேனையோர்க்குப்போலன்றித் தருவான்முன்னையொழியுமாயின், அங்ஙனம் வேறுவகைப்படச்செய்யு முதல்வனடுவுநிலைமையின்றிக் கோட்டமுடையனெனப்பட்டு வழுவாம்போலுமென்பாரைநோக்கி, வழுவன்மைகூறி, அதனை வலியுறுத்துதனுதலிற்று.

(இ-ள்.) சார்ந்தாரைக்காத்த றலைவர்கடனாதல் சார்ந்தாரைக்காத்தும்-எ-து-தம்மாட்டடைக்கலமெனச் சார்ந்தாரையவர்க்குவரு மேதத்தைநீக்கிக் களைகணாய்நின்று காப்பதுதலைமைக்குணமுடையராயினார்க்குக் கடமையாகலான், முதல்வ னேனையோரையொழித்துத் தன்னைச்சார்ந்தாரை யங்ஙனம் பாதுகாப்பானாகியும்-சலமிலனாய் - எ-து-அது பற்றிக்கோட்டமுடையனல்லனாய் - சார்ந்தடியார்தாந்தானாய்ச்செய்து பிறர் தங்கள்வினைதான்கொடுத்தல்- எ-து - தன்னைச்சார்ந்து தன்னடித்தொழில்செய்வார் தன்போலாகாமியவினைத் தொடக்கிலராகச்செய்து பிறர்க்குவருமாகா மியவினையை யவர்க்குக்கொடுப்பனாகலான் - ஆய்ந்தார்முன் செய்வினையுமாங்கு - எ - து - அவ்விருதிறத்தோர்மாட்டு நுணுகிவந்து கூடுவதாயபிராரத்தவினையு மவ்வாறே செய்வோர் செய்திக்குத்தக்க பயனாயிருவேறுவகைப்படச் செய்வனென்றவாறு.

இறைபணியார்க்கில்லை முற்செய்வினையுந் தருவான்முன்னென்றதுபற்றியேனையோர்க்குரிய நியதிசெய்தூட்டி யிறைபணியார்க்குவினையினழுவச்செய்த லிறைவனுக்கு நடுவுநிலைமையன் றென்பாரைநோக்கி,அதனையுடம்பட்டேயமைதி கூறுவாராய், சார்ந்தாரைக்காத்தறலைவர்கடனெனப்பழமொழி யெடுத்துக்காட்டி, இஃதவ்வாறு நடுவன்மையுமன்றெனவறி வுறுத்துவார், சார்ந்தடியார் தாந்தானாய்ச்செய்துபிறர்தங்கள்வினை தான்கொடுத்தலென வேறுவமையெடுத்துக்காட்டினார்."சார்ந்தடியார் தாந்தானாய்ச்செய்து பிறர்தங்கள்வினைதான்கொடுத்த" லுண்டென்பதூஉமது-கோட்டமின்று நடுவுநிலைமையே

யாமென்பதூஉம் ஏனைச்சமயத்தார்க்கு மொப்பமுடிந்தமையின் அஃ தீண்டைக் குவமையாயிற்று. உம்மை சிறப்பின்கண்வந்தது. சலம்-வஞ்சனை; அஃதீண்டுக் கோட்டத்தின்மேனின்றது. சார்ந்தென்னும் வினையெச்சம் அடியாரென்னும் வினைக்குறிப்பு முற்றுப்பெயர்கொண்டது. சார்ந்தவென்னும் பெயரெச்சத்தகரம் திரிந்துமுடிந்த தெனினு மமையும். பின்வந்ததாமுந்தானும் அசை. ஆதல்கொடுத்தல் என்புழி ஆனுருபுவிரித்துரைக்க. தானுய்ச்செய்து என்புழிஆக்கம் உவமவுருபின் பொருள்குறித்து நின்றது. பிராரத்தவினை யதிருக்குமமாய் வருவதாகலின் அதனியல்பறிதலரிதென்பார், ஆய்ந்தார்முன்செய்வினையுமென்றார். உம்மைஇறந்தது தழீஇயிற்று. ஆர்வினைத்தொகை. ஆய்தலப்பொருட்டாதல்மேற் காட்டினும்.

வெண்பா.

இங்குளிவாங்குங்கலம்போலஞானிபான் ... ... *
முன்செய்வினைமாயைமூண்டிடினும் - பின்செய்வினை
மாயையுடனில்லாதுமற்றவன்றன்மெய்ப்பொருளே
யாய்வதனாலுணருமச்சு. ... ... ... ... ... *

இங்குளி-அச்சு-எ-து-உ-ம்- எ-னின், இறைபணி நிற்பார்க்குப் பிராரத்தவினை தாக்குதலுண்டென்பதற்கு, "தினைத்துணையேனும்பொறேன்றுயராக்கையின்றிண்வலையே" என்றற்றொடக்கத்தானவர் கூறுந்திருவாக்குக்களேசான்றாகலின்; அஃதவர்க்குச்செய்வோர் செய்திப் பயனுயொழியு மென்றலமையாமையின், அஃதுண்டாகவேயதுபற்றி நிகழுமாகாமியமும் பிறவிக்குவித்தாய் நிலைபெறுத லுண்டுபோலுமென்பாரைநோக்கி, ஆண்டுப்பிராரத்தவினை தாக்குதற்கேதுக்கூறி, அதுபற்றிச்செய்வோர் செய்திப்பயனுயொழிதற் கிழுக்கில்லையென வலியுறுத்துத னுதலிற்று.

(இ - ள்) இங்குளிவாங்குங் கலம்போல-எ-து- தன்பால்வைத் தெடுக்கப்பட்டொழிந்த பெருங்காயத்தினின்றும் அதன்வாசத்தை வாங்கிக்கொள்ளும் பாசனத்தின்கண்ணவ் வாசமங்கிப்போய்மெலிதா

ய்க்கந்திக்குமாறுபோல - ஞானிபான்முன் செய்வினை மாயைமூண்டி டினும்-எ - து- இறைபணிநிற்குந் தத்துவஞானிக்குப் பயிற்சிவயத் தாஞெரோவழி நாடுமுளமுண்டாதலு முண்மையினது பற்றிப்பிரா ரத்தவினையுமதற்கு வாயிலாகியவுடம்பு முதலியமாயேயமுமங்கிப் போய்வாசனை மாத்திரையாய்மெலிதாய்வந்து மூளுமாயினும் - பின் செய்வினைமாயை யுடனில்லாது-எ-து - அம்மூட்சிபற்றி யொருதலை யானிகழ்வதாகியவாகாமியவினை மேலைக்குவித்தாய் நிலைபெற்றுமு றுகுதலின்றித் தனக்குவாயிலாகிய மாயேயத்தோடுகெட்டொழியும்- மற்றவன்முன் மெய்ப்பொருளே யாய்வதனாலுணருமச்சு - எ - து- இறைபணிநிற்குமவன் சத்தாயுள்ளசிவமேயாய வாற்றலொரோவழி யிவ்வாசனைபற்றிப்பிறழவரினும்பிறழவொட்டாதவ்வாசனையேநோக்கி நிற்பனாகலா னென்றவாறு.

ஒளியிருளைத்துரக்குமாறுபோல, அவ்வுணர்வவ் வாகாமியத்தை த்துரக்குமென்பதாம்." தொல்லையில்வருதல்போலத் தோன்றிருவினை யதுண்டே, லல்லொளிபுரையுஞானத்தழலுற வழிந்துபோமே"எனப் புடை நூலாசிரியரோதியதூஉமது. உளியைந்தாமுருபு படநின்றது. வாங்குதற்குச் செயப்படுபொருளவாய் நிலையான்வந்தது. மூண்டிடி னுமெனவே மூளுதலொருதலையன்றென்பதுபெற்றாம். மாயைஆகு பெயர். மற்றுநில்லாதெனவினையும். தானென்பதநுவதித்தற்கண்வந் தவிடைச்சொல். பிறழ்வுபடாமைபற்றி மெய்ப்பொருளை யச்சாகவு ருவகஞ்செய்தார்.

வெண்பா.

நண்ணனல்வேவாதநற்றவர்தம்மினும் ... ... *
பண்ணமரமாச்செலுத்தும்பாகரினு - மெண்ணி...*
யரனடியோர்பவமாம்புலனிற்சென்று ... .. *
மவர்திறனீங்காரதற்கு. ... ... ... ... (௫)

நண்ண-அதற்கு-எ-து-உ-ம்-எ-னின், முன்செய்வினை மாயை மூண்டவழியும்; அந்நிலையிற்பிறழாதவ்வச்சினையே யுணர்த்தி நிற்றல் யாங்ஙனமென்பாரைநோக்கி, உவமைமுகத்தானதனை வலியுறுத்துத னுதலிற்று.

(இ-ள்) நண்ணனல்வேவாத நற்றவர்தம்மினும் பண்ணமரமாச் செலுத்தும்பாகரினும்-எ-து- அங்கித்தம் பனத்தால் நண்ணனல்வே வாமைக்கேதுவாகிய நற்றவமுடையார் அவ்வனலுட் கிடப்பினுந்தந் திறனினீங்காதவாறுபோலவும், பண்ணுதல மரப்பரிமாவூர்தற்குரிய பாகநூல்கற்றுவல்லார் அப்பரிமாவின் வேகத்துட்படினுந் தந்திறனி னீங்காதவாறுபோலவும்-எண்ணியரனடியோர் பவர்-எ-து-ஐம்புலன் களிலகப்படாமைக்குபாயம் யாதென்றெண்ணி முதல்வன்றிருவடியா கியவச்சையுணரவல்லார் - ஐம்புலனிற்சென்று மதற்கவர்திறனீங்கார் எ-து-முன்செய்வினைமாயை மூட்சிபற்றியையவகைப்பட்ட விடயங்க ளிற்சென்றாராயினும் அதனால்அவர்தந்திறனிற்றீர்ந்து பந்தத்தொடக் குறுவாரல்ல ரென்றவாறு.

பொருள்வினையுவமையினுஞ் சென்றியைந்தது. நண்ணுதல் "கீழ்நீர்" போல முன்பின்னாகத்தொக்கவாறும் வேற்றுமைத்தொகை. நள்ளனல்நண்ணனலென மரீஇயிற்று, நீணுலசெலாமென்றாற்போ ல. தம்மானண்ணப்படுமன லென்றுரைப்பினுமமையும். பண்ணு தல் கதிப்பித்தல். இன்னிரண்டு முவமவுருபுகள். உம்மையெண் ணும்மை. சென்றுமென்னு மும்மைசிறப்பு அதற்கென்ப துருபு மயக்கம்.

வெண்பா.

சதசத்தாமெய்கண்டான்சத்தருளிற்காணி ... ✻
னிதமித்தல்பாதத்தினின்றிக் - கதமிக் .. ... ✻
கெரிகதிரின்முன்னிருள்போலேலாவசத்தி ... ...✻
னருகணையார்சத்தணைவாராங்கு. ... ... ...(கூ)

சதசத்தா-ஆங்கு-எ-து-உ-ம்-எ-னின், சார்ந்ததன் வண்ணமா ய்ச்சதசத்தெனப்படுமியல் புடையார் அரனடியோரினுமைம் புல னிற்சென்றுழியவற்றிற் றொடக்குண்ணாததிறனுடை யாதல்யாங்ஙன மென்பாரைநோக்கி, சார்ச்சிக்கட்படும் விசேடங்கூறி, அதனைவலியு றுத்துதனுதலிற்று.

(இ-ள்) சதசத்தா மெய்கண்டான் சத்தருளிற் காணில்-எ-து-தன்னாற் றரப்படுவனவாகிய சத்தினுமசத்தினு மதுவதுவாதல் பற்றிச்சதசத்தென்னுந் தன்னுண்மையை யுணர்ந்தோன்சத்தாகிய முதல்வன் றிருவருளாலல்ல தொன்றையுங் காணாது யவ்வருளின்வழி நின்றுகாணுமாயின் இதமித்தல்பாசத்தினின்றி - எ - து - அவ்வழிப்பாசமாகியவசத்தினிதஞ் செய்தலின்மையால் - சத்தணைமார்கதமிக்கெரிகதிரின் முன் னிருள்போலாங் கேலாவசத்தினருகணையார் - எ - து - சத்தாகியமுதல்வனைத்தலைப்பட்டுநிற்பார் சிறமிக்கெரியாநின்றசுடரின் முன்னரந்தகாரம்போலச் சத்தெதிர் தனது சத்தியேற்கமாட்டாத சத்தாய வைம்புலனின் மாட்டெய்தி நிற்பாரல்லரென்றவாறு.

வேறுமுடிபாகலான் ஒருமைபன்மை மயக்கமின்மையுணர்க. அருளினென்னுமின்னுருபு ஏதுப்பொருட்கண்வந்தது. இதமித்தல-பெயரடியிற் பிறந்தவினைப்பெயர். இதஞ்செய்தல் - பற்றுச்செய்தல். இன்றியென்னுஞ் செயவெனெச்சக்குறிப்பு - காரணப்பொருட்டாய் நின்றது. இன்மைக்கேதுக் கூறுவார்கதமிக்கெரி கதிர்முன்னிருள்போலேலாவசத்தென்றார். கதமிக்கெரிகதிரென்றது- ஒப்புமைபற்றிய வுபசாரவழக்கு. எல்லையில்லவ னெரிதுள்ளினுலென வெகுண்டானெனன்பதனானு மொப்புமையாதலுணர்க. இதனாற்போந்தது சத்துமசத்துந் தம்முட்சமமல்ல வாகலானரனடியோர்பவ ரைம்புலனிற்சென்றாலு மதுபற்றியவர்திற னீங்காவெனமேலது வலியுறுத்தவாறுமென்க ஏகனாகிநிற்றலான் மலமின்றாதலும், இறைபணிநிற்றலான் மாயைவினைகளிலவாதலும் பெறப்பட்டமையின் "மலமாயைதன்னொடு வல்வினையின்றே,, என்றதனைவேறோ ரதிகரணமாகவைத்தோதாராயினார். பத்தாஞ்சூத்திர முடிந்தது.

# பதினொராஞ்சூத்திரம்.

காணுங்கண்ணுக்குக்காட்டுமுளம்போற் ... ✻
காணவுள்ளத்தைக்கண்டுகாட்டலி ... ... ✻
னயராவன்பினரன்கழல்செலுமே ... ...✻

எ-நு-எ-னின், பரமேச்சுரன்சீபாதங்களை யணையுமாறுணர்த்து தனுதலிற்று.

எ-து-கனா-எ-னின்- சூத்திரக்கருத்துணர்த்துக னுதலிற்று

(இ-ள்.) அங்ஙனமேகனுகி யிறைபணி நிற்பார்க்கறிவிச்சை செயல்கள் விடயித்தற்குரிய தோரியைபாண்டுப் பெறப்படாமையின், விடயமாவதொன்றில்லை போலுமென்னும்வாதிகளை நோக்கி விடயித்தலில் வழியாண்டுப்புத்தர் கூறுமாலயவிஞ்ஞானம்போலச் சூனியமாமெனப்பட்டு, குணஞ்சூனியமாகவே குணியுஞ் சூனியமாய்முடியுமாகலான், அஃதேலாமையி னுண்டவை யியைபுபற்றி விடயிக்குமாறுணர்த்துமுகத்தானே பயனிரண்டனுண் முடிவாயெஞ்சி நின்றசிவப்பேறு கூடுதலாய நிட்டையினியல் புணர்த்துதலிப் பதினொராஞ்சூத்திரத்தின் கருத்தென்றவாறு.

இதனுனேசூத்திரவியைபு மினிதுவிளங்கும்,

அற்றேல், ஏகனுகியிறைபணி நின்முர்க்கினிச்செய்யக் கடவதொன்றின்மையானும், இருணீக்கமுமொளிவிளக்கமு முடனிகழ்ச்சியாயவாறுபோல, பசுத்துவநீக்கமுஞ் சிவத்துவவிளக்கமு மிடையீடின்றியுடனிகழ்வனவாகலின், வேருேதவேண்டாமையானும், முதனூலுட்சுவானுபூதியாய சிவப்பேற்றைப் பத்தாஞ்சூத்திரத்துட் பாசநீக்கத்தோ டொருங்குவைத்தே யோதலானும், அதனையீண்டு வேறுவைத்தோதலமையாது போலுமெனின், அறியாதுகடாயினுய், ஏகனுகியிறைபணிநிற்பது துரியநிலைக்கண்ணதாகிய வருணிலையேயாகலின் ஆ

ண்டுமலநீங்கியதுணையானே சுகப்பிரபைமாத்திரையே விளங்குவத
ன்றிய தீதநிலைக்கண்ணதாகிய சிவத்துவவிளக்கமெனப்படும் பரமசுக
ம்விளங்காமையின் அது விளங்குதலவனருளாலல்ல தொன்றையுஞ்
செய்யாமைமாத்திரையா லமையாமையின், அதற்கு வேறுமாண்டுச்
செய்யக்கடவதுண்டென்பது தானேபோதருதலானும், இருணீக்கத்தி
னெளிவிளக்கம்போலப் பசுத்துவநீக்கத்தினருள் விளக்கமாத்திரையே
யன்றி யானந்தவிளக்கமுட னிகழாமையானும், அவ்விரண்டற்கும்வே
றுபாடுமுன்னர்க்காட்டப்படு மாகலானும், முதனூலிற்பாசக்ஷயம்பண்
ணுமாறுணர்த்தியவழிப்பாச நீக்கமாத்திரையே முத்தியெனக்கொண்
டவாதிகளைமறுத்தற் பொருட்டுப்பாச நீக்கம்பெற்றேன் சுவானுபூதி
யுடையவனுவனெனப் பதினொராஞ்சூத்திரஞ் செய்தற்குத் தோற்று
வாயாந்துணையே பத்தாஞ்சூத்திரத்திற் செய்துவைத்துச் சுவாநுபூதி
நிகழ்ச்சிக்கண்ணேதற் பாலனவெல்லாம் பதினொராஞ் சூத்திரத்துட்
கூறுதலினென்பதாஞ் சூத்திரத்தினெடுத்துக் கொண்டவான்மசுத்தி
பண்ணுமாறு பத்தாஞ்சூத்திரத்திற் சென்றியைந்துமுற்றுப் பெற்றாற்
போல, பத்தாஞ்சூத்திரத்தி னெடுத்துக்கொண்ட சுவாநுபூதிநிலைபதி
னொராஞ்சூத்திரத்திற் சென்றியைந்து முற்றுப்பெறுதலான், அதன்
கண்மலையாமைப் பொருட்டாசிரியர் சுவாநுபூதி மானுவனென்பதனை
யும்அரன்கழல் செலுமெனப் பதினொராஞ் சூத்திரத்தானே யொரு
ங்குவைத்தோதினாராகலினது மாறன்மையானும் அவ்வாறின்றிமொ
ழிபெயர்த்தல் யாப்பானூல்செய்துரைப்பான் புகுந்தவாசிரியர்வேறு
படச்செய்துரையாராகலானுமென்பது. இதனானேமுதனூலிற்சுவாநு
பூதிமானெனவாளாகூறியதனைப்பதினொராஞ்சூத்திரத்துப்பத்திசெய்க
வென்றதன்பின் னுகக்கொண்டு கூட்டிவைத்துரைத்தலே யதன்கருத்
தென்பதூஉம்பெறப்பட்டது, அற்றாகலினன்றே, பத்தாஞ்சூத்திரம்
பாசக்ஷயம்பண்ணுமா றுணர்த்திற்றெனவும், பதினொராஞ்சூத்திரம்பர
மசிவனதுசீபாதங்களை யணையுமாறுணர்த்திற் றெனவுங் கருத்துரை
செய்ததூஉமென்க. இஃதறியாதார் தத்தமக்கு வேண்டியவாறே
யுரைப்ப.

இச்சூத்திரத்தின் பிண்டப்பொழிப்பு - காட்டக்காணுந் தன்மையையுடையகண் உருவத்தைக்காணும்படி யதனேடொருங்கி யைந்துநின்று காட்டி, அவ்வுருவத்தைக் காண்கின்ற வான்மாப்போல, அறிவிக்கவறியு மியல்பையுடைய வவ்வான்மாவிடயத்தை யறியும்படி முதல்வனதனேடி யைந்துநின்று அறிவிக்கவறிந்து வருதலானவ்வத்துவிதநிலையை மறவாதுகடைப்பிடித்துச் செய்யுமன்பானேயம் முதல்வன்றிருவடியாகிய சிவாநந்தாநுபூதியைத் தலைப்படுமென்றவாறு.

காணுமென்னு முவமை யடை பொருளினுங் கண்டென்னும் பொருள்வினை யுவமையினுஞ்சென றியைந்தன. காணுமென்பதனை யிரிடத்துங்கூட்டுக. "வேர்த்துவெகுளார் விழுமியோர்" என்பது போலக்கண்டு காட்டலென்பது மாறிவைத்துணாக்கப்பட்டது. இக்கருத்துநோக்கியன்றே யிதனைவிரித்துக் கூறுவான்புகுந்த வழிநூலாசிரியர் "காட்டிக்கண்டிடுமாப்போலக் காட்டிக்கண்டிடுவன்" என்ற தூஉமென்க. அயராமைக்குச் செயப்படுபொரு ளதனையென் றெடுத்துக்கொள்க. அயராவன்பென்றது மயராமையானுகிய வன்பென ஆறுசென்றவேர்போலநின்றது. அது-"இத்தை யாயுமறிவுடைய னையன்புசெய்ய"என வழிநூலாசிரியர் கூறி யதனுனுமுணர்க. உள்ளத்தையென்பதுருபுமயக்கம். அறிவிச்சைசெயல் களினிகழ்ச்சியாகியவயராமையும் அன்புஞ்செலவுமுறையே காரணகாரியங்களா யவ்வொருபொருண்மேலொருங்கு நிகழுமென்பார். "அயராவன்பி னரன்கழல்செலுமே" என்ருர். இஃதென்சொல்லிய வாறேவெனின், உயிரையின்றியமையாதகண் உருவத்தைக்காணுங்கா லுயிரினதுணர்வு கண்ணொளியெனத்தானென வேற்றுமையின்றி யுடனுய் விரவிநின்றுகண்ணுக்குக் காட்டிய வதனைக்கண்டதென்றுங் கண்ணையதிட்டித்து நின்ற வுயிர்கண்டதென்றும் பகுத்தறியவாராதிரண்டனை காட்டியுமொன்றனையொன்று விடாமலத்துவிதமாகியொருங்கே நிகழுமாறுபோல, முதல்வனையின்றியமையாதவுயிரொருவிடயத்தை யறியுங்கா லுமுதல்வனதுசிற்சத்தியான்மசிற்சத்தியெனத் தானெனவே றின்றியுடனுய் விரவிநிற்ப முதல்

வனுமவ்வாறு விரவிநின்றுன்மா வுக்கறிவித்த தொன்றனை யவ்வான்மா வறிந்ததென்று மதனையதிட்டித்துநின்று தானறிந்தானென்றும் பகுத் தறியவாராதிருவகை யறிவுமொன்றனை யொன்றுவிடாமலத்துவிதமா யொருங்கேநிகழுமாறு செய்துவரு மிவ்வுபகாரம்பெத்த முத்தியிரண் டினு மொருபெற்றித்தா யுண்மையின், ஏகனாகியிறைபணிநிற்கு முயிர் முதல்வனங்ஙனம் பத்துவிதமாயுபகரித்து நிற்குமுரிமையைநோக்கு மாயின், நோக்குந்தோறு நோக்குந்தோறு மப்பொருட்கட்செல்லு மி ச்சையடங்காது மீதூருமாகலின், அவ்வழியவ்விச்சையே தானாகவிள ங்கித்தோன்றும் பேரானந்தத்தை யநுபவிக்கப்படுமெனஅறிவிச்சை செயல் கண்மூன்றுங்கண்டு விடயிக்குமாறுணர்த்தி யதீதநிலையியல்பு கூறியவாறுமென்க. அத்துவிதமாவதுபேதப்பொருளிரண்டு தம்முள பேதமாதற்குரிய சம்பந்தவிசேடம். இக்கருத்தேபற்றி "அறிவொளி போற் பிறிவருமத்துவிதம்" என்றார்புடைநூலாசிரியரும். அங்கியுமொ ன்றிற் றங்கிநின்றல்லது தன்றொழி னடத்தாதாகலின். அதுபோல முதல்வனுமுயிரை யதிட்டித்துநின்றே யெத்தொழிலுஞ் செய்வனெ ன்றுணர்க. உயிரொன்றனையறிதல் முதல்வனுடனின் றறிதலானன்றி யறிவித்தன்மாத்திரை யானமையாதென்பது, "தொண்டனேனினையு மாநினையே" "விரும்புமாவிரும்பே" "தொட்டுமாதொடரே" "நுகருமா நுகரோ" என்றிவ்வாறுமுத்திநிலைபற்றி யோதியதிருவாக்குக்களானுமறி க.இவ்வியலபுநோக்கியன்றே, "அறிவானுந்தானேயறிவிப்பான்றானே" என்றும், "அம்மையறிவாயறிகின்றான்றானே" என்றுமோதியதூஉமெ ன்க. முன்னறிதலறிவித்தற் பொருட்டெனவும், பின்னறிவாயறிதல் விடயத்திலழுந்துவித்தற்பொருட்டெனவுங்கொண்டிதனையீண்டுவைத் தார் அத்துவிதநிலையினிது விளங்குதற்கு. இவ்வாறன்றிக்காணுங்கண் ணுக்குக் காட்டுமுளம்போற்காண வுள்ளத்தைக்கண்டு காட்டலென்ப தற்குக்காட்டு முபகாரமுணர்த் தன்மாத்திரையே கருத்தென் றுரைப் பாருமுளர். இதனைக் கண்ணழித்துரைப்புழியவனுமவற்றது விடயத் தையுணரு மெனக்காணு முபகாரமாத்திரையே யெடுத்துக் கொண்டு ரைத்தலாசிரியர்கருத்தன்றாகலானும், காணுமுபகாரங் காட்டுமுபகார

த்தின்பின்னதாய் நிகழுமென்ப துணர்ந்துகோடற் பொருட்டதுவுமு டன் கூறப்பட்டதன்றி வேறின்மையானும், அவ்வாறன்றென்பார்க் கைந்தாஞ்சூத்திரத்துட் பெறப்பட்டதனை யீண்டுக்கூறுதல் புனருத்தி யாய் முடிபுமாகலானும், அவருரைப்பனவெல்லாம் போலியுரையென் றொழிக. அற்றேல், முதனூலிற் பதினொராஞ்சூத்திரத்துக்காட்டுவனெ ன்பது மாத்திரையேயன்றிக்காண்பனென்பதுகூறிற்றில்லையாலெனின், அறியாதுவினாயினாய், ஆண்டுக்காட்டுவானுமென்றவும்மை காண்பானு மாமென வெதிரதுதழீஇநிற்றலிற் கூருமையாண்டைய தென்றொழிக. அவ்வும்மைக்குப்பொருள் காணமாட்டாதார் பாடம்வேருகவோதுப. இதனுள்'' காணுங்கண்ணுக்குக் காட்டுமுளம்போற்காண வுள்ளத்தை க்கண்டுகாட்டலின்,, என்றதோரதிகரணம்; அயராவன்பினரன் கழல் செலுமே,, என்றதோரதிகரணம்; ஆகவிரண்டதிகரணத்ததிச் சூத்திர மென்றுணர்க.

---

## முதலதிகரணம்.

---

ஈண்டவனுமவற்றது விடயத்தையுணருமென்றது-எ-து-மே-ள்- எ-னின், முதல்வனுயிர்க்குக் காட்டுமுபகார மாத்திரையேயுள்ள தெ ன்னும் வாதிகளைநோக்கி, அத்துவிதநிலையுணர்த்தற் கெடுத்துக்கொ ண்டசூத்திரத்தின் முதற்கூற்றைக் கண்ணழித்துரைத்து, மேற்கோட் ணுதலிற்று.

(இ-ள்.) முதல்வனுயிர்களா னுணரப்படும்விடயத்தை யுடனின் றுணர்வனென்றவாறு.

உம்மையுயிர்க ளுணர்தலேயன்றி யெனவிறந்தது தழீஇயிற்று. இஃதறியாதார் ஈண்டுணருமென்றது அறிவித்தற்கேதுவா யறியுமெ ன்றுரைப்பாருமுளர். அவ்வாறுரைப்பிற் சித்தசாதனமா மாகலானுமீ ண்டைக்கியை பின்மையானுமது பொய்யென்றொழிக.'' அவையே தானேயாய்,, எனவும்'' தாந்தமுணர்வின்றமியருள்,, எனவும், மேற்

பொதுவகையாற்கூறிப் போந்தவத்து விதத்தையீண்டுக்காணு முபகாரத்தின் வைத்துணர்த்தியினிது விளக்கியவாறு.

இவ்வான்மாக்களவனை யின்றியமைந்தொன்றையும் விடயியாவாகலான்-எ-து-ஏது-எ-னின், கண்சடமாகலானும், காண்டற்பயனுயிர்க்கேயாகலானும், கண்காண்புழியுயிரு முடனின்றுகாண்டல் பெறப்படும்,கண்போலுயிர் சடமன்மையானும்;உணர்தற்பயனுயிர்க்கே யாகலானு மதனையெடுத்துக் காட்டியவனுமவற்றது விடயத்தையுணருமென்றலமையா தென்பாரை நோக்கி, மேற்கோளைச் சாதித்தனுதலிற்று.

(இ-ள்.) விளக்கொளி கண்ணொளியோடுகலந்து கண்ணொளியோடுகூடவுருவத்தினுங் கலந்தாலன்றி யஃதவ்வுருவத்தைக் காண்டலின்றுயவாறுபோல, அறிவிக்கவறியு மியல்பினவாய வுயிர்களுமுதல்வனதுணர்வுதம்மோடு விரவிநின்றுதம்மோடு கூடச்சென்று விடயத்தினும் விரவிநின்றாலறிவு விளங்கியதனை யறியுமியல்பினவன்றித் தனித்தறியமாட்டா, தனித்தொன்றனை விடயிக்கவுமாட்டா, ஆகலான் அறிவுவிளங்குதன் மாத்திரைக்கேயன்றி விடயத்தைப்பற்றுதற் கண்ணுமுதல்வ னுடனின்றறித லொருதலையான் வேண்டப் படுதலானீண்டவனுமவற்றது விடயத்தையுணருமெனமேற் கொண்டதென்றவாறு.

அவனையின்றி யமையாமையிற் காட்டுமுபகாரம் விளங்கினாற்போல, அவனையின்றியொன்றையும் விடயியாமையிற் காணுமுபகாரமுமினிது விளங்குமென்பார் அவனையின்றி யமைந்தொன்றையும்விடயியாவாகலானென்றார். அமைந்துவிடயியா வென்றதனைக்கந்தித்துச்சுழலுமென்றாற்போலக் கொள்க. உம்மைமுற்றும்மை. விடயியா வென்றது பெயரெச்சத்திரிந்த வெதிர்மறைவினை "எவ்விடத்து மிறைவனையின்றியமைந்தொன்றை யறிந்தியற்றியிடாவுயிர்களீசன்றானுஞ் செவ்விதினுளம்புகுந்து செய்தியெல்லாமுணர்ந்து சேட்டிப்பித்தெங்குமாய்ச்செறிந்துநிற்ப னிவ்வுயிர்கடோற்றும் போதவனையின்றித்தோற்றுமிவற்றினுக்கம் முதலெழுத்துக்கெல்லாநிற்கு, மவ்வுயிர்போனின்றிடுவனுகலானுமரனடியை யகன்றுநிற்பதெங்கேயாமே,, எனவழிநூலாசிரியரிதனை விரித்தோதியவாறு முணர்க. எவ்விடத்துமென்றது

பெத்தமுத்தி யிரண்டினுமென்பதாம். இதனுள்இறையடியை யின்றி யமைந்தொன்றை யறிகியற்றியிடாவுயிர்களெனவும். ஈசன்றனெங் குமாய்ச்செறிந்து நிற்பனெனவுங் கூறியதுவிடயத்தின் கட்படுநிகழ்ச் சிக்கெனவும், இவ்வுயிர்கடோற்றும் போதவின்ன யின்றித்தோற்ற வெனவும், அவ்வுயிர்போனின்றிடுவ னெனவுங் கூறியதுயிரின்கட்படு நிகழ்ச்சிக்கெனவுங்கொள்க. அவ்வாறுகொள்ளாக்கால் இருகாற்கூறு தல்புனருத்தியாய் முடியுமென்றொழிக. இனிவிளக்கொளி கலத்தலி ரிடத்தும் வேண்டப்படுமென்பதூஉம், விளங்கொளி கலந்தவற்றை யெனவும், விளக்கின் சோதி கலந்திடுமெனவும் புடைநூலாசிரியர்வகு த்தோதியவற்றானுணர்க. அஃதங்ஙனமாக, பரமுத்தியிலுயிர்க்குவிடய மாவதொன்றின்மையின், வழிநூலாசிரியர் எவ்விடத்து மென்றதமை யுமாறென்னையெனின், அறியாதுகூறினாய், சுத்தவனுபோகத்தைத் துய்த்தலனுவெனவும், ஒன்றிநின்றுணரு முண்மையெனவும் பிறண் டுமிவ்வாறே யோதுபவாகலிற் பரமுத்தியிலுயிர் சிவானந்தானுபூதி யைவிடயித்தலுண்டெனவும் அறுமுதல்வன்ன யின்றியாகாமையின வனுமாண டவ்வனுபூதியை யுடனின்றறிவ னெனவுமுணர்க.

வெண்பா.

ஐந்தையுமொக்கவுணராதவற்றுணர்வ ... ... *
தைந்தும்போனின்றுணருமாதலா-லைந்தினையு ... *
மொன்றொன்றாப்பார்த்துணர்வதுள்ளமேயெவ்வுலகு
மொன்றொன்றாப்பார்க்குமுணர்ந்து ... ... (௪)

ஐந்தை-உணர்ந்து-எ-து-உ-ம்-எ-னின், அவனுமவற்றது விடய த்தையுடனின்றுணருமாயின். அவற்றோடவனிடை யறிதற்கட்படும் வேற்றுமையில்லைபோலு மென்பாரைநோக்கி, வேற்றுமையுங்காட்டி, அதனை வலியுறுத்துதனுதலிற்று.

(இ-ள்) உள்ளம்-எ-து-ஆன்மாவாவது-அவற்றைந்தும்போனின் றுணர்வதுணருமாதலால்-எ-து-சுவையொளியூறோசைநாற்றமென்னு மைந்தினுமைம்பொறிபோ லதுவதுவாய்ச் செறிந்துநின்றுணர்தற்பா லதனை யுணருந்தன்மைத்தாகலான் - ஐந்தையுமொக்கவுணரா தைந்தி னையும் ஒன்றொன்றாப்பார்த்துணர்வது - அவ்வைம்புலன்களையு மொ

ருங்கேயுணரமாட்டா ‡சொரோவொன்றுயறிந்து‡ அனுபவிப்பதாம். ஒன்றெவ்வுலகுமொன்று வுணர்ந்துபார்க்கும் - எ - து-அதுபோலச் சார்ந்ததன்வண்ணமாய்ப் பலதிறப்படுதலின்றி யென்றுமொருபெற்றித்தாகியசிவம் எல்லாவுயிர்களுடைய வெல்லாவிடயங்களையும் பொதுவகையா னெருங்கேயுணர்ந்து அவ்வுயிர்களுடனின்று சிறப்புவகையானு மறியுமென்றவாறு.

இது பின்வருநிலை. சிவத்தைப்பிரித்தமையின் ஏகாரம்-பிரிநிலைக்கண்வந்தது. ஒன்றென்பது குறிப்பேதுவாய் நின்றபெயர்.

வெண்பா.

ஏகமாய்நின்றே யிணையடிகளொன்றுணரப் ... ...*
போகமாய்த்தான்விளைந்த பொற்பினு - னேகமா.. *
யுள்ளத்தின் கண்ணனு னுள்குவாருள்கிற்றை ... *
யுள்ளத்தாற்காணுனே வுற்று ... ... ... (உ)

ஏகமாய்-உற்று - எ-து-உ-ம்-எ-னின், ஆன்மா னைம்பொறியை விடயிப்புழிப்போல, முதல்வனை விடயிப்புழியு முதல்வனவ்வாறுடனின்று தன்னைத்தான் விடயிப்பனெனின், ஆனமாச்சிரயமென்னுங்குற்றமாமாகலின், அதுபெறப்படாமையான், அவனுமவற்றது விடயத்தையுணருமென்றல் யாண்டுஞ்செல்லா தென்பாரைநோக்கி, யாண்டுமவ்வாறுணர்த லுண்டென்பதுணர்த்தி, அதனை வலியுறுத்துதனுதலிற்று.

(இ - ள்) ஒன்றேகமாய்நின்றே யிணையடிகளுணரத் தான்போகமாய் விளைந்தபொற்பினன்-எ-து - முதல்வனைச் சார்ந்தவழி யவ்வண்ணமேயா யொருபெற்றிப்பட்ட வான்மாவவனேடொற்றுமைப்பட்டு நின்றவனதடியிணைகளையுணரவே தானவ்வான்மாவுக்குப் பரபோகமாய் மேன்மேல்விளைகின்ற பொலிவினையுடையனுகலானும் - ஏகமாயுள்ளத்தின்கண்ணனன் - எ - து - அங்ஙனமுணருங்கா லவ்வான்மஞானத்தினிடத் தேகமாய்விட்டு நீங்காதவனுகலானும்,- உள்குவாருள்கிற்றை யுள்ளத்தாலுற்றுக்காணுனே-எ - து - கருதுவார் கருதிய பொருளாகியதன்னை யவரறிவோடுகூடிநின் றறியான்கொல்லோவென்றவாறு.

போகமாய்த்தான்விளைந்த பொற்பினன் ஏகமாயுள்ளத்தின்கண்ணுனன் என்னும் பெயரடைகளேதுப்பொருளவாய் நின்றனயாண்டுஞ் சேறலுணர்த்துதற்கு. உள்குவாருள்கிற்றை யென்றார் வேண்டுவார்வேண்டியதை யீவானென்றாற்போல. ஆனுருபுட னிகழ்ச்சிப்பொருட்கண்வந்தது. ஓகாரமெதிர்மறை. ஆன்மாக்கள் முதல்வனை விடயிக்குங்கால், அவற்றதுவிடயமாகிய வவன்றன்னாலு முடனின்றுணரப்படுவ னுள்குவாருள்கிய பொருளாகலின். மேலைவெண்பாவிற் கூறிப்போந்த வைம்புலன்போலவென்றும், ஆன்மவளவைகாட்டுவார் உள்குவாருள்கிற்றை யுள்ளத்தாலுற்றுக்காணுறேவென்றும், உள்குவாருள்கிற்றுதலீரிடத்து மொக்குமெனபார் ஏகமாய்நின்றே யிணையடிகளொன் றுணரப்போகமாய்த் தான்விளைந்த பொற்பினன் என விடயித்தற்கட்படுமியல்பும் ஏகமாயுள்ளத்தின் கண்ணுனனென விளங்குதற்கட்படு மியல்பு மெடுத்தோதினர். பரபோகமாயென்னது போகமாயென்றதும் ஒப்புமையிணங்குதற்பொருட்டுச் சேற்றுநிலமிதித்துச் சென்றானுக்கு அந்நிலம்போலப் பரயோகவிளைவு செயற்கைப்பொருளாய்நிற்றலின் ஆக்கமுங்காரணமு மடுத்துவந்தது. இணையடிகளுணருந்தோறும் போகமென மேல்விளைதல் "புணர்ந்தாற்புணருந்தொறும் பெரும்போகம் பின்னும்புதிதாய், மணந்தாழ் புரிகுழலாளல்குல்போல வளர்கின்றதே" எனவுமப்பொருண்மேல்வைத் தோதியதிருவாக்கானுமறிக. தெளிவுபற்றி, விளைந்தவெனவிறந்தகாலத்தாற் கூறினர். கண்கண்ணாடியினின்றுந் தன்னைவிடயித்தாற்போல' முதல்வனன்மாவுடனின்று தன்னைவிடயித்தல் பொருத்தமுடைமையின், ஆன்மாச்சிரயமென்னுங்குற்றம் இன்னோரன்னவற்றிற் கெய்தாதென்றுணர்க. கண்ணடிக்குள்ளாகத் தோன்றுவதுபோலு மெதிர்விம்பமாவது விம்பமேயன்றி வேறன்றென்பது சிவாகமநூற்றுணிபென்க. இதனுள், அவனுமவற்றது விடயத்தையுணருமென வுணர்வேபற்றியோதினாேனும். "எத்திறஞானமுள்ள தத்திறமிச்சைசெய்தி" என்பவாகலி னவற்றிற்குமஃதொக்கும். ஒக்கவேபெத்த முத்தியிரண்டினுமான்மாவிடயிக்கப்படும் விடயங்களை முதல்வனுடனின்று விடயிப்ப

னென்பதூஉம்; பெத்தத்தினவனிவனுய்நின்று விடயித்தலின், விடயங்களவனுக்கன்றி யிவனுக்காயின முத்தியினிவனவனுய்நின்று விடயித்தலின் அவனொழிந்த விடயங்களெல்லா மிவனுக்கின்றி யவனுக்காயினவென்பதூஉம், இனிதுவிளங்கும். இம்முறைநோக்கியன்றே, உலகத்துளொன்றனை யீவோருமேற்போருஞ் சிவார்ப்பணமெனக் கருதாதவழிக் குற்றமென் றாகமங்களோதியதூஉம், "யாதொருதெய்வங் கொண்டீ ரத்தெய்வமாகி யங்கே மாதொருபாகனார் தாம்வருவர்" என்றதூஉம், அவ்வுண்மையறிந்தவழி, "எத்தநுவினின்று மிறைபணியார்க்கில்லைவினை மூற்செய்வினையுங்கருவான்முன்" எ-ம், "பெற்றசிற்றின்பமேபேரின்பமாய்" எ-ம் உடம்புடையயோகிகடாமுற்ற சிற்றின்பமடங்கத் தம்பேரின்பத்தாக்கி" எ-ம், "காணுங்கரணங்களெல்லாம் பேரின்பமெனப் பேணுமடியார்" எ-ம்; "எல்லாஞ்சிவமாயிருந்ததே" எ-ம் இவ்வாறோதியதூஉமென்க.

---

## இரண்டாமதிகரணம்.

---

இனிப்பத்தியினான்மறவா தேத்தவவனது சீபாதத்தை யணையுமென்றது-எ-து-மே-ள்-எ-னின், ஏகமாகிநின்றார்க் கவ்வியையுபபற்றியறிவிச்சைசெயல்கள் மூன்றுமாண்டுவிடயிக்கு மாறியாங்ஙன மென்பாரைநோக்கி, நிட்டையினியல் புணர்த்துகற் கெடுத்துக் கொண்டவிரண்டாங் கூற்றைக் கண்ணழித் துரைத்து மேற்கோடனுதலிற்று.

(இ-ள்) சூத்திரத்தி னுரைத்தவாறு பற்றியுரைத்துக் கொள்க.

இத்தையாயு மறிவுடையனு யன்புசெய்ய, எனவழிநூலாசிரியருமோதுதலினீண்டு மறவாதுபத்தியினுலேத்தவெனச் சூத்திரப்பொருட்கேற்பமாறிவைத் துரைத்துக்கொள்க. ஏத்தவென்றதுபசாரவழக்கு. அன்புபத்திகாதலென்றாற் போல்வன இச்சைமீதூர் தற்பொருளவாகலானது பரமுத்தியினுமுண்டென்ப துணராதார்பத்தியாவது சீவன்முத்திநிலைக்கே செய்யப்படுவதொரு சாதகம்போலுமென மயங்கித்

தமக்குவேண்டியவாறே யுரைப்ப. முத்தியின்கணிச்சை நிகழாதவழிச்சிவபோக மனுபவமாதல் செல்லாமையானும், சீவன்முத்திநிலைக்கே கூறுவதன்றாயின் "செம்மலர்நோன்றாள்" என்னுஞ்சூத்திரத்தொருங் குவைத்தோதலமையும், சூத்திரம்வேறுசெய்ய வேண்டாமையானும், அவ்வுரைபோலி யுரையென்றொழிக.

அவனன்றிய மின்றிச்செய்வோர் செய்திப்பயன் விளைத்துநிற்றலான் - எ-து - ஏது - க-ளின், பத்தியினான் மறவாதேத்தினு மவனதுபாதத்தை யணைதல் பரமுத்தியினன்றி முடியாதென்பாரைநோக்கி, மேற்கோளைச் சாதித்தனுதலிற்று.

(இ-ள்.) அம்முதல்வன் வேறுநில்லாது செய்வோர் செய்வனவற்றையறிந்து அவ்வச்செய்திக்குத்தக்கபயனை மிகச்செய்யலாயினவவ்வப்பொழுதேவிளைவித்தும் அல்லுழிக்காலாந்தரத்தின் விளைவித்துமுடனாய்நிற்பனாகலான் இனிப்பத்தியினான் மறவாதேத்தவேயம் முதல்வனதுபாதத்தை யணையுமெனமேற்கொண்ட தென்றவாறு.

வெண்பா.

அருக்கனேர்நிற்பினுமல்லிருளேகாணார்க் ... ... *
கிருட்கண்ணேபாசத்தார்க்கீச - னருட்கண்ணாற் ... *
பாசத்தைநீக்கும்பகலலர்த்துந்தாமரைபோ ... *
னேசத்திற்றன்னுணர்ந்தார்நேர். ... ... ... (௯.)

அருக்கன்-நேர்-எ-து-உ-ம்-எ-னின், அரன்கழல்சேறலுடம்பினீங்கியபின்னன்றி யுடம்பையுடைய வழியுங்கூடுமாயின், அதுஞாயிற்றின்னொளிபோல மருங்குள்ளார்க்குப் புலனாதல் வேண்டுமென்பாரைநோக்கி, அதுகூடாமையுங் கூடுமாறுமுவமை முகத்தானுணர்த்தியேதுவை வலியுறுத்துத னுதலிற்று.

(இ-ள்.) அருக்கனேர்நிற்பினுங்காணார்கண்ணுக்கல்லிருளே-எ-து- ஞாயிறெல்லார்கண்ணுக்கு மொப்பநிற்பினுமது காட்சியுடையார்கண்ணுக்கன்றியஃதில்லாதார் கண்ணுக்கிரவின் கண்ணதாகிய விருளே யாமதுபோல - ஈசன்பாசத்தார்க் கிருட்கண்ணே-எ-து- முதல்வனெங்கணு மொப்பநிற்பினு மலநீங்கியமுத்தர்க் கன்றியஃதுடையார்க்கவ

னம்மலத்தின் கண்ணேயாவன்-, சீவன்முத்தருமேனையர் போலுடலு
டைமையிற் பாசத்தராகலின் வேற்றுமையின்றாலெனின்,- பகலலர்த
துந்தாமரைபோல்-எ-து- ஏனைத்தாமரைகளோ டொப்பவொருங்கு
நிற்பினும் பக்குவமுடைய தாமரையைக் கூம்புதலைநீக்கியலர்த்து ஞா
யிறுபோல - நேசத்திற்றன்னுணர்ந்தார் நேரருட்கண்ணும் பாசத்தை
நீக்கும்-எ-து- ஏனையோர் போலுடம்பொடுநிற்பினும் பருவமுடைய
ராய்ப் பத்தியிற்றன்னைமறவா துணர் வார்க்குமுதல்வன்றனது திரு
வருட்பார்வையாற் பாசத்தைநீக்கி யறிவையலர்த்து மாகலானுடம்பு
ள்வழியு மவர்பாசத்த ரல்லரென்றவாறு.

ஆகலானுடம்புள் வழியுமவர்பாசத்த ரல்லரென்பது குறிப்பெ
ச்சம். ஏகாரந்தேற்றம். திணிக்கவிருளென்பார் அல்லிருளென்றார்.
மலத்திற்குக் கண்ணுவதறியாமை. பகலாகுபெயர். அருக்கனெடுத்து
க்காட்டுவமை. தன்னையென்னு மிரண்டனுருபு விகாரத்தாற்றொக்க
து. ஏழாம்வேற்றுமைப்பொருட்கண் வருநேரென்பதுருபுமயக்கமாய்
நான்காவதுணர்த்திற்று. நீக்குதலுமலர்த்துதலு மேனையிடத்துஞ்செ
ன்றியைதலினீரிடத்துஞ் செயப்படுபொருளேற்றல் வருவிக்கப்
பட்டன.

வெண்பா.

மன்னுமிருளைமதிதுரந்தவாறன்பின் ... ... *
மன்னுமரனைமலந்துரந்து - தன்னின் ... ... *
வலித்திரும்பைக்காந்தம்வசஞ்செய்வான்செய்தல் *
சலிப்பில்விகாரியலன்றான். ... ... ... (௪)

மன்னும்-கான்-எ-து-உ-ம்-எ-னின், நேசத்திற் றன்னுணருஞ்
சீவன்முத்தர்க்குப் பாசத்தைநீக்கி யறிவையலர்த்துதல் பரமுத்தியின
ன்றியில்லையென முரணிக்கூறும்வாதிகளைநோக்கி, பாசத்தைநீக்கியறி
வையலர்த்து முறையிவ்வா றென்றுணர்த்தி, அதனை வலியுறுத்துக
ணுதலிற்று.

(இ-ள்.) அன்பின்மன்னுமரனை மன்னுமிருளை மதிதுரந்தவாறு
மலந்துரந்து-எ-து- உயிரைத்தானாக்கிக்கோடற் கண்ணுளதாகிய விச்
சைமிகுதியா னவ்வுயிரோடு மனாதியேபிரிவிலைபெறு முதல்வன்கண்ணின்

கணிலைபெறுமிருளைப் பிறைமதிநாடோறுஞ் சிறிதுசிறிதாகநீக்கிக் காட்டுமாறுபோ லவ்வுயிரின்கண்ணதாகிய மலசத்தியை யவ்வப்பருவந் தோறுஞ் சிறிதுசிறிதாகச் சோபானமுறையினீக்கிப் பற்றறத்துரந்து- காந்தமிரும்பைத் தன்னின்வலித்துவசஞ்செய்வான்செய்தல்சலிப்பில் - எ-து - காந்தக்கல்லிரும்பைத் தன்கணீர்த்துத் தன்வசமாகச்செய்தல்போல மலமங்ஙனந்துரக்கப்படுந்தோறு மம்முறையே யச்சத்தியதிவித்துயிரைத் தன்கண்வலித்துக்கொண்டு தன்வசமாகச்செய்து வருஞ்செய்கையினவனுக்கொரு ஞான்றுஞ்சலிப்பில்லை- விகாரியலன்றான்-எ-து-அங்ஙனஞ் சலியாதுசெய்துவருதல்பற்றி விகாரியாவானுமல்லன் காந்தம்போற்றனது சந்நிதிமாத்திரையிற்செய்யு மம்முதல்வனெனறவாறு.

மதியென்ற தேற்புழிக்கோடலா னீண்டுவளர்பக்கத்திற் றிங்களின்மேறறுயிற்று. "அந்தவருளுணக்கிங்காதாரமா யல்லினிந்துவென வேறிடத்திட்டு" என்றதூஉமது. மலர்த்தலுயிரின் செயலாகுவதன்றென்பது படநின்றமையின் ஏகாரம் பிரிநிலைக்கண்வந்தது. வான்பாகன் பாக்குக்கடொழிற்பெயர் விகுதியுமாமென்பது "காப்பாக்கறிந்து" என்பதனானுணர்க. உவமவுருபு விரித்துரைக்க. சலித்தல் வேசறுதல். செய்தற்கண்ணென வேழனுருபுவிரித்துரைக்க. மதிதுரந்தவாறு மலந்துரந்தென்றவிதனானே, மலநீங்குவதுபின்னென்பார் மதமறுக்கப்பட்டவாறுகாண்க. சோபானமுறையினீக்குதலானன்றே சத்திநிபாதஞ் சிவபுண்ணியமுதலாயின நால்வேறுவகைப்பட்டதூஉம், அவற்றுள்ளுமோரோவொன்று நந்நான்காய்ப் பதினாறுவகைப்பட்டதூஉம், அவற்றுள்ளு மொவ்வொன்று பல்வேறுவகைப்பட்டு விரிந்ததூஉமென்க.

வெண்பா.

நசித்தொன்றினுள்ள நசித்தலாலொன்று ... ...*
நசித்திலதேலொன்றாவதில்லை - நசித்துமல .. *
மப்பணைந்தவுப்பி னுளமணைந்துசேடமாங் ... ...*
கப்பின்றாமீசன் கழல் ... ... ... ... ...(௫)

நசித்தொன்றின் - கழல் - என் - று - உ-ம்-எ-னின், உயிருக்குக் குணம்போல வநாதியாயுள்ள சகசமலமவ்வுயிரின்வேறாய்த் தாக்கற்

பாலதன்றாகலின், மலந்துரந்தென்ற தமையாதென்னும் பாடாணவா
தசைவனைநோக்கி அருத்தாபத்தியளவை யானதனை வலியுறுத்துத
லுதலிற்று.

(இ-ள்.) நசித்தொன்றினுள்ள நசிக்கலாலொன்று நசித்திலதே
லொன்றாவதில்லை-எ-து - அரன்கழல் செல்லுங்கா லதனையான்மாக்
கெட்டொன்றுமோ கெடாதொன்றுமோவெனக் கடாயினார்க்குக் கெ
ட்டொன்றுமெனின், ஆன்மாக்கெட்டுப்போகலா னொன்றமாட்டாது,
கெடாதொன்றுமெனிற் கெடாதவழி யிருபொருளாய்நிற்றலி னொன்
றுமாறில்லையாகலா னருத்தாபத்தியளவையானே - அப்பணைந்தவுப்பி
ன் மலநசித்துளமீசன் கழலணைந்துசேடமாம் - எ-து- உப்புத்தனது
கண்டிப்புநீங்கி நீரினொன்றுமாறுபோலத் தனது சகசமலங்கெட்டொ
ழிய வான்மாவரன்கழலையொன்றி யவ்வரன்கழற்குச்சேடமாம் - சப்
பின்றும்-எ-து-அங்ஙனஞ்சேடமாகிய வான்மாவுக்கு மீளக்கவற்சியி
ல்லையென்றவாறு.

ஒன்றாதென்னுந் துவ்விகுதி விகாரத்தாற்றொக்கது. பின்வந்த
நசித்தென்பது செயவெனெச்சத்திரிபு. யாதொன்று யாதொன்றன்
பொருட்டேயாய்த் தனக்கெனச் சுதந்திரமின்றிநிற்கும் அஃததற்கு
விசேடமென்பதறிக. அவையுடைமை யாளாநாமங்கு" என வோது
தலி னெனைப் பசுபாசங்கள் முதல்வனுக்குப் பொதுவகையாற்சேட
மாயினு மிதுபோலச் சிறப்புவகையாற் சேடமாத லின்மையினிதனை
வேறெடுத்தோதினார். முத்திநிலைகூறி முடிந்தமையி னிறுதிக்கட் சப்
பின்றுமென விதுவிருத்தியுங் கூறினார்.

வெண்பா.

பொன்வாளன்றன்கொண்மூவிற் புக்கொடுங்கிப்போயகலத்
தன்வாளேயெங்குமாந் தன்மைபோல்-முன்வாளா
மலத்தின்மறைந்துள்ள மற்றதனையுன்னு ...
மலத்திரிந்துச்செல்லும் வரத்து... ... ... (௯)

பொன்-வரத்து-எ-து-உ-ம்-எ-னின். நாலாஞ்சூத்திர முதலிய
சூத்திரங் கூறிப்போந்த கேவலசகலசுத்தமென்னு மூன்றவத்தை
களினு மான்மாத்தன் னியல்பிற்குக் கேடின்றியே நிற்குமென்ப துவ
மையின்கட்டுக்காட்டி. மேலதனை வலியுறுத்துகின்றது.

(இ-ள்) பொன்வாணுன் கொண்மூவிற்புக்கு - எ-து- ஞாயிறு காலைப்போதின் மூகிற்படலத்துண்மறைந்து-ஒடுங்கி-எ-து-அம்முகிற் படல மொருபுடைநீங்கியவழித் தன்னொளி யேகதேசமா யொடுங்கித் தோன்றி-போயகலவெங்குந் தன்வாளேயாந் தன்மைபோல - எ-து- அம்முகிற்படலம் பெருங்காற்று னடியுண்டு முழுவதும்விட்டொழிந்த வழியெங்கணுந் தன்னொளியேயாய்த்தோன்றும் பெற்றிபோல உள்ளுன்வாள்மலத்துண்மறைந்து-எ-து - ஆன்மாவினறிவு அநாதியே மலத்துண்மறைப்புண்டு கேவலப்பட்டு - மற்றுலகையுண்ணும்- எ-து-பின்பு கருவிகளோடுகூடி யேகதேசமா யறிவுவிளங்கி யைம்புலன்களை விடயிக்கும்- மலத்திரித்துவாத்துச்செல்லும் - எ-து-பின்பம் மலத்தை முதல்வனருளாற் பற்றறக்களைந்து வியாபகமாயறிவுவிளங்கி யவனது சீபாதத்தையணைந்து சுத்தப்படுமென்றவாறு.

தன்மையென்றூர் கொண்மூவிற்புக்கழியுங் கேடின்மையின்,ஏகாரந்தேற்றத்தின் கண்வந்தது. பின்வந்தவாள் ஆகுபெயர். வினையாற்றில்கண்வந்த மற்றென்னுமிடைச்சொல் மலத்திரித்தென்பதனோடியைந்துசாரியை புள்வழிக்கண்ணுருபு விரியாதவிலே சாம்கொள்க. உவமைவினைகள் பொருளினுஞ் சென்றியைந்தன. அறிவுமறைந்து மொடுங்கியுமறைப்புநீங்கி யெங்குமாய்நிகழ்தன் மாத்திரைக்கேபொன்வாணுவமையென்பார் உலகையுண்ணும் வரத்துஞ் செல்லுமென வேற்றுமையுமுடன்கூறினர். மலநசித்தலாவது தனதுமறைத்தற் சத்திமடங்கிக் கிழ்ப்படுதன்மாத்திரையே பிறிதன்றென்பதூஉம் உவமையாற்பெறுதும். பதினொராஞ்சூத்திர முடிந்தது.

---

## பன்னிரண்டாஞ்சூத்திரம்.

செம்மலர் நோன்றாள்சேரலொட்டா ... ...
வம்மலங்கழீஇ யன்பரொடுமரீஇ ... ...
மாலறநேயமலிந்தவர்வேடமு ... ...
மாலயந்தானுமரனெனத்தொழுமே. ...

எ-து எ-னின். அசிந்திதனாய் நின்றபதியைச் சிந்திதனாய்க்கண்டு வழிபடுமாறுணர்த்துத னுதலிற்று.

எ-து-க-ரை-எ-னின், சூத்திரக்கருத்துணர்த்துத னுதலிற்று.

(இ-ள்.) அயராவன்பினரன்கழல் சென்றமுத்தர்க்குச் சீவன் முத்திநிலைக்கண்ணவ் வறிவிச்சைசெயல்க ளோரோவழிப் புறத்துச் செல்லுங்கால், அவைசெல்லுமிடமிவையென்பதுணர்த்து முகத்தான் வாக்குமனாதீதமாய்ப் பத்தியினான்மறவாதேத்த நின்றமுதல்வனை வாக்குமனங்களுக்குக் கோசரமாம்படி தெளியக்கண்டு வழிபடுமாறுணர்த்துக விப்பன்னிரண்டாஞ் சூத்திரத்தின் கருத்தென்றவாறு.

சூத்திரவினைபபு மிவரிதுவிளங்கும்.

இச்சூத்திரத்தின் பிண்டப்பொழிப்பு. அயராவன் பினரன் கழலணைந்த சீவன்முத்தனவான் செம்மலர்போல விரிந்துவிளங்கிய முதல்வனது நோன்றாளை யணையவொட்டாதயர்த்தலைச் செய்விக்குமவ் வியல்பினையுடைய மும்மலவழுக்கை ஞானநீராற்கழுவி யங்ஙனமயராவன்புசெய்யு மெய்ஞ்ஞானிகளோடு கலந்துகூடிமலமயக்கநீங்குதலானன் புமிக்குடையவவாது திருவேடத்தையுஞ் சிவாலயத்தையு முதல்வனெனவேகண்டு வழிபட்டுவாழு மென்றவாறு.

எழுவாய் மேலைச்சூத்திரத்தினின்றும் வருவிக்கப்பட்டது. சீவன்முத்தனென்பது ஏற்புழிக்கோடலாற்பெறுதும். நோன்றாள் வினைத்தொகை. நோன்றல்-பொறுத்தல். "எடுத்துச்சுமப்பானை" என்றார்புடைநூலாசிரியரும். கழீஇயென்றது-குறிப்புருவகம், மாலறநேயமலிந்தவரொன்றது அம்மலக்கழீஇ யன்பரொடுமரீஇயினரென்னும் பொருட்டு சுட்டுப்பெயர் மாத்திரையாய் நின்றது. நேயமலிதல்கூறவே வழிபாடும்பெறப்படும். தான்-அசை. அம்மலங்கழீஇயென்றதனால் அறிவுவியாபிக்குமிடமும், அன்பரொடுமரீஇயென்றதனா லிச்சைவியாபிக்குமிடமும், தொழுமென்றதனாற் செயல் வியாபிக்குமிடமும், பெறப்பட்டன. படவே. சீவன்முத்தர்க் கறிவிச்சைசெயல்கள் ஏனைவிடயங்களிற் செல்லாவென்பதூஉம் பெறப்பட்டது. இம்மூன்றும் பிரிப்பின்றி யோரிடத்தொருங்கு நிகழ்வனவாகலின் விடயவேற்றுமை யன்மையுமுணர்க. தொழுகவென்னது - தொழுமென்றமையி னிஃது

ணைந்தோரது தன்மையென்பது பெற்றாம். அற்றாகலினன்றே, இத னைச்சாதகவோத்தின்வை யாதிண்டுவைத்தாரென்பது. இனித்தொழு மென்றதனை யிரட்டுறமொழிந்துகொண்டு விகுதிப்பொருள்பட முன் னிலையேவலாக்கியு முரைத்துக்கொள்க. என்னை; செல்வப்பெருக்க முடையார்க் குணவாகிய வான்பாலுடம்புநோயின்றி வளரச்செய்யு மருந்துமாதல்போல, இவ்வழிபாடு மலவாசனை சிறிதுந்தாக்குதலின் றிச் சிவானந்தமேன்மேல் வளரச்செய்யுஞ் சாதகமாதலு முடைமை யின், கண்ணழித்துரைபற்றி விதியாகவைத்துரைத்தலு மொன்று. இத னுள், செம்மலர்நோன்றாள் சேரலொட்டா வம்மலங்கழீஇ" என்ற தோரதிகரணம், "அன்பரொடுமரீஇ" என்றதோரதிகரணம், "மாலற நேயமலிந்தவர்வேடமு மாலயந்தானுமரனெனத்தொழுமே" என் றதோரதிகரணம், ஆகமூன்றதிகரணத்த திச்சூத்திரமென்றுணர்க.

---

## முதலதிகரணம்.

---

ஈண்டர்ணவமாயை காமியமென்னுமலங்களைக் களைகவென்றது- எ-து-மே-ள்-எ-னின், சீவன்முத்தர்க்கொருதலையான் முன்னர்ச்செய் யக்கடவதிதுவெனச்சூத்திரத்தின்முதற்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடனுதலிற்று.

(இ-ள்.) வெ-டை.

கன்மமலமேதன்மூலத்தைநோக்கிக காமியமெனவும்படும், ஆகா மியமெனப்படுமோதி, ஆகாமியங்காமிய மெனத்தலைக்குறையென்று ரைப்பாருமுளர்.

அவைதாம் ஞானத்தையுணர்ந்தாதஞ் ஞானத்தையுணர்த்துமா கலான்- எ-து-ஏது-எ-னின், மலமாயைதன்னொடு வல்வினையின்றே யெனப்பாசநீக்கமேலே பெறப்பட்டமையின், மெய்யுணர்ந்துநிட் டைகூடிய பின்னவை களையக்கிடத்தல், யாங்ஙனமென்பாரைநோக்கி, சூத்திரத்துடம்பொடு புணர்த்தோதியபொருளைத்தெரித்துணர்த்திமே ற்கோளைச்சாதித்த னுதலிற்று.

(இ-ள்.) அம்மலங்களென்று மெய்யுணர்ந்து நிட்டைகூடினோர் மாட்டுமெய்யாகாதுமோராற்றா னுழைந்துதம் மெய்யுணர்வைக்கீழ்ப்படுத்துப் பிறவிக்குவித்தாகியபண்டை விபரீதவுணர்வை மேற்படுத்துவனவாமாகலானஃதவர்க்காகாமையி னிவ்வாணவமாயை காமியமென்னுமலங்களைக் களைகவென மேற்கொண்டதென்றவாறு.

உணர்த்துதல்-உணர்வித்தேதுவாதல் - கண்டஞ்ஞானமென்றது விபரீதவுணர்வை.

வெண்பா.

புண்ணியபாவம்பொருந்துமிக்காமியமு ... ... *
மண்முதன்மாயைகாண்மாயையுங் - கண்ணிய ... *
வஞ்ஞானக்காட்டுமிவ்வாணவமுமிம்மூன்று ... *
மெய்ஞ்ஞானிக்காகாவிவை. ... ... ... ... (க)

புண்ணிய-விதி-எ-து-உ-ம்-எ-னின், அவையஞ்ஞானத்திற்கேதுவாய்வந்து நுழையுமாறும், அஃதவர்க்காகாமையுந் தெரித்துணர்த்த வேதுவைவலியுறுத்துத லுதலிற்று.

(இ-ள்.) புண்ணியபாவம் பொருந்துமிக்காமியமும்-எ-து-புண்ணியபாவப்பயனும் புண்ணியபாவ காரணமாயும பொருந்துகின்ற விக்கன்மமலமும் - மண்முதல் மாயைகாண் மாயையும்-எ-து-நிலமுதல்மோகினியீறாகக்காணப்படுகின்ற விம்மாயாமலமும்-கண்ணியவஞ்ஞானக்காட்டி மிவ்வாணவமும்-எ-து- சுட்டியறிவாகிய விபரீதவுணர்வைப்பயக்கு மிவ்வாணவமலமும் - இம்மூன்று மெய்ஞ்ஞானிக்காகாவிவை-எ-து- இம்மலங்கண் மூன்றுமெய்யுணர்வுடையவனுக்காகாமையானவற்றை விடுகதொழிவாயாக வென்றவாறு.

இல்லாமலங்களும்பற்றறத்துடைத்து மெய்யுணர்ந்து நிட்டைகூடினோர்க்குடம்புநிற்குமளவும் பிராரத்தவினை யவ்வுடம்பைப் பற்றிநிற்றலானஃதவர்க் கொரோவழிவாசனை யைத்தானிக்குழி, இக்குளிவாய்க்குங்கலம்போலவந்து தாக்கும், அவ்வழிப் பிறர்செய்யா தருவிப்பதன்முகவினைது சார்வாகவிருப்பு வெறுப்புக்களுளவாம், அவையுளவாகவே பரமேபார்த்திருப்பார்க்கு நிலமுதலிய வேகதேசப்பொருள் காட்சிப்படும்; படவே யவற்றைச்சுட்டி யறிவதாகிய விபரீதவுணர்வு

மேற்பட்டு மெய்யுணர்வைக் கீழ்ப்படுத்துப் பிறவிக்குவித்தாம். இவ் வாறிம்மூன்று மறிவற்றம்பார்த்திம்முறையானேவந்து தலைப்படுமெண க்காட்டிக்கூறுவார் கன்மமாயையாணவ மென்றிம்முறையின் வைத்த வ்வக்காரிய நிகழ்ச்சிகளை யெடுத்தோதிச் சுட்டிக்கூறினார். புண்ணிய பாவமென்றதுபசாரம். முன்வந்தமாயை முப்பத்தோராமென்னு மு றைமைக்கணின்ற தத்துவத்தை யுணர்ததிவிடாத வாகுபெயராய்த் தன்னை யிருக்கவுடையவேனைத் தத்துவங்களையுந் தழீஇயிற்று. காண மாயைசெயப்படு பொருள்களோடு முடிந்தவினைத்தொகை. இவைசிவ போகப் பெருவாழ்வை யிழப்பித்தலின்மெய்ஞ்ஞானிக் காகாவாயின. மேன்மேன் முறுகுவனவாய விவற்றைத்தோன்றும் பொழுதே து டையாக்கால் “ களையுநர்கைகொல்லுங் காழ்த்தவிடத்து” என்னு முறைமைத் தாய்முடியுமென்பதுபற்றி விடுமெனவீண்டும் வலியுறுத் தப்பட்டது. விடுதலாவது அவையம்முறையானிகழ்ந்தவழி யிவ்வஞ் ஞான மேகதேசக்காட்சி யாலுயதெனவும், அக்காட்சி வெறுப்பு விரு ப்புக்களதுதோற்றத்தாலுயதெனவும், அத்தோற்றமும் பிராரத்தமும் வினைநுகர்ச்சிக்கட் சென்றதற்போதத்தாலாயதெனவும், அறிந்தங்ங னஞ் செல்வுதாகியதற் போதமுளையாதவாறு பரிகரித்துச் சிவஞான த்து ளடங்கிச் சுவாநுபவஞ்சுவாநுபூதியாம்படி ஞானநிலையினுறை த்துநிற்றல். மாயைகன்மங்க ளஞ்ஞானங்காட்டுதல் ஆணவமலசத்தி சார்வாலுய செயற்கையென்ப துணர்த்துதற்கு மூன்றற்கும் பொது வாகவேது வுட்கூறிப்போந்தவதனை யீண்டாணவமாத்திரைக்கே சிறந் தெடுத்தோதினார்.

---

## இரண்டாமதிகரணம்.

---

இனிச் சிவபத்தர்களோடிணங்குகவென்றது - எ - து - மே-ள்- எ-னின், அம்மலங்கழீஇயினார்க் கதனைநிலைபெறுத்துவதாய், அதன்பின் னர்ச்செய்யக்கடவதிதுவென்னுஞ் சூத்திரத்தி னிரண்டாங்கூற்றைக் கண்ணழித்துரைத்து, மேற்கோடனுதலிற்று.

(இ-ள்.) வெ-ளிடை.

ஈண்டுச்சிவபத்தர் என்றது பத்தியினன்மறவாதேத்தி முதல்வனது சீபாதத்தையடைந்த சீவன்முத்தராமென்றவாறு. இணங்குதல்-நட்புச்செய்தல்-சிவபத்தர்களோ டிணங்குகவெனவே யெதிர்மறைமுகத்தா னேனையோரோ டிணங்கற்கவென்பதூஉம் பெறப்பட்டது.

அல்லதாரஞ்ஞானத்தையுணர்த்துவாராகலான் - எ - து - ஏது- எ-னின், உறவும்பகையு மொழித்தமெய்ஞ்ஞானிகள் சிலர்மாட்டுநட்புஞ் சிலர்மாட்டுநட்பின்மையு முடையராதல் சால்பன்றென்பாரை நோக்கி, மேற்கோளைச் சாதித்தனுதலிற்று.

(இ-ள்) வெ-டை.

அல்லாதாரஞ்ஞானத்தையுணர்த்துமாறு, "தெய்வமென்பதோர் சித்தமுண்டாகி முனிவிலாததோர் பொருளதுகருதலு, மாறுகோடி மாயாசத்திகள், வேறுவேறுதம்மாயைகடொடங்கின, வாத்தமானாரய லவர்கூடி, நாத்திகம்பேசி நாத்தழும்பேறினர். சுற்றமென்னுந் தொல்பசுக்குழாங்கள், பற்றியழைத்துப் பதறினர்பெருகவும், விரதமே பரமாகவேதியருஞ், சரதமாகவே சாத்திரங்காட்டினர், சமயவாதிகடத் தமதங்களே, யமைவதாகவரற்றிமலைந்தனர்" என்ற[illegible]த்துத் திருவாக்குக்களானறிக. மும்மலங்க ளஞ்ஞானத்தையுணர்த்துதலில க்குவாய்த்துழி யேதுவாதல்மாத்திரையே, சிவபத்தரல்லாதார் இலக்குவாயாத வழியும்வாய்க்குமாறுசெய்துகொண்டு பலவகையுபாயங்க ளானுந் தம்மோடொப்ப விபரீதவுணர்வைச் செலுத்தியேவிடுவராகலான், அம்மலங்களினுங் கொடியராகிய விவரை யவற்றினுமஞ்சிவிட் டொழிதலே யறிவுடைமைக்குச் சால்பென்பதாம்.

வெண்பா.

மறப்பித்துத்தம்மைமலங்களில்வீழ்க்குஞ் ... *
சிறப்பிலார்தங்திறத்துச்சேர்வை - யறப்பித்துப் ... *
பத்தரினத்தாய்ப்பாருணர்வினலுணரு ... ... *
மெய்த்தவரைமேவாவினை. .. ... ... ... (௨)

மறப்பித்து-வினை-எ - து - உ-ம்-எ-னின், அஞ்ஞானத்தையுணர்த்துமவரோ டிணங்காமைமாத்திரையே யமையுஞ் சிவபத்தர்களோ

டிணங்குக லெற்றுக்கென்பாரைநோக்கி, அதனை வலியுறுத்துதனுத லிற்று.

(இ-ள்.) மறப்பித்துத்தம்மை மலங்களில்வீழ்க்குஞ் சிறப்பிலார் தந்திறத்துச் சேர்வையற-எ-து-முதல்வன் காட்டியுங்கண்டு முபகரித்துநிற்கு மத்துவிதநிலையை மறவாது கடைப்பிடிக்குந் தமதுஞானக் கண்ணை யிழப்பித்துத் தீயநெறிக்கட்சென்று மலங்களாகிய பிறவிக் குழியில்வீழ்வித்துத் துயருறுத்துவாராகிய அன்பில்லார் கூற்றிலே தொன்றுதொட்டுப்பயின்றுவந்த சேர்ச்சியறும்படி-பத்தரினத்தாய்ப் பரனுணர்வினாலுணரு மெய்த்தவரை-எ-து-அம்மறவியைமாற்றி ஞானக்கண்ணையுதவிப் பிறவிக்குழியினின்றுமெடுத்து நன்னெறிக்கட்செலுத்தி வாழ்விக்குஞ் சிவபத்தர்கூற்றிலே பேரன்புடையரா யன்புசார்பாகவிளங்குஞ் சிவஞானக்கண்ணா லந்நிலை கடைப்பிடித்து ணரப்பெற்ற மெய்த்தவராயினாரை-மேவர்வினை - எ-து- எல்லாவனத்தங்கட்கு மூலமாய்வந்து சிறப்பில்லார் தந்திறத்துச்சேர்வையைப் பயப்பிக்கும் பிராரத்தவினைகள் வாதியாவென்றவாறு.

மறப்பித்துத் தம்மை மலங்களில்வீழ்க்குஞ் சிறப்பில்லாரென மேற்சொல்லியபொருளையே யநுவதித்து விரித்தோதினர் அதனை திர்மறைமுகத்தாற் சிவபத்தரது பெருந்தகைமை யுணர்ந்துகோடற் பயனோக்கி. மலம்-ஆகுபெயர். வீழ்க்குமென்ற துருவகங் குறித்து நிற்றலி னவ்வாறுரைக்கப்பட்டது. எல்லாவற்றினு மன்புசிறந்தமையி னதனைச் சிறப்பென்றார். பித்துப்போறலி னன்பு பித்தெனப்பட்டது. ஏனைத்தவங்களெல்லா மெய்யாதலின்றிமலநடையாய்ப்போதலிற் பரனுணர்வினா லுணருந்தவமொன்றே மெய்த்தவமெனப்பட்டது. வினைபால் பகாவஃறிணைப்பெயர். சிவபத்தர்மாட் டன்புடையராய், மனஞ் [illegible] செய்கைகளா னவர்வழிநிற்பார்க் குலகியலுணர்வுமாறிச் சிவாநுபூ [illegible] ணர்வே மேம்பட்டுநிகழும்; அதுநிகழவே, பௌதிகவுடம்பை [illegible]ப்பற்றிவரும் பிராரத்தவினைக ளவர்க்குநுகர்ச்சியாதல் செல்லா [illegible] வாதிக்கமாட்டா; மாட்டாதொழியவே, அவை பற்றுக்கோடாய்நிகழுஞ் சிறப்பில்லார் தந்திறத்துச்சேர்வை பற்றறக்கெடுமென்பார் "சேர்வையறப்பித்துப் பத்தரினத்தாய்ப் பரனுணர்வினாலுணரு மெய்த்தவரைமேவாவினை" என்றார். எனவே, வீட்டுணர்வை நிலைபெறுத்துஞ் சிவபத்தர்களோ டிணங்கினாலன்றி, வினைபற்றுக்கோடா

கத் தொன்றுதொட்டுப் பயின்றுவந்த சிறப்பில்லாரிணக்கமருமை யின், அவ்விணக்கமொருதலை யான்வேண்டப்படுமென வலியுறுத்திய வாறாயிற்று.

---

## மூன்றாமதிகரணம்.

---

இனிப் பத்தாது திருவேடத்தையுஞ் சிவாலயத்தையும் பரமே ச்சுரனெனக்கண்டு வழிபடுகவென்றது-எ-து-மே-ள்-எ-னின், அன்ப ரொடுமரீ இயினர்க்கம்மருவு தனிலைபெறுத்துவதாய் அதன்பின்னர்ச் செய்யக்கடவதிதுவென்னுஞ் சூத்திரத்தின் மூன்றாங்கூற்றைக் கண் ணழித்துரைத்து, மேற்கோட்னுதலிற்று.

(இ-ள்.) வெ-டை.

சாண்டல் - ஐயுறவின்றித்தெளிதல். காமக்கிழத்தியர்வடிவிற் காணப்படு மாடைசாந்தணிகலன் முதலாயின காமுகரை வசிகரித் தின்பஞ்செய்யுமாறுபோல, மெய்யுணர்வுடையாரைக் காட்சிமாத்தி ரையின் வசிகரித்தின்பஞ்செய்தல்பற்றித் திருவேடத்தையுஞ் சிவா லயத்தையுமென் றுபசரித்தார். அது. "சேலுங்கயலுந்திளைக்குங்க ண்ணா ரிளங்கொங்கையிற் செங்குங்குமம், போலும்பொடியணிமார் பிலங்குமென்று புண்ணியர்போற்றிசைப்ப" என்னுந்திருவாக்குக் களானுமறிக. திருவேடத்தினியல்பு "தூயவெண்ணீறுதுதைந்தபொ ன்மேனியுந்தாழ்வடமு, நாயகன்சேவடிதை வருஞ்சிந்தையு நைந்து ருகிப், பாய்வதுபோலன்பி னீர்பொழிகண்ணும் பதிகச்செஞ்சொன், மேயசெவ்வாயுமுடையார் புகுந்தனர்வீதியுள்ளே" "சிந்தையிடைய றாவன்புந் திருமேனிதனிலசையுங், கந்தைமிசையாங்கருத்துங்கையு ழைவாரப்படையும், வந்திழிகண்ணீர்மழையும் வடிவுபொலிதிருநீறு, மந்தமிலாத்திருவேடத்தரசுமெதிர்வந்தணைய" "கண்டகவுணியக்கன் றுங் கருத்திற்பரவுமெய்க்காதற், றொண்டர்திருவேடநேரே தோன்றி யதென்றுதொழுதே" என்றெடுத்த திருவாக்குக்களானறிக.

அவன் மற்றிவ்விடங்களிற் பிரகாசமாய்நின்றே யல்லாதவிடத்த ப்பிரகாசமாய் நிற்றலான்-எ-து-ஏது-எ-னின், மெய்யுணர்வுடையார்க் குப்பகுப்பின்றி யெங்கணும் பரமேச்சுரனெனக்காண்டலேபொருத்த முடைமையானும், நின்றதிருத்தாண்டக முதலியவற்று ளவ்வாறோது தலானும், திருவுருத்திரத்துட் பகுப்பின்றி யுயிர்ப்பொருள் உயிரில் பொருள்எல்லாவற்றையுந் தனித்தனியெடுத்தோதி வழிபாடு கூறுத லானும், ஈண்டிவற்றைமாத்திரையே விதந்துகொண் டோதிய தென் னையென்பாரை நோக்கி, மேற்கோளைச்சாதித்த னுதலிற்று.

(இ-ள்) அம்முதல்வனெங்கணும் வியாபகமாய்நிற்பினு மிவ்விரண் டிடத்து மாத்திரையேதயிரினெய்போல விளங்கிநிலைபெற்று, அல் லுழியெல்லாம் பாலினெய்போல வெளிப்படாது நிற்றலான் இனிப்ப த்தாது திருவேடத்தையுஞ் சிவாலயத்தையும் பரமேச்சுரனெனக்க ண்டு வழிபடுகவென மேற்கொண்டதென்றவாறு.

மற்று-உரையசை. எப்பொருட்கண்ணு மிறைவன்கலந்துளனெ ன்பது தெளிந்துகோடற்பொருட்டுத் திருவுருத்திரத்தினவ்வா றோத ப்பட்டதெனக்கொள்க.

வெண்பா.

தன்னுணரவேண்டித்தனதுருவைத்தான்கொடுத்துத்
தன்னுணரத்தன்னுளிருத்தலாற்-றன்னுணரு ... ※
நேசத்தர்தம்பாணிகழுந்ததிநெய்போற் ... ...※
பாசத்தார்க்கின்றாம்பதி.... ... ... ... ...(கூ)

தன்னுணர - பதி-எ-து-உ-ம்-எ-னின், திருவேடத்தினிறைவன் பிரகாசமாய் நிற்குமாறியாங்ஙன மென்பாரை நோக்கி, அதனைவலியு றுத்துதனுதலிற்று.

(இ-ள்) பதி-எ-து-அசிந்திதனாய்நின்ற பரம்பொருள்-தன்னுணர வேண்டி-எ-து-உலகத்துள்ளார் தன்னையறிதற்பொருட்டு - தனதுரு வைத்தான்கொடுத்து-எ-து-திருநீறுகண்டிகை முதலியதிருவேடமாகி யதனது திருவடிவத்தைத்தன்னன்பர்க்குக் கொடுத்தலானும்- தன்னு

ணர-எ-து- அவ்வன்பர் தன்னைச்சிவோகம் பாவனையாலறியச்செய்யு லானும் - தன்னுளிருத்தலால்-எ-து- அங்ஙனமொருகுறியின் கணின் றுணருமவரைத்தனது வியாபகத்துள்ளாக விருத்தலானும் - தன்னு ணருநேசததர் தம்பாலிகழுந்ததிநெய்போல் - எ-து - குறியுமிறந்து நின்று தன்னையுள்ளவாறுணரு மவர்மாட்டுத் தயிரின்கண்ணதாகிய நெய்போலவிளங்கித்தோன்றும் - பாசத்தார்க்கின்றும் - எ-து - அவ் வியல்பில்லாதபாசக்கட்டுடையார் மாட்டுப்பாலின் கண்ணதாகிய நெ ய்போல் விளங்காதுநிற்குமென்றவாறு.

செய்தவென்பது சொல்லெச்சம். இருத்தல் அல்லீற்றுப் பிற வினைத்தொழிற்பெயர், கொடுத்துச்செய்திருக்கலா னிசுழுமென வி யையும். தன்னுணருநேசத்தரெனப் பெயரடையானு மோரோதுக் கூறப்பட்டது. தன்னையென்னுமிரண்டனுருபு விகாரத்தாற்றொக்கது. உணர்தலை மூவிடத்தோதுதலி னிஃதங்ஙனம்வேறுவே றுரைக்கப்பட் டது. பாசத்தார்க்கென்ப துருபுமயக்கம். இன்மையீண்டு விளங்கா மைகுறித்து நின்றது.

வெண்பா.

கண்டகொருமந்திரத்தாற்காட்டத்திலங்கிவே ... *
றுண்டலபோனின்றங்குளதாமாற்-கண்டவுருத் ...*
தானதுவாயன்றானன்றனதுவாய்த்தோன்றுந்
தானதுவாய்க்காணுந்தவர்க்கு. ... ... ... (ச)

கண்ட - தவர்க்கு-எ-து-உ-ம்-எ-னின், சங்கமவடிவிற்குக் கூறி ப்போந்த வியல்பில்லாததாவரவடிவின் மந்திரசாந் நித்தியமுள் வழி யன்றிப் பிரகாசமாய் நிற்றல் பெறப்படா தென்யாரை நோக்கி, சிவாலயத்தினிடத்து மிறைவன் பிரகாசமாய் நிற்றலை வலியுறுத்து தனுதலிற்று.

(இ-ள்) காட்டத்திலங்கிவேறுண்டலபோல் - எ- து- விறகிற்றீக் கடைகோலாற் கடைந்துழிவேறாய்விளங்கும் அல்லுழிவிளங்குவத ன்றானாற்போல - கண்டவுருத்தா னதுவாயன்றானன் - எ-து-உயிர்கட் குப்புத்திமுத்தியளித்தற்பொருட்டுக் காணப்பட்டதாவரவடிவின்கட்க

லப்பினலதுவேகாணுபது வன்றிவேறுபொருளுமா மியல்புடையமு தல்வன்-கண்டதொருமந்திரத்தானின் றங்குளதாமால்-எ-து-அதுவே தானுகக்காணுதார்க்குத் தம்மாலறியப்பட்ட தொருமந்திரசாந்நித்திய மில்வழியவ்வடிவின்கண் விளங்காதுநின்று அஃதுள்வழி விளங்கித் தோன்றும் பொருளாம்- அதுதானுய்க்காணுந்தவர்க்கதுதானுய்த்தோ ன்றுமோ - எ-து- அவ்வாறன்றியவ்வடிவேயவனுகக் காணப்பெறு மு ண்மைத் தவமுடையார்க்கப்பெற்றியனேயாய் விளங்கித்தோன்றுன் கொல்லோவென்றவாறு.

காணுதார்க்கென்பதுசொல்லெச்சம்.மந்திரத்தாலென்னும்பொரு ளடைக்கேற்பவுவமையினும் வருவித்துரைக்கப்பட்டது - உண்டாத் லீண்டுவிளங்குதன்மேற்று-ஆல் அசை - ஆனுனென்பதுபெயர்-ஓகார மெதிர்மறைப்பொருண்மைபற்றி யுளதெனவுமன்றெனவுங் கூறினர்- தானதுவாயன்றுனென்னும் பெயரடையானவரவர் பாவனைகேற் பவிளங்குதற்கேதுக்கூறியது- தானதுவாயன்றுனுதல்சங்கமவடிவிற் குமொக்குமேனுந்தாவரவடிவின்கண்ணிகழுங்கடாவை யிதனுனென்று நீக்குதலாகாமையி னீண்டுக்கூறினர். இஃதிரிடத்துமொக்குமென்ப துமுன்னர்ப்பெறப்படும்.

---

புறனடை.

---

இனியிவ்விடங்களில் வழிபடுகவென்றது-எ- து-மே-ள்-எ-னின் மேற்கூறிப்போந்தமூன்றுஞ் சீவன்முத்தர்க்குத் தானேயுளவாமிலக் கணமாகலின், அனுவாதமாகவைத் துணர்த்தற்பாலனவாகிய விவற் றை, களைக, இணங்குக, வழிபடுக, என விதியாகவைத்தோதிய தெற் றுக்கென்பாரைநோக்கி, அதனை யவற்றதொழிபாகக்கொண்டு சாதித் தற்கு மேற்கோடனுதலிற்று.

(இ-ள்) வெ-டை.

இவ்விடங்களென்றது மேற்கூறியவிரண்டனையும். வழிபடுகவெ ன்னு மெடுத்தலோசையா னநுவதித்துணர்த்துவதே யமையுமென்பா

னைநோக்கி, விதித்தலை வலியுறுத்தவாறு. இனம்பற்றிக் கலைதத்துவங் குதல்கட்கு மிஃதொக்கும்.

நரம்புநாடி முதலாயவற்றைத் தானதுவாய்வரும் புருடனவை யாகாவா றப்புருடனுமாகலான் - எ - து-ஏது-எ-னின், எய்தியதனை விதித்தல் பயனுடைத்தன்றுபோலு மென்பாரைநோக்கி, மேற்கோளை ச்சாதித்தனுதலிற்று.

(இ - ள்) நரம்புமுதலிய தாதுக்களின்கண் வேற்றுமையின்றி யதுவது தானாய்வருகின்றவுயிர் நாடியோவென்போ நரம்புசீக்கோழை யோ' என்றிங்ஙனம் பைம்மறியாப்பார்ப்பார்க் கந்நரம்புநாடி முதலிய வையாகாதவற்றின் வேறுமாயினாற்போல, உயிர்க்குயிராகிய வம்முத ல்வனு முயிர்ப்பொருளுயிரில் பொருளெல்லாவற்றினுங் கலப்பான துவது தானாயும் பொருண்மையாலல்லனாயும் நிற்பனாகலா னதுவது தானாய்க் காணுங்காட்சிபற்றி யெய்தியவழிபாடு அல்லனாய்நிற்றலைக் காணுங்காலெய்தாதாகலின் அவ்வழிபு மெய்துவிக்கவேண்டுதலா னி னி யிவ்விடங்களின் வழிபடுகவென விதித்தோதியதென்றவாறு.

அவையாகாவா றப்புருடனுமெனவே, அவ்விடத்தெய்து வித்த லொருதலையான்வேண்டுமென்பது தாற்பரியமாயிற்று. மேற்கோளில விடங்களையென்னுஇவ்விடங்களினென வேற்றுமைப்படுத்தோதியதூஉ மிஃதுணர்ந்துகோடற்பொருட்டு. எய்தாததெய்துவிப்பதூஉம், எய் தியதிகந்துபடாமைக் காப்பதூஉம், எய்தியதனை யொருமருங்குமறுப்பதூஉம்என்னும் வாதமூன்றனுளிஃதெய்திய திகந்துபடாமைக் காத்ததென்பது போந்தவாறுகாண்க. முதலானவற்றையென்பதுரு புமயக்கம்.

வெண்பா.

அதுவிதுவென்றதுவல்லான்கண்டார்க்... ... *
கதுவிதுவென்றதையுமல்லான்-பொதுவதனி ... *
லத்துவிதமாதலகண்டமுந்தைவமே... ... ... *
யத்துவிதியன்பிற்றெழு ... ... ... ... (௫)

அஃதொக்கும், அவ்வுச்சரிப்பு மிவ்வழிபாட்டை யின்றியமையாதெ ன்க. அற்றாகலினன்றே, ஆண்டஞ்செழுத்தாலெனவும், மண்ணுதன ளமெனவும் அகத்துவழிபாட்டை யுடன்கூறியதூஉமென்பது. வினை யாதென்னுந் துவ்விகுதிவிகாரத்தாற்றொக்கது. பின்வந்தஞானம்-ஆகு பெயர். ஆனதனாலென்பது-ஆனத்தாலெனமரீஇயிற்று.

வெண்பா.

தன்னையறிவித்துத் தான்றனைச்செய்தானைப் ... *
பின்னைமறத்தல் பிழையலது-முன்னவனே ... .. *
தானேதானச்செய்துந் தைவமென்றுந்தைவமே... *
மானேதொழுகை வலி. ... ... ... ... ...(எ)

தன்னை-வலி-எ- து - உ-ம்-எ-னின், அங்ஙனம் பயன்பற்றிவிதி க்கப்படும் வழிபாடுவேள்விமுதலியனபோலப் பயன்வேண்டாமையா னாதல், பின்னர்ச்செய்துபெறுதுமென்றாதல், ஒரோவழியொழியவும் படுங் கொல்லோவென்பாரைநோக்கி, அது செய்யாவழிப்படுங்குற்ற முஞ் செய்தல்கடமையாமாறு முணர்த்திவிதித்தலை வலியுறுத்துதனு தலிற்று.

(இ-ள்) தன்னையறிவித்துத் தான்றனைச்செய்தானைப் பின்னைமற த்தல் பிழையலது-எ-து- தன்னுண்மையை யறியமாட்டாது குருடா ய்க்கிடந்தவுயிர்க்குப் பலவாற்றானு மதனைத்தெரித்துணர்த்தி, எத்த னையுமெளிய வவ்வுயிரை யெத்தனையுமரியதானும் வண்ணஞ்செய்தளி த்த பெரியதோருதவியை யதன்பின்னர் மறக்குமாயின், அஃதிதற்கு முன்னறியாமன் மறந்தகுற்றம்போலத் தீர்திறனுடைய தொருகுற்ற மன்றாகலானும்.— முன்னவனே தானேதானச்செய்துந் தைவமென் றுந் தைவமேமானேதொழுகைவலி-எ-து-முதல்வ னங்ஙனந்தான்றா னேயாகச் செய்தாலுமிதுகாறுந் தனக்குச் சுதந்திரமின்றி முதல்வனு பகாரத்தை யின்றியமையாதா யடிமையாகிய வுயிரொக்காலத்து மவ் வாறடிமையே யாமாகலானும்; தான்றனைச்செய்தளித்த வப்பெரியோ னைவழிபடுதலே யவ்வுயிர்க்குவலியாவதென்றவாறு.

தமதுமுதற்றானே குருவாகலிற்றான்றனைச் செய்தானையென்றும், முன்னைமறந்தகுற்ற மறியா துதிகழ்ந்ததாகலிற் கழுவப்படும் இஃதது

போற்கழுவப்படுவதன்றென்பார் பின்னைமறத்தல் பிழையலதென்றுங் கூறினார். பின்னைமறத்தலென்பதனான் முன்னைமறத்தல் பெறப்பட்டது. "எந்நன்றிகொன்றார்க்கு முய்வுண்டாமுய்வில்லை, செய்ந்நன்றிகொன்றமகற்கு" என்னுங்கருத்துநோக்கிக் கூறியதூஉமாம். அலதுமெனப்பாடமோதி யிதுபிழையாதலன்றியுமென்றுரைப்பாருமுளர். ஏகாரம் முன்னையது அசைநிலை, பின்னையதுதேற்றம். செய்தாலென்பது செய்தெனத்திரிந்தது. உம்மைசிறப்பின்கண்வந்தது. தான்றானச்செய்தல் எதனையெதனைப்பற்றினு மதுவதுவாமுயிர்தன்னை யறிந்தவழியெண்குணங்களா னிறைந்தவண்ணமாகச்செய்தல். அங்ஙனஞ்செய்தவழியுமுயிர்தானுஞ் சிவானுபவமொன்றினுக்கே யுரித்தென்பார் சைவமென்றும் சைவமேயென்றார். சைவமென்னுஞ் சொல்லியல்புமேலேயுரைத்தாம். மானையென்னு மிரண்டனுருபுவிகாரத்தாற்றொக்கது. மானென்பது வடசொற்றிரிபு. சுட்டிவருவிக்க. வலிதருவதனை வலியென்றுபசரித்தார். இவ்வுதாரணங்கள்மூன்றானும வழிபாட்டிற்கும் இடத்துநிகழ்பொருண் மாத்திரையேயன்றி யிடவிசேடமும் பெறல்வேண்டும் எனவதனை வலியுறுத்துமுகத்தான்முறையே சிவலிங்கத்தையுஞ் சிவபத்தர்வேடத்தையுஞ் சிவதேசிகர்களையுமறிந்து வழிபடுமாறுகூறப்பட்டது.

வெண்பா.

சிவமென்னுமந்தரசிந்தைநேர்நோக்கப் ... . .*
பவமின்றாங்கண்வாசகத்திற்-சிவமுண்டா ... ... *
மொன்றுமிரண்டுமலத்தார்க்கிவ்வொண்குருவா ...*
வின்றிநான்மும்மைமலர்க்கு.... ... ... ...(அ)

சிவமென்னும் - மலர்க்கு - எ - று - உ-ம்-எ-னின், இங்ஙனஞ் சிவாகமத்துள் ஞானபாதப்பொருளெல்லாவற்றையும் பொதுவுண்மையென்றிருவகைப்படுத்துப் பிரமாணவியல் இலக்கணவியல்சாதகவியல்பயனியல் எனநான்கியலாகவைத்துப் போதிப்பதாகிய விச்சிவஞானபோதநூலைக் கோடற்குரிய வதிகாரிகளாவாரிவரென்ப துணர்த்துதனுதலிற்று.

(இ-ள்.) தான்றானச்செய்தானை யொருவாற்றாற் சிவனென்னுமியல்பினீங்கிச் சிவமென்றோசப்படும் வேதாந்தத்தெளிவாகிய சித்

தாடத்தையுடைய மாணவகனே ஒன்றுமிரண்டுமாயமலங்களையுடைய விஞ்ஞானகலர்க்கும் பிரளயாகலர்க்கும் முறையேயறிவின்கணின்றருட்பார்வையா னோக்குதலானுந் தேவகுருவாய் முன்னின்றுசெய்யுந்திருநோக்கம் பரிசம்வாக்கெனப்படுந் தீக்கையானும் பிறவிக்கேதுவாயபசுத்துவநீங்கிச் சிவத்துவம்விளங்குமாகலான், அவரின்வேறாகியமும்மலமுடையவர்க்கேயுரித்திவ்வுலகத்து அனுபவமுடைய தேசிகராற் போதிக்கப்படு மிச்சிவஞானபோதநூலென்றவாறு.

அந்தம்வேதாந்தம். அந்தசாந் சித்தாந்தமாக வினதனைப் பெற்றோரது பெருமைகூறுவார் சிவமென்னுமந்தரவென்றார். எனுமென்புழிப்படுசொற்றொக்குநின்றது. சிந்தை - அறிவு. கண்ணுருபுவிரித்துரைக்க. நேர்நோக்குதல் - முன்னமருட்பார் வையைமாற்றியருட்பார்வையானோக்குதல். நோக்க - நோக்குதலானென்க. கண்வாசகங்களைக்கூறவே யிணம்பற்றிப்பரிசமுமுடன் கொள்ளப்படும். பவம் ஆகுபெயர். இந்நூலனுபவமுடைய தேசிகனாலன்றி விளங்காதென்பார் ஒண்குருவாலென்றார். போதிக்கப்படுமென்பதவாய் நிலையான்வந்தது. இன்றிந்நூலென்பது இந்நூலென்னும்பொருட்டு. இக்காலத்துரைக்கப்பட்ட நூலெனினுமமையும். அது "தானுரைத்தானின்று" எனவருகின்ற வெண்பாவாற்கூறியவாற்றானுமறிக. மும்மையென்ற தீண்டெண்ணின்மேனின்றது. தெரிமாண்டமிழ் மும்மைத்தென்னம் பொருப்பனென்புழிப்போல.

வெண்பா.

எந்தைசனற்குமரனேத்தித்தொழவிவற்று ... ...
னந்தியுரைத்தருளுஞான நூல்-சிந்தைசெய்து ...
தானுரைத்தான்மெய்கண்டான்றாரணியோர்தாமுணர
வேதுதிருட்டாந்தத்தாலின்று ... ... ... ...

பன்னிரண்டாஞ்சூத்திரமுடிந்தது.

---

சிவஞானபோதச்சிற்றுரை
முற்றுப்பெற்றது.

---

சிறியவாடியிற்பெரியமால்வரைப்பொருள்செறிந்தாங் ...*
கறிவுநூல்களின்முடிபெலாமகத்தடக்கியதோர் ... ... *
நெறியினீடியலிகழ்சிவஞானபோதத்தைக் ... ... ...*
குறியதீந்தமிழாலுரைகுரவனைப்பணிவாம் ... ... *

நூலினையறிந்தார்போன்றுநுண்ணுணர்வுடையார்போன்று ... *
மாலினைத்தவிர்ந்தார்போன்றும்வழியறிந்தடைந்தார்போன்று... ...*
மேலெனத்தத்தங்கோளேவிதந்துரைக்கின்றார்நந்தி ... ... ... *
சாலவன்றருளுநூலின்றலைப்படாவுள்ளத்தாரே ... ... ... ...*

வெண்பா.

மூன்றுமலங்கெடுத்துமூலமாமப்பொருளுந் ... *
தோன்றவருளுந்தன்றொண்டர்க்கின்-சான்றமைந்தோர்
கைகண்டதன்றேகடன்ஞாலத்தெப்பொருட்கு... *
மெய்கண்டதேவன்விளைத்தாள் ... ... ... ...*

சிவஞானதேவனடியவமாறப்பணிவாம்.

கச்சியப்பதேவனடியுச்சியுளம்வைப்பாம்.

பொன்னம்பலம்நீடூழிவாழ்க.



